## சோளி புதிதா?

# இல்லை—லக்ஸினால் சலவை செய்தது!

நீங்கள் அணியும் அழகழகான சோளிகள்—பட்டோ, பருத்தியோ, மென்மையான ஸாட்டினே—வெகு நேர்த்தியான சலவையின்மூலம் பராமரிக்கப்படவேண்டியவை ஆம். அதுதான் லக்ஸ் பராமரிப்பு.

மென்மையான லக்ஸ் நுரை அழுக்குகளை அறவே அகற்றி விடுகிறது. எத்தனை தடவை சலவை செய்தாலும் உங்கள் சோளிகளை புதுமை மாறாமல் வைத்திருக்கிறது. நாசூக்கான ஆடைகளுக்கு லக்ஸ் உபயோகியுங்கள்!




**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம் அளித்துக் காப்பது லக்ஸ்**

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

L.X. 141-50 TM






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# ஹெர்குலிஸ் ஒரு ஸைக்கிள் மட்டுமல்ல...

## வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை

ஆபீஸோ, மார்க்கெட்டோ, பள்ளிக்கூடமோ...எதுவாகிலும் சரி வீட்டில் ஹெர்குலிஸ் இருக்கும் வரை எல்லாம் எட்டிப்பிடிக்கும் தூரம் தான். தந்தை இப்போதெல்லாம் சீக்கிரம் வீடு திரும்பிவிடுகிறார். தாய்க்கு வேண்டும் சாமான்களும் உடனே கிடைத்து விடுகின்றன. குடும்ப முழுவதிலுமே சந்தோஷம் நிலவுகிறது. ஹெர்குலிஸ் ஸைக்கிள் போல் வருஷக்கணக்கில் நீடித்து உழைக்கும் சாதனங்களை வாழ்க்கையில் காண்பது அரிது.

சுமார் 50 வருஷங்களாக உயர்தர ஸைக்கிள் தயாரிப்பில் அனுபவமிருந்தவர்களால், இப்பொழுது இந்த நுட்ப வேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் ஸைக்கிள் டி ஐ. ஸைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப் படுகிறது. உயர்தர அமைப்பும், பிரயாசையின்றி சுலபமாக ஓடும் தன்மையும் கொண்ட ஹெர்குலிஸ், சைக்கிள் களில் மிகச் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை.



உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த முதலீடு

**ஹெர்குலிஸ்**

உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்.

தயாரிப்போர்:
டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப்
இந்தியா லிமிடெட், மதராஸ்





TIC 313




மலர் 18
இதழ் 33

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விளம்பி ௵
பங்குனி ௴ 2


# மூன்றாவது திட்டம்-புதிய சிந்தனை

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இன்னும் முடிந்தபாடில்லை. அதற்குள் மூன்றாவது திட்டம் பற்றி நாட்டில் பலமான பேச்சுக்கள் அடிபட ஆரம்பித்து விட்டன.

இதில் வேடிக்கை என்னவென்றால், "இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பல கடுமையான சோதனைகள் ஏற்பட்டன" என்று சொல்லிக்கொண்டே, மீண்டும் அதே முறையில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கான யோசனைகள் புது தில்லியில் நடைபெறுகின்றன. அதாவது பட்டும் தெரியவில்லை இந்திய சர்க்காருக்கு என்பதே இதன் பொருள்.

மீண்டும் கனரகத் தொழிற்சாலைகள் ஏற்படுத்த வேண்டும் என்கிறார்கள் திட்டக் கமிஷனைச் சேர்ந்தவர்கள். உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்தவர்களோ, "அந்தத் தொழிற்சாலைகளெல்லாம் எங்கள் ராஜ்யத்திலேயே ஏற்படுத்த வேண்டும்" என்று இப்பொழுது பிடித்தே கிளர்ச்சி செய்ய ஆரம்பித்து விட்டார்கள்! தென்னாட்டவர்கள் இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு சும்மாதான் இருக்கிறார்கள்! பாரத நாட்டின் பரப்பளவையும் ஜனத்தொகையையும் கருத்தில் கொண்டு பார்த்தால் இந்த கனரகத் தொழிற்சாலைகளினால் மக்களுக்குச் சரியான வழியில் தொழில் செய்து வாழ்க்கை நடத்த வாய்ப்பு ஏற்படாது. இந்த மாகாணத்தில் வைப்பதா அந்த மாகாணத்தில் வைப்பதா என்கிற போட்டியெல்லாம் ராஜ்ய மந்திரிகளின் தேர்தல் பிரசாரமே யொழிய மக்களுடைய முன்னேற்றத்தைப் பற்றிய விஷயமல்ல. இது ஒரு புறம் இருக்கட்டும்.

முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் வேறு ஒன்று. இப்பொழுது இரும்பு என்றும், எஃகு என்றும் கனரகத் தொழிற்சாலைகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலும் இவ்வகைத் தொழிற்சாலைகள் இன்னும் ஏற்படுத்துவார்கள். அப்படி ஏற்படுத்தி அதிலிருந்து உண்டாகும் பொருள்களை என்ன செய்யப் போகிறார்கள் என்பதுதான் கேள்வி.

உதாரணமாக எஃகுத் தொழிலை எடுத்துக் கொள்வோம். இந்தத் தொழிற்சாலைகளில் செய்யப்படும் எஃகு நமது ரயில் தண்டவாளங்கள் செய்யவும், என்ஜின்கள் செய்யவும் உபயோகப்படும் என்கிறார்கள். இவை தவிர இன்னும் சில உள்நாட்டுத் தொழில்களுக்கு உபயோகப்படும் என்றும் சொல்லுகிறார்கள். இவற்றின் உற்பத்தியளவு நமது சர்க்காரின் தேவையளவோடு இராது. ஆண்டுதோறும் இவற்றின் உற்பத்தி பெருகும். அப்பொழுது அதிகப்படியாகவுள்ள எஃகை நம் நாட்டிலேயே சேர்த்து வைத்துக் கொள்வதில் பயனில்லை. அதனால் நஷ்டம் விளையும். ஆகவே இந்தப் பொருளை விற்க வெளிநாடுகளில் மார்க்கெட் தேடவேண்டும். வெளிநாடு என்னும்போது மேல்நாட்டை மறந்து விடவேண்டும். நாம் இப்பொழுது மேல்நாடுகளிலிருந்துதான் எஃகு இறக்குமதி செய்கிறோம். அவர்களிடம் எஃகு உபரியாக இருக்கும்போது, மீண்டும் அவர்கள் நம் எஃகை ஏன் வாங்கப் போகிறார்கள்? அப்பொழுது நமக்கு மார்க்கெட்டைக் கீழ்நாடுகளில் தான் தேடவேண்டும். பர்மா, மலேயா, இந்தோனீசியா முதலிய நாடுகளில் விலை போகுமா என்று பார்க்க வேண்டும். அந்நாடுகளும் நம்மைப் போலவே, சமீபத்தில் சுதந்திரம் பெற்ற நாடுகளாதலால், அங்கேயும் கூடிய விரைவில் எஃகு தொழிற்சாலைகள் ஆரம்பமாகி விடும். அப்பொழுது நம் நாட்டுப்

பொருளுக்கு மார்க்கெட் அடைத்துப் போகும். ஆகவே, நம் நாட்டில் உற்பத்தியாகும் எஃகு நம் நாட்டிலேயே தேங்கிப் போகும் நிலை ஏற்படக்கூடும்!

இத்தமாதிரியான நிலைதான் இப்பொழுது நம் நாட்டு ஆலைத் துணி, கைத்தறித் துணி விஷயத்தில் ஏற்பட்டிருக்கிறது. நம் நாட்டு ஆலைத் துணிகளுக்கும், கைத்தறித் துணிகளுக்கும் மேல் நாடுகளிலும் கீழ் நாடுகளிலும் சில ஆண்டுகள் முன்பு வரை ஏக கிராக்கி யிருந்தது. நமது ஜவுளிகளின் ஏற்றுமதி வர்த்தகம் சிறப்பாக இருந்தது. நமது துணிகள் ஏராளமான டாலர்களும், ஸ்டர்லிங்குகளும் சம்பாதித்துக் கொடுத்தன. ஆனால் இப்பொழுது இரண்டு மூன்று ஆண்டுகளாக நமது துணிகளுக்கு மார்க்கெட்டு இல்லை. ஏற்றுமதி வர்த்தகம் தடைப்பட்டு ஏராளமான துணிகள் நம் நாட்டிலேயே தேங்கிக் கிடக்கின்றன. இதற்கெல்லாம் காரணம் எந்த எந்த நாடுகளில் நமது துணிகளை வாங்கி வந்தார்களோ, அங்கெல்லாம் அவர்களே துணிகள் செய்துகொள்ள ஆரம்பித்து விட்டார்கள். நமது துணிகளை வேண்டாம் என்கிறார்கள்.

இவையெல்லாம் நமது பாரத சர்க்காருக்குக் கண் திறந்து வைக்கக் கூடிய பாடங்களாகும். ஆனாலும் நமது சர்க்கார் கண்களை இறுக மூடிக்கொண்டே காரியங்கள் செய்து வருவது போல்தான் தெரிகின்றதே தவிர்த்து. நேரடியாக நிலவும் நிலைமையை உணர்ந்து பணி புரிவதாகத் தெரியவில்லை.

ஆலைத் துணிகள் வெளிநாட்டு மார்க்கெட்டை இழந்து விட்டாலும் உள்நாட்டிலாவது வியாபாரமாகி யிருக்கக்கூடாதா என்றால் இல்லை என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. நம் நாட்டில் கிராமங்களில் வாழும் குடியானவர்களின் பொருளாதார நிலை சென்ற பத்து ஆண்டுகளில் ஒரு சிறிதும் பெருகவில்லை. நகர்ப் புறங்களில் செய்யும் எந்தப் பொருளும் வியாபாரமாக வேண்டுமென்றால் கிராம மக்களின் பொருளாதார நிலை பெருகி யிருக்கவேண்டும். நமது நாட்டின் ஜனத்தொகையில் நூற்றுக்கு எண்பது சதவிகிதம் பேர்கள் கிராமங்களில் வாழ்பவர்கள். பம்பாயிலும் அகமதாபாத்திலும் ஆலைகளில் துணிகள் தேங்கிக் கிடக்க, நமது கிராமங்களில் வாழும் மக்கள் இன்னும் நான்கு முழத் துண்டுடனேயேதான்

## அப்படியா சேதி!




சர்க்கார் உணவுதான்ய வியாபாரம் மேற்கொண்டதன் நோக்கமே, திட்டங்களுக்குப் பணம் திரட்டத்தான் என்கிறது ஒரு புது தில்லிப் பத்திரிகை!

சுற்றி வருகின்றனர். ஏனென்றால் கிராம மக்களிடையே அந்தத் துணிகளை வாங்கும் பணம் இல்லை.

சென்ற பத்து ஆண்டுகளில் ஆலைத் துணிகளின் விலை ஒன்றுக்கு இரண்டு மடங்காக, மும்மடங்காகப் பெருகியிருக்கிறது. ஆனால் நமது கிராமவாசியின் வருமானம் ஒரு சிறிதும் பெருகவில்லை. இந்நிலையில் கிராமவாசி இந்தத் துணிகளை எப்படி வாங்குவான்?

ஆகவே, நமது நாட்டுச் சுபிட்சத்துக்குத் திட்டமிடும் அறிஞர்களின் சிந்தனையில் ஒரு புதிய நோக்கு வேண்டும்! எந்தத் திட்டத்தையும் புதிய அடிப்படையில் வகுக்க வேண்டும்.

நாம் செய்யும் ஒவ்வொரு பணியையும் கிராம மக்கள் வரவேற்பார்களா? ஒவ்வொரு பொருளையும் கிராம மக்கள் வாங்குவார்களா என்று யோசிக்க வேண்டும்.

'எஃகு எவ்வளவு விலை! அவர்களால் எப்படி வாங்க முடியும்' என்று கேட்கலாம். அப்படியானால் எஃகு, இரும்பு முதலிய பொருள்களை வாங்கி உபயோகிக்கக் கூடிய சக்தியுள்ளவர்களாகக் கிராம மக்களைச் செய்துவிட்டுப் பிறகுதான் மற்ற வேலைகளில் ஈடுபட வேண்டும். அல்லது அவர்கள் சக்திக்கு அடங்கும் வகையில் நகர்ப்புறப் பொருள்களின் விலை அமைய வேண்டும். கிராமப் பகுதிகளில் சிறிய சிறிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தக் கூடிய அளவு பொருளாதார சக்தி கிராமங்களில் நிலம் படைத்தவர்களிடம் ஏற்படுத்தினால் சர்க்கார் மேற்கொள்ளும் கனரகத் தொழில்களுக்குப் பயன் உண்டு.

வெகு நாட்களுக்கு முன்னமேயே நம்முடைய ஏழை நாட்டில் இந்தப் பெருந் தொழிற்சாலைகளினால் பயனில்லை, சிக்கல்கள்தான் உண்டாகும் என்று காந்தி மகான் சொன்னார்.

ஆனால் இப்பொழுது என்ன நடைபெறுகிறது? நிலத்துக்கு உச்சவரம்பு கட்டி, நிலம் படைத்தவர்களை ஏழைகளாக்கப் படுகிறது! அத்துடன் நிலத்தில் இறங்கி உழுது வேலை செய்யும் பண்ணையாட்களுக்குக் கூட்டுறவு உத்தியோகஸ்தரின் கீழ்வேலை செய்யும் 'அந்தஸ்து' கொடுக்கப் பட்டிருக்கிறது! மொத்தத்தில் கிராமத்தில் உற்பத்தியைப் பெருக்காமலும் இருக்கும் சொற்ப மூலதனத்தைச் சிதற அடிக்கும் வகையிலும் பணிகள் நடைபெறுகின்றன. முக்கியமாக, கிராம மக்களின் பொருளாதார நிலை அபிவிருத்தி செய்வதற்குப் பதில், சீர்குலைக்கப் படுகிறது!

அதே சமயத்தில், கனரகத் தொழில்களும் பெருக்கப்படுகின்றன!

இவற்றை உபயோகிப்பார் யார் என்ற எண்ணமின்றி நடைபெறுகிறது.

ஆகவே, திட்டக் கமிஷனில் உடனடியான தேவை புதிய சிந்தனை. நமது நாட்டின் முக்கிய பொக்கிஷமும் முதுகெலும்புமான கிராமங்களின் பொருளாதாரத்தைப் பெருக்கிவிட்டு மற்றப் பணிகளில் ஈடுபட வேண்டும் என்பதுதான்.

அப்படிச் செய்யாமல் கனரகத் தொழில்களைப் பெருக்கிவிட்டு, கிராம மக்களின் வருமானத்தைப் பெருக்காமல் விட்டால் உடல் இளைத்து வயிறு பருத்த மகோதர வியாதி வந்தவனின் நிலையைத் தேசம் அடைந்துவிடும்!

# அமெரிக்காவின் அந்தரங்கம் என்ன?

**பா**க்தாத் உடன்படிக்கையைச் சேர்ந்த நாடுகளும் அமெரிக்காவும் ஒரு புதிய தற்காப்பு உடன்படிக்கை செய்து கொண்டிருக்கின்றன. இந்தப் புதிய உடன்படிக்கையிலுள்ள வாசகத்துக்கு வியாக்கியானம் செய்வதில் ஒரு பெருங் குழப்பமும் கலவரமும் எழுந்திருக்கின்றன.

''கம்யூனிஸ்டு நாடுகளின் ஆக்கிரமிப்பைத் தடுக்க'' என்று அந்த உடன்படிக்கையின் வாசகத்தில் இல்லை. 'ஆக்கிரமிப்பைத் தடுக்க' என்று மட்டும்தான் இருக்கிறது.

அதனால் பாகிஸ்தான் ஒரு புதிய குதூகலம் அடைந்திருக்கிறது. 'ஆக்கிரமிப்பு' என்பதற்கு இந்தியாவை எதிர்க்கும் அமெரிக்கா உதவிய ராணுவ ஆயுதங்களை உபயோகிக்கலாம் என்பதுதான் பொருள் என்று சொல்லிக்கொண்டு பாகிஸ்தான் குதூகலமடைகிறது. பாகிஸ்தானின் குதூகலத்தைப் பார்த்து இந்தியா கலவரம் அடைந்திருக்கிறது. பொழுது விடிந்தால் கிழக்கு பாகிஸ்தான் எல்லையிலும், மேற்கு பாகிஸ்தான் எல்லையிலும் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்று வருகின்றன. இப்பொழுது ஏற்பட்டுள்ள புதிய சூழ்நிலையில் இது மாமூல் எல்லைச் சண்டை என்று தள்ளி அலட்சியப்படுத்துவதற்கில்லை. இதிலே ஏதாகிலும் ஒரு சண்டையை 'இந்தியாவின் ஆக்கிரமிப்பு' என்று பாகிஸ்தான் சொல்லி அமெரிக்க ஆயுதங்களை உபயோகிக்க இடமுண்டு.

உடன்படிக்கையின் வாசகத்தைக் கூர்ந்து பார்த்தால் பாகிஸ்தானின் இந்த வாதத்துக்கு இடம் ஏற்படுகிறது. உடன்படிக்கைக்குக் கையெழுத்துப் போட்டு விட்ட பிறகு அமெரிக்க உத்தியோகஸ்தர்கள் சொல்லும் சமாதானம் உடன்படிக்கைவாசகத்துக்கு விரோதமாகஇருக்கிறது. இதனாலேதான் ''இச் சமாதானங்களில் எங்களுக்கு அக்கறையில்லை'' என்று உறுதியாகச் சொல்கிறது பாகிஸ்தான்.

பாக்தாத் ஒப்பந்தம், ஸீட்டோ ஒப்பந்தம் என்று அமெரிக்கா பாகிஸ்தானுடன் ராணுவ ஒப்பந்தங்கள் செய்துகொண்ட நாளிலிருந்தே இது நல்லதற்கு அறிகுறியல்ல என்று நமது சர்க்கார் அமெரிக்காவுக்கு எச்சரிக்கை செய்துகொண்டே

வந்தது. அப்பொழுதெல்லாம் அமெரிக்கா தங்கள் ஆயுதங்கள் கம்யூனிஸ்ட் நாடுகளின் ஆக்கிரமிப்பிலிருந்து காப்பாற்றத்தான் உபயோகப்படுத்தப் படுமென்று இந்தியாவுக்குச் சொல்லி வந்தது. அப்பொழுது கூட ஒரு சிப்பாயை, மேற்குப் பக்கம் சுடுவதற்கு ஒரு துப்பாக்கியும், கிழக்குப்புறம் சுடுவதற்கு வேறொரு துப்பாக்கியும் உபயோகியுங்கள் என்று சொல்ல முடியுமா? அமெரிக்க ஆயுதம் தாங்கிய போர்வீரர்களை, அந்த ஆயுதங்களை இந்தியாவின் மீது உபயோகப்படுத்தக் கூடாது என்று கட்டுப்படுத்த முடியுமா? ஆகவே, இந்தியாவின் மீது அமெரிக்க ஆயுதங்களை உபயோகப்படுத்தப் பாகிஸ்தானை அனுமதிக்காது என்று அமெரிக்கா சொல்வதெல்லாம் அர்த்தமற்ற வெறும் பேச்சு என்றே கூறி வந்தது பாரத சர்க்கார்.

இந்த அச்சத்தைப் போக்க அமெரிக்கா முயலவில்லை. அதை இரட்டிப்பாகச் செய்து விட்டது!

இப்பொழுது பாகிஸ்தானுடன் செய்து கொண்ட உடன்படிக்கையில் கம்யூனிஸ்ட் ஆக்கிரமிப்பு என்று சொல்லாமல் வெறும் 'ஆக்கிரமிப்பு' என்று மட்டும் சொல்லியதால் அமெரிக்காவின் அந்தரங்க சுத்தியில் இந்திய மக்களுக்குச் சந்தேகம் எழுகிறது.

மொத்தத்தில் இந்திய ராணுவச் செலவு ஏற்கனவே வரம்பு மிஞ்சியிருப்பதானது இன்னும் அதிகரிப்பது நிச்சயம். அதன் காரணமாக வருங்காலத்தில் இந்திய அரசாங்கம் அமெரிக்காவுக்கு இன்னும் அதிகமாகக் கடன் பட வேண்டியதாகும். கடன் வாங்கிய ராஜ்யம் கடன் கொடுத்த வல்லரசுக்குக் கீழ்ப்படிந்துதான் நடந்து கொள்ள வேண்டியதாகும்.

# என்ன சேதி?

## நல்ல யோசனை

காந்தி மகான் பாரதநாட்டில் முதன் முதலில் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பித்த 1921-ம் ஆண்டில் பதவிகளையும் கீதிமன்றங்களையும் துறந்து, தியாக வாழ்க்கை மேற்கொண்டு சிறைவாசத்துக்குத் தயாராகுங்கள் என்று அழைத்த போது இந்தப் புது வழியைக் கண்டு சிலர் திகைத்தனர். தேசபக்தியில் தீவிர உணர்ச்சி கொண்டவர்கள் எவ்வித யோசனையும் செய்யவில்லை. காந்தி மகான் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து சிறைவாசம் மேற்கொண்டார்கள். அத்தகைய உத்தமத் தியாகிகளில் ஒருவர் ஆரணி சுப்பிரமண்ய சாஸ்திரியார். 1921-ம் ஆண்டு சிறை சென்று ராஜாஜியுடன் வேலூர் சிறையில் இருந்தார். அவர் தம் வாழ்நாள் முழுதும் தியாகத்தைப் பதவிக்கும் பணயம் வைக்காத உத்தம தேசபக்தராகவே வாழ்ந்து விட்டுச் சென்றிருக்கிறார்.

இத்தகைய உத்தம தேசபக்தருக்கு, அவர் வாழ்ந்த ஊரில் ஒரு ஞாபகார்த்தம் ஏற்படுத்த திரு காமராஜ் அவர்கள் தக்க யோசனை கூறியிருப்பதை வரவேற்கிறோம். ஆரணி நகர உயர்நிலைப் பள்ளியின் பெயரை, சுப்பிரமண்ய சாஸ்திரியார் உயர்நிலைப் பள்ளியென்று மாற்றியமைக்கும்படி யோசனை கூறியிருக்கிறார். இந்தப் பெயர் மாற்றும் விழாவுக்குத் திரு காமராஜ் அவர்களே தலைமை வகித்துச் சிறப்பித்திருக்கிறார்.

## தேர்தல் விளம்பரம்

சென்னை நகரசபைத் தேர்தல் நடக்கவிருக்கிறது. இந்தத் தேர்தலில் ஒவ்வொரு வட்டத்திலும் யார் யார் நிற்கிறார்கள் என்பதைச் சென்னை நகரசபை சென்ற வாரம் பத்திரிகைகளில் வெளியிட்டது. அப்படி வெளியிட்டபோது, ஒவ்வொரு அபேட்சகரின் பெயரின் முன்னாலும் சாதியின் பெயர் குறிப்பிடப்பட்டிருந்தது. இவர் பிராம்மணர், இவர் வன்னியர், இவர் நாடார் என்று குறிப்பிட்டிருந்தது பார்ப்பதற்கே அருவருப்பாக இருந்தது. பகிரங்கப் பட்டியலில் சாதியைக் குறிப்பிடவேண்டிய அவசியம் என்ன? 'சாதி வித்தியாசங்கள் ஒழிய வேண்டும்' என்று சொல்லிக் கொண்டே சாதியின் பெயரால் வோட்டுக் கேட்கும் முறையைக் காண்கிறோம். இது மிகவும் கேவலம்.

பொதுஜன சேவை செய்யத் தகுதியானவரா? யோக்கியமானவரா?-என்ற கேள்விகளுக்குக் கிடைக்கும் விடைகளின் அடிப்படையிலேயே பொதுமக்கள் தங்கள் அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த மரபை வளர்க்க வேண்டியிருக்க, சாதியின் பெயரால் வோட்டுக் கேட்கும் முறையைக் காங்கிரஸ் சர்க்கார் வளர்ப்பது மிக மிகக் கேவலம்.

## சர்க்கார் வியாபாரம்

சர்க்கார் உணவு தான்ய வியாபாரத்தில் ஈடுபட்டதற்குக் காரணத்தைப் புது தில்லியிலுள்ள ஒரு பிரபல பத்திரிகை அம்பலப்படுத்தி யிருக்கிறது. இந்த வியாபாரத்தை மேற்கொண்டால் சுமார் 170 கோடி ரூபாய் லாபம் கிடைக்கும், அதைத் திட்டச் செலவுகளுக்கு உபயோகப்படுத்தலாம் என்று எண்ணி மேற்கொண்டிருக்கிறார்கள் என்று கூறுகிறது. இதிலிருந்து ஒரு விஷயம் மிகத் தெளிவாகி விட்டது. சர்க்கார் செய்யும் வியாபாரத்தில் லாபம் வரும் என்று நாம் நம்பவில்லை. நஷ்டம் தான் ஏற்படும். ஆயினும் சர்க்காருடைய கருத்து லாபம் சம்பாதிக்கும் கருத்து. நாட்டில் நேர்முக வரிகளும் மறைமுக வரிகளும் எவ்வளவு தூரம் போட முடி

பிரபல பிரஞ்சு நாடகாசிரியர்

கார்ணெய் எழுதிய



# தனிப்பெருந் தலைவன்

பதினேழாம் நூற்றாண்டின் சரித்திரப் பின்னணியிலே

எழுந்த அற்புதக் காதல் நாடகம்

தமிழாக்கம்:

எம். வி. சுப்பிரமணியம் ஐ.ஸி.எஸ் (ரிடையர்டு)

மார்ச் 22ஆ கல்கி

இதழில் ஆரம்பமாகிறது

யுமோ அவ்வளவு தூரம் போட்டாகி விட்டது! அவ்வளவு கடுமையான வரிகள் விதித்தும், போடப்பட்டிருக்கும் திட்டச் செலவுகளுக்கு வேண்டிய பணம் திரட்ட முடியாமல், காட்டில் சாதாரண மக்கள் தொழில் செய்து வாழக்கூடிய உணவு தான்ய வியாபாரத்தையும் மேற்கொண்டு விட்டது! இப்படி இன்றைய மக்களின் வாழ்வை அடியோடு கெடுத்து விட்டு எழுப்பும் திட்டங்கள் நாளை என்ன பலனை அளிக்கும்?

## மொரார்ஜியின் கூற்று

நெசவாளர்களின் கஷ்டங்களைப் போக்கப் பழைய பீஹார் மந்திரி யொருவர், நாட்டிலுள்ள நெசவாலைகளை யெல்லாம் மூடிவிட வேண்டும் என்று யோசனை கூறினார். இதற்குப் பதிலளித்த திரு மொரார்ஜி தேசாய், "ஆலைகளை மூடி விட்டால் நாட்டில் பலர் நிர்வாணமாக நடமாட வேண்டி வரும்" என்று கூறியிருக்கிறார்.

ஆலைகளில் உற்பத்தியாகும் துணி மக்களுக்கு அவசியம் வேண்டும் என்று திரு மொரார்ஜி தீர்ப்புச் சொன்னபோதிலும், கரை போட்ட வேஷ்டிகளையும் சேலைகளையும் கைத்தறிக்கு ஒதுக்குவதில் ஆலைத் தொழிலுக்குப் பெரு நஷ்டம் ஒன்றும் ஏற்படாது. அப்படிச் செய்தால் நாட்டில் யாரும் நிர்வாணமாக இருக்க வேண்டிய அவசியம் ஏற்படாமலும், மில் தொழிலுக்கு நஷ்டமில்லாமலும் நாட்டிலுள்ள 20 லட்சம் கைத்தறிகள் நிம்மதியாக வேலை செய்யும். அவற்றை நம்பி வாழும் லட்சக்கணக்கான நெசவாளர் குடும்பங்கள் பிழைத்துப் போகும்!

இந்த நற்பணியைச் செய்வதற்குச் சர்க்காரிடம் என்ன இடையூறு இருக்கிறது? தார்மிகப் பண்பின் குறைவுதான். இதைத் தவிர வேறு ஒன்றுமில்லை.

"தீர்க்கதரிசனம் வாய்ந்த பெரியோர்கள் ஓரளவு வரை பாதை காட்டலாம். ஆனால் சர்க்கார் நிர்வாகம் அவர்களால் நடத்தப் படுவதில்லை" என்கிறார் காந்திமகான் வழி வந்த காங்கிரஸ் தலைவர் திரு மொரார்ஜி. நிர்வாகம் நடத்துகிறவர்களுக்குத் தீர்க்க தரிசனம் வேண்டியதில்லை என்று சொல்வது போலிருக்கிறது.

மொரார்ஜி தேசாயும் நேருஜியும், நமது ஆலை முதலாளிகளை, ஏழைக் கைத்தறி நெசவாளர்களுக்காகக் கரை போட்ட வேஷ்டியும் சேலைகளும் ஒதுக்குங்கள் என்றால் நிச்சயம் ஒதுக்குவார்கள். நமது ஆலை முதலாளிகளிடம் தார்மிகப் பண்பு இல்லை என்று சொல்ல முடியாது. நமது ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருக்கும் தலைவர்களிடம்தான் தீர்க்கதரிசனமும் தைரியமும் குறைந்து போய் விட்டன.

## ஆகாச வெடி

"இந்திய மாங்காய் ஊறுகாய்களை அதிகமாக பிரிட்டனே இப்போது இறக்குமதி செய்து கொள்கிறது." —செய்தி

தயிர்சாதம் இல்லாமல் எப்படி ஊறுகாய்களை அவர்கள் உபயோகிக்கிறார்கள் என்று விளக்குவார்களா?

★

"முன்னால் பார்த்தால் ராவுத்தர் குதிரை போலவும், பின்னால் பார்த்தால் செட்டியார் குதிரை போலவும் சென்னை சர்க்கார் 'பட்ஜெட்' அமைந்திருக்கிறது."

—ஓர் எதிர்க்கட்சி அங்கத்தினர்



யாருடைய குதிரையாயிருந்தாலும் சரி, ஏறுவோரைக் கீழே தள்ளி, குழியும் பறிக்காமல் விடுமா, சொல்லுங்கள்!

"பீஹார் சட்டசபை கூடியபோது மந்திரிகளில் ஒருவராவது, சபைக்கு வரவில்லை. இதைக் கண்டித்து எதிர்க் கட்சியினர் வெளியேறினார்கள்." —செய்தி

"எப்படி? நாங்கள் சட்டசபைக்கு வெளியிலே இருந்தே, எதிர்க்கட்சியினரை வெளியேற்றி வருகிறோம்!" என்று மந்திரிகள் இனிக் கூறலாமல்லவா?

★

மோட்டார் கார் முன் படுத்து மறியல் செய்பவர்களைக் கேரள சட்ட மந்திரி, "காரை நமஸ்கரிப்பவர்கள்!" என்று தமாஷாகக் குறிப்பிட்டார். —செய்தி

அப்படி நமஸ்கரிப்பவர்களைத் "தீர்க்காயுசாயிருங்கள்!" என்று ஆசிர்வதிப்பது பெரும்பாலும் 'பிரேக்'குகளின் நிலைமையைப் பொறுத்திருக்கிறதென்கிறார் ஒருவர்.

★

"சென்னையில் நடந்த டாக்ஸி கார்கள் திடீர் ஸ்டிரைக்கின்போது, ரயில் வண்டிகளில் வந்த பிரயாணிகள் வீடு சேர மிகத் தாமதம் ஏற்பட்டது." —செய்தி

இது மட்டுமா? ஊருக்குக் கிளம்புவதாயிருந்த விருந்தாளிகள் டாக்ஸி கிடைக்கவில்லை என்று புறப்படுவதில் தாமதித்ததும் உண்டு என்கிறார் ஒரு கிரகஸ்தர்.

உயர்தரமான
காஞ்சீபுரம்
பட்டு
சேலைகளுக்கு...

அழகிற்கும் உழைப்பிற்கும் பெயர் பெற்ற காஞ்சீபுரம் பட்டுச் சேலைகள், கண்ணிறைந்த வர்ணங்களில், நவின நவ நாகரீகத்திற்கு ஏற்ற பல மோஸ்தர்களில் எங்களிடம் கிடைக்கும்.



புதிதாக "ஏர் கண்டிஷன்" வசதி செய்யப்பட்டுள்ள எங்கள் ஷோ ருமுக்கு விஜயம் செய்யுங்கள்.

**ராதா ஸில்க் எம்போரியம்**

14, ஸன்னதி தெரு, மைலாப்பூர், மதராஸ்-4.

போன்: 71188

RSE-608

# புனிதமடைந்த சென்னை

"ஹரஹரி"

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரிய ஸ்வாமிகள் சென்னைக்கு வந்து பதினெட்டு மாதங்களாகின்றன. சென்னைவாசிகளின் வேண்டுகோளுக்கு இணங்கி அவர்களை ஆசீர்வதிக்க ஆசாரிய ஸ்வாமிகள் சென்னைக்கு வந்தார்கள். தெற்கே தாம்பரத்திலிருந்து வடக்கே வில்லிவாக்கம் வரை ஆசாரிய ஸ்வாமிகளின் விஜயத்தாலும், அவர்கள் பல பகுதிகளில் தங்கியதாலும் நகரம் புனிதம் அடைந்தது. ஆசாரிய ஸ்வாமிகள் இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுதுதான் சென்னைக்கு மீண்டும் வருகிறார்கள். முதல் தடவை வந்ததைவிட இந்தத் தடவை விஜயத்தில் ஒரு தனி விசேஷம் உண்டு. இந்தத் தடவை புதுப் பெரியவர் என்று அன்புடன் அழைக்கப் படும், தம் பீடத்துக்கு அடுத்த அதிபதியான ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுடன் சென்னைக்கு மீண்டும் விஜயம் செய்திருக்கிறார்கள். இப்படி இருவருமாக வந்த திருக்கோலத்தைக் கண்டு பக்தர்கள் அடைந்த ஆனந்தத்துக்குத்தான் ஓர் முடிவு ஏது!




ஆயிரக்கணக்கான பக்தர்கள் அவர்களையே சதா சர்வ காலமும் தரிசித்துக் கொண்டிருக்க விரும்பினார்கள்; ஆசாரிய ஸ்வாமிகள் எங்கெல்லாம் சென்றார்களோ அங்கெல்லாம் உடன் சென்றார்கள்.

அவர் தனி அமைதியுடன் செய்த பூஜைகளை மணிக்கணக்காக உட்கார்ந்து பார்த்தார்கள். அவர்கள் இதழ்களிலிருந்து உதிர்ந்த அருமையான அருள் வாக்குகளை உள்ளம் உருகக் கேட்டார்கள். பக்தர்கள் கொண்டு வந்த அன்புக் காணிக்கைகளைப் புன்முறுவலுடன் ஏற்று ஆசீர்வதித்ததையும், அவர்கள் பயபக்தி விசுவாசத்துடன் தங்கள் சொந்த துயரங்களைக் கூறும் போது அவர்களுக்கு ஆறுதல் சொன்னதையும் என்னவென்பது! ஆசாரிய ஸ்வாமிகள் சென்ற இடங்களில் எல்லாம் ஆயிரக் கணக்கான ஹிந்து பக்தர்கள் சென்றது இருக்கட்டும், மற்ற மதங்களைச் சேர்ந்தவர்களும், மற்ற தேசங்களைச் சேர்ந்தவர்களும் ஆசாரிய ஸ்வாமிகளைத் தரிசித்து அறிவு விகாசமடையப் பெற்றனர். ஆத்மாவில் புது ஒளி பெற்றனர்!

இந்தப் பதினெட்டு மாதங்களில் சென்னையில் வாழும் ஆயிரக் கணக்கான மக்கள் உள்ளத்தில் ஆத்மீக உணர்ச்சி பொங்கிப் பெருகியது. ஆஸ்திகம் ஒரு புது மலர்ச்சி பெற்றது. சமீப காலத்தில் யாரும் கண்டறியாததோர் தெய்வீகமும் தெய்வ பக்தியும் சென்னைநகர் முழுவதும் பெருக்கெடுத்தோடின.

ஆசாரிய ஸ்வாமிகள், ஆதிசங்கரர் நிறுவிய பீடத்தின் அதிபதி. முக்கியமாக அத்வைத வேதாந்த பிரசாரத்துக்கே அர்ப்பணம் செய்யப்பட்ட பீடத்தைச் சேர்ந்தவர். ஆயினும் அந்தக் குறிப்பிட்ட விஷயத்தை மட்டும் அருளுபதேசம் செய்யாமல், மக்கள் குலம் அனைத்துக்கும் தற்காலம் மிக மிகத் தேவைப்படும் அருளுபதேசங்களையே செய்து வந்தார்கள். அநாதி காலந்தொட்டு நிலவி வரும் வேத மார்க்கத்தை அனுஷ்டிக்குமாறு ஓயாமல் உபதேசித்து வந்தார்கள். வேத நெறியில் வாழும் வாழ்க்கைக்கு இக்காலத்தில் வெளியிலிருந்து ஏற்படும் எதிர்ப்புக்களுக்கும் உள்ளத்தில் எழும் சந்தேகங்களுக்கும் தக்க பதில்கள் உரைத்துப் பழம்பெரு வாழ்வைப் புனர் நிர்மாணம் செய்ய முயன்று வந்தார். வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் கூறப்பட்டுள்ள அடிப்படை உண்மைகளைக் காப்பாற்ற வேண்டும் என்று தீவிரமாக உபதேசித்து வந்தார். இன்றைய மக்களையும் வேதநெறிப்படி வாழும்படி வற்புறுத்தி வந்தார். எளிய வாழ்வும் உயரிய சிந்தனையும் கொண்டு வாழும்படி கூறினார். அத்துடன் மன நிறைவும், ஒழுக்கமும், பக்தியும் கொண்டு வாழும்படி உபதேசித்தார். இந்து சமயத்தைச் சேர்ந்த எல்லா வகுப்பாரையும் ஒன்றாகப் பிணைத்து, அவர்கள் எல்லாரும் பொதுவான ஒரு சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை நினைவுறுத்த மிகப் பாடுபட்டார். கிளைகள் பலவாயினும் மரம் ஒன்றாக இருப்பது போல்தான் நம்

மதத்தின் பல்வேறு சித்தாந்தங்கள் என்பதைப் பதிய வைக்க முயன்றார். எங்கே போனாலும், எங்கே பேசினாலும், அவரவர் தத்தம் குலதர்மத்தை விடக் கூடாது என்பதையே திரும்பத் திரும்பக் கூறினார். அதைத் தைரியத்தோடும் மன உறுதியோடும் கடைப்பிடிக்க வேண்டும் என்றார். தனக்குச் சேராத குலதர்மத்தைக் கடைப்பிடிக்க முயலக்கூடாது என்றும் சொல்லி வந்தார்.

இன்றைய ஹிந்து குடும்பங்களில் நிலவும் சாஸ்திர விரோதமான காரியங்களையும் பழக்க வழக்கங்களையும் பார்க்கும்போது அவர் நெஞ்சம் அடையும் வேதனை இவ்வளவு அவ்வளவு அல்ல. நீண்ட நெடுங்காலமாக வரும் பழக்கங்களை விட்டுத் துறப்பதனால் மக்களின் மனம் சீர்கேடடைகிறது; ஒழுக்கம் கெடுகிறது. வீட்டின் பொருளாதாரம், சமுதாயத்தின் பொருளாதாரம் எல்லாமே சீர்குலைந்து போகின்றன. இப்படி இந்து சமுதாயம் பட்டுப் போய்க் கொண்டே வருவதை, வேதத்தை அடிப்படையாகக் கொண்ட எல்லா மத ஸ்தாபனங்களும் ஒன்று சேர்ந்து, தடுக்கப் பாடுபட வேண்டும் என்று தீவிரமாக எண்ணினார். அஹோபிலம், உடுப்பி பேஜாவர், மதுரை திருஞானசம்பந்தர் ஆகிய மடங்களின் தலைவர்கள் நமது ஆசாரிய சுவாமிகளின் இம் முயற்சியில் பங்கு [எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது மனத்துக்கு ஆறுதலை அளிக்கிறது. குலாசாரங்களும் சம்பிரதாயங்களும்] மக்களிடையே வேறுபடலாம். ஆனால் மத சம்பந்தமான அடிப்படை உண்மைகளில் எம்மதத்தாருக்கும் வேறுபாடில்லை. இந்த அடிப்படை உண்மைகளை மக்கள் மனத்தில் பதிய வைக்கும் இப் புனிதப் பணியில் நான்கு மடங்களும் சேர்ந்திருப்பது நமது பாக்கியமாகும்.

ஆசாரிய சுவாமிகள் சென்னைவாசிகளிடமிருந்து விடைபெற்றுச் செல்ல வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். நாட்டின் மற்றப் பகுதியிலுள்ள மக்கள் ஆசாரிய சுவாமிகளின் தரிசனம் பெறத் துடிக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் ஜகத்குரு சங்கராச்சாரியாரின் கட்டளைப்படி, நமது தர்மத்தின் கோட்பாடுகளின்படி வாழ ஒரு சிறிதாவது உண்மையாக முயன்றிருக்கிறோமா என்று நம் உள்ளத்துக்குள் ஆராய வேண்டும். நாம் இதுகாறும் செலுத்தி வந்த பக்தியெல்லாம் சொற்ப காலத்துக்காகப் போட்ட வேஷமா? ஆசாரிய சுவாமிகளைத் திருப்திப் படுத்துவதற்காக அணிந்த கோலமா? அல்லது அவர் நம்மைக் கேட்டுக் கொண்டாற் போல் மத வாழ்க்கையில் நாம் உண்மையிலேயே உயர்ந்து விட்டோமா?

நாம் எந்த முறையில் வாழ வேண்டும் என்று கற்றுக் கொடுத்தாரோ, அந்தப் பாடத்தை நன்றாகப் பயின்று வருகிறோமா? ஏதாவது ஒரு அம்சத்திலாவது அவர் கூறிய முறைப்படி வாழ்ந்து முன்னேறி யிருக்கிறோமா? — இந்தமாதிரி சில கேள்விகளை ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தமக்குள் கேட்டுக் கொண்டு யோக்கியமாகவும் ஒளிவு மறைவின்றிப் பதில் கூறிக் கொள்ள வேண்டும். நம்மையும் ஒரு பொருளாக மதித்துச் சென்னைக்கு வந்த அவர்களது தனிப்பெரும் தகைமைக்கும், நமக்காக அவர்கள் சென்னையில் தங்க நேர்ந்ததால் அவர்கள் அடைந்த தேக சிரமத்துக்கும் நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்? அவர்களை எவ்வளவு பேர் எவ்வளவு முறை நேரம் பொழுது என்று பார்க்காமல் ஓயாமல் தொந்தரவு செய்தார்கள். அவரது பலவீனமான தேக ஆரோக்கியத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பிலிருந்தவர்கள் கோபப் படுவதைத் தடுத்து ஆசாரிய சுவாமிகள் பொறுமையாயிருந்து பக்தர்களுக்கு அருள் பாலித்த அந்தத் தியாகத்துக்காவது அவர் கேட்டுக் கொண்டதற்கு ஏற்ப நாம் வாழாவிட்டால் நாம் நம் கடமையிலிருந்து தவறினவர்களாவோம். ஆகவே, ஆசாரிய சுவாமிகள் நம்மிடையே தங்கி, ஏற்படுத்திய நல்ல சூழ்நிலையை என்றென்றும் நிலைக்கச் செய்ய வேண்டிய பொறுப்பு நம்முடையது. அவர்கள் மிகுந்த அன்புடனும் நம் நலனில் அக்கறை கொண்டும் வகுத்துக் கொடுத்த சிந்தனை முறையையும் வாழ்க்கை முறையையும் நாம் காப்பாற்ற வேண்டும்.

ஆசாரிய சுவாமிகள் பீடாரோஹணம் புரிந்த வைர விழாவைச் சென்னையில் கொண்டாடும் பொழுது, அதற்கு அவர்கள் நம் வேண்டுகோளுக்கிணங்கிச் சென்னைக்கு வந்தார்கள். அவர்கள் விதைத்த வேதவாழ்க்கை என்னும் விதை, நம் உள்ளத்தில் நன்றாக ஊன்றி முளைத்து, புஷ்பித்து காய்த்துக் கனியாவதைக் கண்டார்களானால் அதை விட ஆசாரிய சுவாமிகளை மகிழ்விக்கக் கூடிய விஷயம் வேறு இராது. இத்தகைய உயரிய புனித வாழ்க்கை வாழ ஆசி புரியுமாறு அவர்களை வேண்டுவோமாக. ஆசாரிய சுவாமிகள் சென்னையை விட்டுச் சென்றாலும் அவர்கள் நம் இதயக் கோயிலில் என்றென்றும் நம் வாழ்நாள் எல்லாம் கொலுவிற்றிருப்பார்கள். அத்துடன் மீண்டும் அவர்கள் சென்னைக்கு விஜயம் செய்யும் புனித வாய்ப்பை எதிர்பார்த்து, நமது உளம் கனிந்த வணக்கங்களை அவர்களுக்குச் செலுத்திக் கொள்வோமாக!



## நிலைத்து நின்ற அந்த எழில் முகம்...

அவளை நீங்கள் கண்டது ஒரு கணமே—எனினும் தெளிவான, புதுமை மாறாத அவளுடைய எழில் வதனம் உங்கள் நினைவில் நிலைத்துவிட்டது.

அவளுடைய புத்தெழிலின் ரகசியம், தினசரி அவள் ஹமாம் உபயோகிப்பதுதான்—ஊடுருவிச் சுத்தம் செய்யும் வெண்ணெய் போன்ற நுரை தரும் விசேஷ ம்ருதுகாரிப் பொருளும், பூ மணமும் உள்ள இந்த சோப், பூந்தளிர் மேனியைத் தோற்றுவிக்கிறது.

# ஹமாம்

டாய்லெட் சோப்

விசேஷ **ம்ருதுகாரிப்**

பொருள் அடங்கியது

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்









73

மனத்தைப் பண்படுத்தி வெற்றி பெற்று வேண்டாமை நிலையை அடைந்துவிட்டால் அதுவே பெருஞ் செல்வம். எல்லாச் செல்வத்தையும் விடப் பெருஞ் செல்வமாகும், ஏதும் வேண்டாம் என்கிற மனநிலை.

ஆசை தீராத மனம் எவ்வளவு செல்வம் இருந்தபோதிலும் துக்கப்பட்டு அலையும். செல்வத்தின் பயன் சந்தோஷம். ஆசை என்கிற நெருப்புக்குத் தீனி போடப் போட அந்த நெருப்பு வளர்ந்து வளர்ந்து மேலும் தீனி கேட்கும். தீனி போட்டால் திருப்தி பட்டு அடங்காது. நெருப்பில் நெய் வார்த்தால் அது இன்னும் வளர்ந்து எரியும். அதுபோல் ஆசை. சந்தோஷத்தை அடைவதற்கு வழி ஆசைகளினின்று விடுபடுவதே. வேண்டாமையே பெருஞ் செல்வம்.

**வேண்டாமை அன்ன**
**விழுச்செல்வம் ஈண்டுஇல்லை**
**ஆண்டும் அஃதொப்பது**
**இல்.**

நாம் அடையக் கூடிய செல்வம் இந்த வேண்டாமைச் செல்வத்துக்கு ஈடாகாது. ஆண்டும்-மேலுலகத்திலும்.

வேண்டாமை தரும் பயன் வீடு. சுவர்க்காதி உலகங்களில் நாம் அடையக் கூடிய சுகங்கள் புண்ணியம் தீர்ந்ததும் முடிவடைந்து மறுபிறப்பு அடைய வேண்டியதாகும். வீடு அல்லது மறு பிறப்பற்ற விடுதலை வேண்டாமையால் வரும். ஆசையற்ற மனநிலைக்குச் சமானமான சுகம் இவ்வுலகத்திலும் இல்லை, சுவர்க்கத்திலும் இல்லை.

சுகம் தரும் செல்வம், அவா அறுத்தலே. அது போன்றது வேறு ஏதும் இல்லை என்று சொன்னார். தூய்மை அடையும் வழியும் அதுவே என்கிறார். உடலின் தூய்மை நீரில் குளித்து அடையலாம். மனத்தூய்மை எப்படி அடைவது? அவா அறுத்தல் தான் அதற்கு வழி. அவா இன்மையே மனத் தூய்மை. பொருள்களைத் துறப்பது போதாது. பொருள் மேல் வைத்த ஆசையும் நீங்க வேண்டும். அந்த ஆசையே மனத்தின் அழுக்கு. அது தீர்தலே தூய்மை.

இதை எப்படி அடையலாம்? மெய்ப் பொருளுக்கு ஆசைப்பட வேண்டும். மெய்ப் பொருளைக் காண வேண்டும் காண வேண்டும் என்று உள்ளம் வருந்தினால் மற்றப் பொருள்களின்மேல் செல்லும் அவா அறுபட்டுப் போகும்.

**தூஉய்மை என்பது**
**அவாஇன்மை மற்றுஅது**
**வாஅய்மை வேண்ட**
**வரும்.**

வாய்மை — மெய்ப்பொருள். மெய்யாகிய பொருள் ஒன்றே. எங்கும் பரவி நிற்கும் பரம் பொருள், மற்றவையெல்லாம் பொய்.

இந்தக் குறளில் வாய்மை என்பது பரம் பொருள், மெய்ப்பொருள். 'வேண்ட' என்கிற வினைச் சொல்லுக்குச் செயப்படு பொருளாக அமைந்திருக்கிறபடியால் இவ்வாறு உரை கூறப்பட்டது. மெய்மையான பரம்பொருளுக்கு வாய்மை என்பது ஆகுபெயர். 'அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்' என்கிற வாய்மை அதிகாரக் குறளில் 'வாய்மை' என்பது ஆகு பெயரல்ல, பொய்யாமை.

ஆசையை நீப்பதற்கு வழி சொல்கிறார் முனிவர். பரம்பொருளில் மனத்தைச் செலுத்து. அதை ஆசைப்படுவதே மனத்தின் காரியமாக வைத்தாயானால் மற்றப் பொருள்களின் மேல் அது செல்லாது. வேண்டுதல்—இடைவிடாமல் பாவித்தல்.

பற்றுக பற்றற்றான்
பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று
விடற்கு.

என்று சொன்னதையே மறுபடியும் வற்புறுத்துகிறார்.

பற்றற்றான் பற்று என்பது பகவத் பக்தி. பரம்பொருளின்மேல் வைத்த காதல். அந்தப் பகவத் காதல் மற்ற பயனற்ற காதல்களை அழித்துவிடும்.

மனைவி மக்களையும் வீட்டையும் சொத்தையும் துறந்தவன் 'நான் துறவி' என்று எண்ணி விடலாம். ஆனால் உள்ளத்தில் பற்று இருந்து கொண்டிருந்தால் அவன் துறவியல்ல. அதையும் விட்டாலேதான் துறவியாவான். பசையறத் துறத்தல் வேண்டும். விட்டனவற்றைப் பற்றிய அவாவையும் நீக்க வேண்டும்.

அற்றவர் என்பார்
அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது
இலர்.

பற்று இடையறாது பற்றும். அவா என்பது விட்டு விட்டு வருகிற ஆசை. விட்டு விட்டு வரும் அவாவையும் அறுத்துவிட வேண்டும். விஷயானுபவ நினைவும் ஒழிய வேண்டும். அதுவே முழு வெற்றி.

* * *

அஞ்சுவது ஓரும்
அறனே ஒருவனை
வஞ்சிப்பது ஓரும்
அவா.

ஓரும்-அசைநிலை. உபதேசத்துக்கு அழுத்தம் தரும் அசை மொழி: அஞ்சுவது-தன் உள்ளத்தில் தோன்றும் அவாவைக் கண்டு பயப்படுவது: அறனே-அதுவே அறன்

அவா என்னும் குற்றம் மனத்துக்குள் புகாமல் இடைவிடாமல் பயந்து காப்பது அறத்துக்கு வழி. அது இல்லையேல் அறம் கெட்டுப் போகும்.

அவா மனிதனை வஞ்சிக்கும் பகை. நல்லது போல் காட்டி மனிதனை வஞ்சிக்கும். மனத்துக்குள் சமயம் பார்த்துப் புகுந்து விடும். அதைப்போல் விரோதி வேறு இல்லை. அவாவுக்கு இடங் கொடாமல் மனத்தைக் காப்பதே முழு விரதம். வேறு ஒன்றும் வேண்டாம்.

இன்பம் இடையறாது
ஈண்டும் அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம்
கெடின்.

கெடின் - இல்லாமல் தீர்ந்து விட்டால்.

வேறு துன்பங்களைக் காட்டிலும் பெருந் துன்பமாகும் அவா. உள்ளத்தில் எரியும் தீயாகும். அந்தத் தீ துன்பமே உருவெடுத்தது போன்ற தீ. அந்தப் பெருந் துன்பம் தீர்ந்து விட்டால் இவ் வுலகத்திலேயே பெருஞ் சுகம் அடைவாய். இடைவிடாத சுகம் வேண்டினையானால் ஆசையை அகற்று.

வீட்டின்பத்துக்கு இலக்கணம் நிரந்தரமாக (இடையறாமல்) இருப்பது. அந்த இலக்கணம் கொண்ட இன்பத்தை இவ்வுலகத்திலேயே அடைவாய், அவாவை நீத்தாயானால்.

ஆசையானது தோற்றத்திலும் துன்பம்; வினைவிலும் துன்பம். ஆனபடியால் துன்பத்துள் துன்பம்.

## அருள் வாக்கு

நமது மனம் நமக்கு வசமாக வேண்டும். மனசு அடங்கிவிட்டால் வேறு எதுவும் தேவையில்லை. ஆசையையும், கோபத்தையும் நம்மால் அடக்க முடியவில்லை. இவை இரண்டுமே நம்மை எப்பொழுதும் துன்பப் படுத்தி வருகின்றன. எந்தப் பொருளை எத்தனை அடைந்த போதிலும் 'போதும்' என்னும் மனத் திருப்தி நமக்கு ஏற்படுவதில்லை. ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாவது மனத்தைச் சாந்தமாக வைத்துக் கொண்டு வேறு நினைவுகளை மனத்தில் செலுத்தாமல் கடவுளது தியானத்தில் அமர வேண்டும். மனத்தை ஒருமைப் படுத்தித் தியானிப்பதால் புத்தி தெளிவடையும். ஆசையும் கோபமும் அடங்குவதற்கு இது ஒரு சிறந்த சாதனமாகும். இவ்வித சாதனையைக் கடைப்பிடிப்பவனுக்கு ஆத்ம ஞானம் உண்டாகிக் குறைவற்ற சௌக்கியத்தை அடைவான் என்பதில் ஐயமில்லை.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சிகாமகோடி பீடம்

# தேனா  பாங்க்

3 புது கிளைக் காரியாலயங்களை கீழ்க்கண்ட இடங்களில் திறப்பதை அறிவிக்கிறது

## பெங்களூர்
மார்ச் 2-ந் தேதி முதல்

## மங்களூர்
மார்ச் 13ந் தேதி முதல்

## கொச்சி
மார்ச் 18ந் தேதி முதல்

இதற்கு முன்னதாகவே இயங்கி வரும் கிளைக் காரியாலயங்கள் பம்பாயில் 26, குஜராத்தில் 21, சௌராஷ்டிராவில் 13, மகாராஷ்டிராவில் 11 கல்கத்தாவில் 2, மற்றும் மத்திய பிரதேசம், டில்லி, புது டில்லி, சென்னை ஆகிய இடங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு கிளைக் காரியாலயங்கள் உள்ளன

**தேவகரன் நான்ஜி பாங்கிங் கம்பெனி லிமிடெட்**

*தலைமைக் காரியாலயம்* : ஹார்னிமன் சர்க்கிள், பம்பாய்-1

வெளிநாடு மற்றும் எல்லாவித பாங்கிங் அலுவல்களும் ஏற்று நடத்தப்படும்

பிரவின்சந்திர வி. காந்தி
மானேஜிங் டைரக்டர்

**நல்ல பென்ஸில்களால்**

எழுதுவதற்கு
எவ்வளவு
ஆனந்தமாயிருக்கிறது!



**மெர்குரி பென்ஸில்கள்**

நல்லவை என்று
எல்லா சோதனைகளிலும்
ருசுவாகியுள்ளது

கருப்பு, இதர கலர் மற்றும் காபிங்
கிடைக்கும்

தயாரிப்பாளர்

**மதராஸ் பென்ஸில் பாக்டரி**

3, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, மதராஸ்.1.



**MERCURY**

*The name for good Pencils*

ARUNA




MR/61

எப்பொழுதுமே
முதன்மையானது!

மாடல் 0322

- 6-வால்வ் • ஆல்-வேவ்
- 3-பாண்ட் • ஏஸி or ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)
- நிகர விலை: ரு. 375-00
  உள்ளூர் வரிகள் தனி



# மர்பி ரேடியோ



தென் இந்தியாவுக்கு சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**முகம்மது இப்ராஹிம் & கோ., பிரைவேட் லிட்.**

சென்னை - - பெங்களூர் - - ஹைதராபாத்



# பக்தி வயல்

பௌராணிகர்

## 28. உலகளந்த உத்தமன்

சுக்கிராச்சாரியார் செய்த உபதேசத்துக்குப் பலி இணங்கவில்லை. "தேவரீர் கூறியது உண்மையே. ஆனால் அரசனான நான், பொருளாசை மேலிட்டுக் கொடுத்ததை மறுப்பது முடியாத காரியம். மறைந்து போகும் உடலுடன் செல்வம் செல்வதில்லை. ததிசியும்சிபியும்உயிரையே கொடுக்கவில்லையா? பின்னர், பூமியைக் கொடுப்பதில் தனக்குத் துன்பம் ஏது? என் குலத்தில் ஆணை செலுத்திய பெரியோரின் சுகங்களைக் காலம் கொண்டு போய் விட்டது. புகழ் மட்டும் அழியாது நிற்கிறது. ஆகையால் இவன் வரமளிக்கும் விஷ்ணுவாயினும் ஒன்றே, எனக்குத் தீங்கிழைக்கவே வந்த எதிரியாயினும் ஒன்றே, கேட்ட பூமியைக் கொடுத்தே தீருவேன்" என்று ஆசிரியனை மறுத்துப் பேசினான்.

சுக்கிராச்சாரியார் சினம் கொண்டார். "என்னை அவமதித்த நீ பதவியினின்று நழுவித் துயரடைவாய்" என்று பலியைச் சபித்தார்.

பிறகு, பலியின் மனைவியான விந்தியாவளி அந்தணச் சிறுவனின் காலைக் கழுவுவதற்கு நீர் கொண்டு வந்தனள். அரசனே கால்களைக் கழுவினான். அந்த நீரைத் தலைமேல் தெளித்துக் கொண்டான். கைமீது நீர் விட்டுப் பூமியை அவனுக்குத் தானம் செய்தான்.



அத்தருணம் குறுகியிருந்த எம்பெருமான் திருமேனி பார்த்தவிடமெல்லாம் நீக்கமற நிறைந்தோங்கி வளர்ந்தது. புவியும், வானமும், திசைகளும், விண்ணுலகும், கீழுலகும், எழு கடலும் உயிர் உற்ற உலகனைத்தும் அவருடைய மேனியில் அடங்கின. காலடியில் கீழ் உலகம் ஏழையும்; காலிலே புவியையும்; முழங் காலிலே மலைகளையும்; முட்டிலே இடைவெளியையும்; தொடையிலே மருத்துக்களையும்; இடையிலே சந்தியா காலத்தையும்; பின்புறத்தில் அசுரரையும்; முன்புறத்தில் மரீசி முதலிய முனிவரையும்; உந்தியில் வானத்தையும்; விலாவில் எழுகடலையும்; மார்பிலே நட்சத்திர மண்டலத்தையும்; இருதயத்தில் தருமத்தையும்; நெஞ்சின் இருபுறத்தில் "ரித"த்தையும் (உண்மை எண்ணம்) "சத்திய"த்தையும் (உண்மை வாக்கு) மனத்திலே வெண்மதியையும்; உள்ளத்திலே தாமரை ஏந்திய லக்ஷ்மியையும்; ஸாம வேதத்தைத் தொண்டையிலும்; புஜங்களில் தேவகணங்களையும்; காதிலே நான்கு திசைகளையும், தலையில் சுவர்க்கத்தையும் கேசத்தில் மேகத்தையும்; மூக்கிலே வாயுவையும்; கண்ணிலே கதிரவனையும்; வாயிலே தீயையும்; பேச்சிலே மறையையும்; நாக்கிலே வருணனையும்; மறை விதிகளைப் புருவத்திலும்; இரவு பகலை இமையிலும்; சினத்தை நுதலிலும்; உதட்டிலே ஆசையையும்; தோளிலே அன்பையும்; வீரியத்தில் நீரையும்; அதர்மத்தைப் பின்னும்; நடையில் வேள்விச் சடங்குகளையும்; நிழலிலே கூற்றத்தையும்; நகையிலே மாயையையும்; உடம்பில் படர்ந்த கேசத்தில் ஔஷதப் பச்சிலைகளையும்; ரத்த நாடியில் நதிகளையும்; நகத்தில் கற்களையும்; புத்தியில் பிரமனையும்; லோக பாலகர்களையும் முனிவரையும்; புலன்களிலும், ஜீவராசிகள் எல்லாவற்றையும் அவர் முழு மேனியிலும் அசுர மன்னன் கண்ணுற்றான். இத்துடன் நாராயணன் ஒரு கையில் கண்ணைக் கூசும் காந்தி கொண்ட சுதர்சனம் என்ற சக்கரம் ஏந்தியிருந்தார்; மற்றொரு கையில் இடி முழக்கம் போல் ஒலி செய்யும் சாரங்கம் என்ற வில்லை வைத்திருந்தார்; கௌமோதகி என்ற கதை ஒரு கையில் இருந்தது; வித்யாதரம்

என்ற வாளை வேறொரு கையில் பிடித்திருந்தார்.

பரிவாரங்கள் பல சூழத் திகழ்ந்த திருமால் ஓரடியால் புவியை அளந்தார். தம் உடலால் வானத்தை அளாவிக் கைகளால் திக்குகளைமூடி நின்றார். இரண்டாவது அடிவைக்க விண்ணுலகே போதவில்லை. மூன்றாவது அடி வைக்க இடமொன்றும் இருக்கவில்லை. பரமனின் காலடி மஹர்லோகம், ஜனலோகம், தபோலோகம் எல்லாவற்றையும் தாண்டிப் பிரமன் வசிக்கும் சத்தியலோகத்தை எட்டியது. பிரமனும் அங்கிருக்கும் ஏனைய முனிவர்களும், வேதங்களுக்கும் உபவேதங்களுக்கும் ஆன தேவதைகளும் அந்தத் திருப்பாதத்தைத் தரிசித்தனர். பிரமன் அச்சேவடியை நீரால் அபிஷேகம் செய்தார். அந்த நீர்தான் கங்கையாகக் கீழ் இறங்கியது.

மறுபடியும் ஹரி தம் உடலை வாமனனாய்க் குறுக்கிக் கொண்டார். பிரமன் முதலியோர் அவரைப் பூஜித்தனர். அச்சமயம் தம் அரசனுடைய நாட்டைத் திருட அந்தண வேடம் பூண்டு வந்த விஷ்ணுவை அசுரர்கள் எதிர்த்தனர்.



பம்பாயில் கலைவளர்ச்சியில் ஈடுபட்டுள்ள கலாஸதனின் ஆதரவில் சமீபத்தில் இக் கலைக்கூடத்தின் மாணவி குமாரி அனுராதாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் மாதுங்காவிலுள்ள போத்தர் கல்லூரிமண்டபத்தில் ரசிகர்கள் முன்னிலையில் வெகு சிறப்பாக நடந்தேறியது. குமாரி அனுராதாவின் கலை ஆர்வம் வளர்க.

ஆனால் அவர்களை பரமனின் சேவகர்கள் அழித்து விட்டார்கள். மிஞ்சியவரைப் பலி தடுத்தான். "நம்மை மேல் தூக்கிய கடவுள் இன்று மற்றவருக்கு மருந்தாக இருக்கிறார். இது காலத்தின் வேறுபாடு. நமக்கு வரும் நல்வேளையை நாடி இப்பொழுது பொறுத்திருப்போம்" என்று சமாதானப்படுத்தினான். இச்சொல்லைக் கேட்ட அசுரர்கள் கீழ் உலகுக்கு ஏகினர். கருடன் பலியை வருண பாசத்தால் கட்டினான். வாமனனான விஷ்ணு பலியிடம் "மூன்றடி தருவேன் என்றனை, இரண்டடியில் உலகெலாம் அளந்தேன். மூன்றாவது அடிக்கு இடம் கொடுக்க உன்னால் இயலவில்லை. ஆகவே சொன்ன சொல்லைக் காப்பாற்றத் திறமையற்ற உனக்குக் கீழ் உலகில் இருப்பிடம் தயாராகியுள்ளது" என்று உரைத்தார்.

இதைக் கேட்ட பலி சிறிதும் மனம் கோணவில்லை. "ஈசனே! உம்மை ஏமாற்ற வேண்டும் என்ற எண்ணத்துடன் நான் நிலத்தைத் தானம் செய்யவில்லை. நான் அளித்த வாக்கை நிறைவேற்றுகிறேன். மூன்றாவது அடியை என் தலை மீது வையுங்கள். மூவுலகை இழந்ததற்கும், பாசத்தினால் கட்டுண்டதற்கும், செல்வங்கள் சிதறிப் போனதற்கும், தேடி வந்த தீமைக்கும் உமது தண்டனைக்குமே நான் அஞ்சவில்லை; ஆனால் என்னைத் தீயவன் என்று அழைக்காதீர்கள். பெரியோர் அளிக்கும் தண்டனை நன்மைக்கே. எதிரி என்ற வேடத்தில் வந்த நண்பரன்றோ நீங்கள்! எனது பாட்டனான பிரஹ்லாதன் எண்ணற்ற துன்பத்தை அனுபவித்தும் உமது திருவடியே சரணம் என்று நம்பி நன்மையை அடைந்தார். செல்வத்தால் செருக்கெய்திய என்னை நற்பயனை (உம்மிடம்) நெருங்க வைத்திருக்கிறது" என்று பணிவுடன் பேசினான்.

அச்சமயம் அங்கு விஷ்ணுபக்தரில் முதல்வனான பிரஹ்லாதனே வந்தனன். கட்டுண்ட பலி அவனை வந்தனம் செய்யத் திறமையற்றிருந்தான். பிரஹ்லாதன் விஷ்ணுவை வணங்கி விட்டு அவரிடம் பேசினான்.

"அன்று 'விச்வஜித்' என்ற வேள்விக்குப் பயனாக பலிக்கு இந்திர பதவியை அளித்தீர்; இன்று அதைப் பறித்து விட்டீர். நீங்கள் செய்வதே நலம் என்பது என் கொள்கை. மனத்தை மயக்கும் செல்வத்தைப் பறித்ததே அருள். உம்மை வணங்குகிறேன்" என்றான். பலியின் மனைவி விந்தியாவளியும் விஷ்ணுவினிடம் பேசினான்: "விளையாட்டாக மூவுலகைப் படைத்தீர். உமது மாயை

யால் மூடுண்ட மதியினர் தங்களுக்கே விரும்பினவாறு நடக்கத் திறமுண்டென்று எண்ணுகின்றனர். அவர்களால் உமக்கு எதைத் தர முடியும்?'' என மொழிந்தாள். பிரமனும் அங்கு வந்து பலியை விடுவிக்க வேண்டுமென்று வேண்டினார். அனைத்தையும் கேட்ட நாராயணன் தமது உண்மையான மனப்போக்கை அப்பொழுதுதான் யாவரும் அறிய வெளியிட்டார்.

''பிரமனே! எவனுக்கு என் அருளை அளிக்க விரும்புகிறேனோ, அவனுடைய செல்வத்தைப் பறிப்பேன்; இல்லையேல் செருக்குண்டு என்னை மறந்து விடுவான். தணிந்திருப்போருக்கு எனதருள் எந்நாளும் உண்டு. தைத்தியருக்கும் தானவருக்கும் அரசனான இந்த பலி தாண்டுதற்கு அரிதான எனது மாயையைத் தாண்டி விட்டான். அதனால்தான் இந்நிலையிலும் துன்புறாது அமைதியுடன் விளங்குகின்றான். இவ்வேந்தன் வறுமையால் வருந்தியும், பதவியில் நின்று நழுவியும், எதிரியால் கட்டுண்டும், சுற்றத்தாரால் கைவிடப்பட்டும், வேதனை அடைந்தும், ஆசிரியனால் அவமதிக்கப்பட்டும், தான் கொடுத்த வாக்கினின்று சிறிதேனும் விலகவில்லை. போலி தர்மத்தை நானே கூறியும் உண்மையை உதறாத உத்தமன். இவன் இறுதியில் தேவருக்கும் கிடைக்காத என்னிடத்தை அடைவான் என்பது திண்ணம். அதற்கு முன்பு, அடுத்த மன்வந்தரத்தில் என்னுடைய ஆதரவில் இந்திரனாக விளங்கப் போகிறான். அதுவரை 'சுதலம்' என்ற கீழ் உலகை ஆண்டு வரட்டும். என்னுடைய அருளால் அங்கிருப்போர் இன்னலும் வியாதியும் சோர்வும் துயரமும் வாராது வாழ்வார். இந்திரசேனனே! (பலியின் மற்றொரு பெயர்) உனக்கு நன்மை உண்டாகுக. கீழுலகம் செல்வாய். உன்னை ஒருவரும் வெல்லமுடியாது. உன் ஆணையை மீறுவோர் எனது சுதர்சனத்துக்கு இரையாவார். என்னை அங்கேயே நீ எப்பொழுதும் காண்பாய். கதை ஏந்திய கையுடன் நான் அங்கு நிற்பேன். எனது தரிசனத்தால் தீமையே உனது மனத்தில் தோன்றாது.''

பரமனது மொழிகளைக் கேட்ட பலி கண்ணீர் ததும்பக் கைகூப்பி அவரை வணங்கினான். ''என்னே! எனது பாக்கியம்! வணங்க வேண்டுமென்று குனிந்தபொழுதே தேவரும் அடையாத பெரும் பேற்றை இந்த ஈன அரக்கனுக்கு அளித்தீர்'' என்று துதித்தான்.

பரமன் சொல் கேட்ட பிரஹ்லாதனும் பரவசம் அடைந்தான். ''உலகெலாம் போற்றுவோரால் போற்றப்படும் தேவரீர் எங்கள் கோட்டைக்குக் காவலாளாக சுதலத்திலே இருப்பீர் என்பது இதுவரை நிகழாத ஆச்சரியம்! அசுரராய்ப் பிறந்த எங்களுக்கு உங்கள் அருள் கிடைத்தது அரும் பெரும் பாக்கியம். ஆயினும் நினைத்ததை நல்கும் கல்பக விருக்ஷம் போல், அண்டினவரை ஆதரிக்கும் தன்மையுடைய உங்களுக்குப் பக்தரிடம் பிரியம் இருப்பதில் வேற்றுமை ஒன்றும் இல்லை'' என்று புகழ்ந்தான். பிரஹ்லாதனையும் ஹரி சுதலத்துக்கே போகும்படி கட்டளையிட்டார். கதையும் கையுமாய் எப்பொழுதும் அங்கு தரிசனம் தருவதாய் வாக்களித்தார்.

சுகர் பரீக்ஷித்துக்குத் திரிவிக்ரமன் கதையை எடுத்துரைத்து விட்டு, ''அரசே! அனந்தனின் பெருமைக்கு எல்லை இல்லை. ஓங்கி உலகளந்த உத்தமனின் பெருமையைச் சொல்வதைவிட மூவுலகிலிருக்கும் மண்ணின் அணுவை எண்ணுவது எளிது. இந்தக் கதையைக் கேட்பவரும் சொல்பவரும் பரமபதத்தை அடைவார். எச் சடங்கிலும் இக்கதையை உரைத்தால் சடங்கெல்லாம் சுபமாகும் என்பது திண்ணம்'' என்று கூறினார்.

## அருள் வாக்கு

ஈசுவரன் கருணைக் கடல்; ஏழை பங்காளன்; ஆழ்வார்கள் எல்லோரும் பக்தி மிகுந்தவர்கள். மிகவும் படித்தவர்கள். எல்லோரும் பாசுரங்கள் பாடியவர்கள். ஈசுவரனுடைய அருளைப் பெற்ற நாயன்மார்களில் பல பேர்கள் ஒன்றும் தெரியாதவர்கள். எழுத்து வாசனை அற்றவர்கள். சிலருக்குப் பேசக் கூடத் தெரியாது. மீன் பிடிக்கிறவர், வேடன், சலவைத் தொழிலாளி, மரம் வெட்டுகிறவர் இப்படிப்பட்டவர்களிடத்திலும் கருணையைப் பொழிந்து மோக்ஷத்தை அளித்திருக்கிறார். எல்லோராலும் சுலபமாக பக்தியின் மூலம் அடையக் கூடிய பரம்பொருள் பரமசிவன். அவனை நினைத்து மனம் உருகிக் கரைய வேண்டும். நம் ஜென்மம் சாபல்யம் ஆகிவிடும். ஈசுவரனிடத்தில் பக்தி பெருகி ஒரு தும்பைப் பூவை எடுத்துப் போட்டாலும் போதும். அந்தக் கைங்கரியம் நமக்குச் சொர்க்கத்தையே வாங்கித் தந்து விடுகிறது.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# வட்டமேஜை

## குடும்பக் கட்டுப்பாடு

ராஜாஜி 1-3-59-க் தேதி கல்கியில் கூறியுள்ள ஆலோசனைகள் ஒவ்வொரு தன்மானமுள்ள இந்தியப் பிரஜையும் சிந்திக்க வேண்டிய விஷயமாகும். அதர்மம் நாளுக்கு நாள் பெருகும் இக்காளில் சர்க்கார் அமுலாக்க விரும்பும் இத்தகைய சீர்கேடான பிரசாரத்தை முறியடிப்பதற்கு எல்லா மடாதிபதிகளும் நாட்டின் முன்னேற்றத்தில் அக்கறை உள்ள எல்லாக் கட்சித் தலைவர்களும் ஒன்றுசேர்ந்து பாடுபட வேண்டும்.

கோவை-5
27-2-59

எஸ். வி. வரதராஜ சர்மா

## தீர்க்கதரிசனம்

ஒவ்வொரு வாரமும் விவசாயத்துக்குச் சர்க்காரின் ஆத்திரப் போக்கால் நேரவிருக்கும் 'கதி'யைப் பற்றிப் பன்னிப் பன்னிச் சொல்லியும் அத்தனையும் யார் காதிலோ ஊதிய சங்காகவே தோற்றுகிறது. தூங்குகிறவர்களை எழுப்பலாம். ஆனால் தூங்காமல் பாசாங்கு செய்கிறவர்களை எப்படி எழுப்ப முடியும்?

இப்பொழுதே நிலச் சொந்தக்காரர்கள் ஊக்கம் இழந்து நிற்கின்றனர்.

சோஷலிச சமுதாயம் என்றால் எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவா அல்லது கடைத் தேங்காயைப் 'பறித்து' வழிப்பிள்ளையாருக்கு 'அருளுவதா?'

சென்ற கால வரலாற்று நிகழ்ச்சிகள் அனைத்தும் ராஜாஜி அவர்களின் 'தீர்க்க தரிசனம்தான் சரி' என்பதை நிதர்சனமாக்கி விட்டன.

யார் கேட்டாலும் கேட்காவிட்டாலும், போற்றினாலும் தூற்றினாலும் வள்ளுவர் வழிவந்த ராஜாஜி, அவரைப் போலவே மிருதிக் கண் இடித்துரைத்து வருகிறார்!

குடும்பக் கட்டுப்பாடு என்ற பெயரால் கர்ப்பத்தடை என்ற கொள்கையைப் பற்றிக் கவலையுமேகொடு நாளுக்காகக் கட்டியிருப்பது யார் கண்ணில்—கருத்தில் படும்?

தானே உணருகிறவன், கெட்டிக்காரன்; சொல்லிச் செய்கிறவன் திறமைசாலி; எடுத்தும் இடித்தும் சொல்லியும் கேளாதவன் யாரோ அறியேன் பராபரமே!

திருவாவடுதுறை
28—2—59

'வீரம்'

## செந்தமிழ் விருந்து

'கல்கி' பத்திரிகையிலே சென்ற சில வாரங்களாகப் பிரசுரமாகிவரும் 'கதம்பக் கவி மலர்கள்' என்னும் அம்சம் எல்லோராலும் பாராட்டப் பெற வேண்டியது. அதிலும் விசேடமாக, தமிழ் கற்கும் மாணவர்க்கும் கற்பிக்கும் ஆசிரியருக்கும் இக்கட்டுரைகள் பயன் தருவனவாக விளங்குகின்றன. ''ஆற்றங் கரையிலே'' என்ற பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களின் இலக்கியக் கட்டுரைகளையும், பின் பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்களின் இலக்கியக் கட்டுரைகளையும் தமிழர்முன் படைத்துச் செந்தமிழ் விருந்தளித்த 'கல்கி' பத்திரிகை; தற்போது தமிழ் இலக்கியப் பூங்காவிலே ஆங்காங்கு மணம் வீசி மிளிரும் தனிப்பாடல்களைத் தொகுத்துத் தர முன்வந்திருப்பது சாலவும் பொருத்தமானது.

இலங்கை
20-2-'59

எஸ். வி. கணபதிப்பிள்ளை

## விசித்திரப்போக்கு

நில உடைமைக்கு உச்சவரம்பு வந்து விட்டது என்ற பயத்தினால் பெரும் நிலச்சுவான்தார்கள் தங்கள் நிலங்களை விற்று விட்டு, விவசாயத்துக்கு முழுக்குப் போட்டு விட்டு நகரங்களுக்குச் சென்று விட்டார்கள். கூட்டுக் குடும்பங்கள் எல்லாம் பிரிவினை செய்யப்பட்டு வருகின்றன, சட்டத்துக்குப் பயந்து கொண்டு. இன்னும் சிலர் வேறு தொழில்களில் முதலீடு செய்து விட்டனர். நிலமே இல்லாதவர்கள் தங்கள் ஊதிய உயர்வுகளி



பத்மபூஷண் பட்டம் பெற்ற காசி அரசாங்க சமஸ்கிருதக் கல்லூரி பேராசிரியர் திரு டி. ஆர். வெங்கடாசலமூர்த்தி.



இவ்வருஷம் சாகித்திய அகாடமியின் இலக்கியப் பரிசு பெற்ற ஆசிரியர்களுக்குப் பிரதமர் நேருஜியவர்கள் அப்பரிசுகள் வழங்கப் பட்டன. 'சக்கரவர்த்தித் திருமக'னுக்கான பரிசைப் பெற ராஜாஜி அவர்கள் தேகநிலை காரணமாகப் புது தில்லி செல்ல இயலவில்லை. அவர் சார்பில் அவரது புதல்வியார் ஸ்ரீமதி லக்ஷ்மி தேவதாஸ் காந்தி அவர்கள் மேற்கூறிய இலக்கியப் பரிசைப் பெற்றுக் கொண்டார். ஸ்ரீமதி லக்ஷ்மி 'சக்கரவர்த்தித் திருமகனை' ஹிந்தியில் மொழிபெயர்த்திருக்கிருர் என்பதையும் நேயர்களுக்குச் சொல்லி வைக்கிறோம்.

---

ளுலும், அரசாங்கம் தங்களுக்கு நிலங்களைத் தரப்போகிறது என்ற நம்பிக்கையாலும் உயிர் வாழ்கின்றனர்.

ஆனல் நடுத்தர மக்கள்...?

விவசாயத்தை விட்டுவிட முடியாத நிலைமை. வேறு தொழில்களுக்கும் செல்ல முடியாத நிலைமை. தங்கள் பரம்பரைத் தொழிலாகிய பயிர்த் தொழில் தங்களுக்குப் போதிய வருவாயை அளிக்காதது கண்டு மனம் வருந்தியிருக்கிற காலத்தில் நெல் கொள் விலை நிர்ணயம் செய்யப்பட்டு விட்டது.

சென்ற ஆண்டு விவசாயத்தின் மூலம் இருநூறு வருவாய் பெற்ற ஒரு குடும்பம் இப்போது நூற்றிருபது ரூபாய்தான் பெறுகிறது.

விலைவாசிகள் உயர்வு! விவசாயக் கருவிகள் விலை உயர்வு! விவசாய மூலப் பொருள்கள், உரம் போன்றவை விலை உயர்வு! தொழிலாளிகள் கூலி உயர்வு! முன்பு அரசாங்கம் விலைக் கட்டுப்பாடு செய்திருந்த பொருள்கள் அனைத்தும் இப்போது முன்னைய விலையைவிட மூன்று பங்கு அதிக விலைக்கு விற்கின்றன. நெல்லுக்கு மட்டும் கண்ட்ரோல்! விசித்திரமாக இல்லையா அரசாங்கத்தின் போக்கு?

நெய்வாசல் — நெ. ஆ. சபாநாயகன்
4-3-59 — மு. ராசரத்தினம்

## இருந்தும் பயனில்லை!

பாலக்காட்டில் உள்ள புதிய கல்பாத்தி தபால் கிளை நிலையம் ஆரம்பித்துச் சுமார் இரண்டு வருடகாலம் ஆகிறது. ஆனல் இக் கிளைத் தபால் நிலையத்தில் பொதுஜனங்களுக்குத் தேவையான புக்போஸ்ட், சேவிங்ஸ் பாங்கு, போஸ்டல் ஆர்டர், பார்சல் போன்றவைகளை இன்ஷூரன்ஸ் செய்வது முதலிய வசதிகள் இல்லாத காரணத்தால் பொதுமக்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆதலால் மேலே குறிப்பிட்டுள்ள வசதிகளை இக்கிளைத் தபால் நிலையத்தில் செய்து கொடுக்க முன்வர வேண்டும்.

பாலக்காடு
2?—2—59 — பி. எஸ். மணியன்

## தமிழாசிரியர் தேவை

செங்கோட்டை நகர அரசினர் ஆரம்ப உயர்நிலைப்பள்ளி (டி.எம். ஸ்கூல்) தோன்றிச் சுமார் நூறு வருடங்கள் வரை ஆகின்றது. முதல் வகுப்பு முதல் மூன்றும் படிவம் (எட்டாம் வகுப்பு) வரை இருக்கின்றது. ஐந்நூறு மாணவர்களுக்கு அதிகமாகவே படித்து வருகின்றனர். இந்தப் பள்ளியில் தமிழாசிரியர்கள் இதுவரை நியமிக்கப்படவில்லை. அரசாங்கத்துக்கும் இதைப்பற்றிப் பள்ளி நிர்வாகிகள் அறிவித்த பின்னரும் இதுவரை ஆசிரியர் நியமிக்கப்படவில்லை. ஆதலால் 59-60 தொடக்கத்திலேயே (விடுமுறைக்குப் பின் பள்ளி திறக்கப்படும்பொழுது) தமிழாசிரியர் ஒருவரை நியமிக்க வேண்டும்.

கட்டடங்கள் பழைமையானதாகவும் இடநெருக்கடியாகவும் இருப்பதால் பழுது பார்க்கவும் புதிய கட்டடங்கள் கட்டவோ அல்லது அதற்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுக்கவோ கல்வி இலாகா அதிகாரிகள் முயற்சி எடுக்க வேண்டும்.

செங்கோட்டை
26—2—59 — கவிஞர் முழுமதி

# படித்துப் பாருங்கள்

## பாவை விளக்கு

பலப் பல நிகழ்ச்சிகளையும், பலவித மான பாத்திரங்களையும், பல்வேறு உணர்ச்சிகளையுங் கொண்ட பெருங் கதையைத்தான் நவீனம் (நாவல்) என்கிறோம். அந்த நவீனம் இரு வகைப்படும். ஒன்று புத்தகவடிவில் வெளியிடுவதற்கு ஏற்றது. இரண்டாவது, பத்திரிகையில் தொடர் கதையாக வெளியிடுவதற்கு ஏற்றது.

புத்தகமாக வெளிவரும் நவீனம் அடுத் தடுத்து வரும் நிகழ்ச்சிக் கோவைகளை அதிகமாகக் கொள்ளாமல், உணர்ச்சிக் குவியல்களின் கொந்தளிப்பில், உள்ளப் போராட்டங்களின் கெட்டுயிர்ப்பில், ஒரே மூச்சாகச் செல்லும் கதைப் போக்கைக் கொண்டதா யிருக்கலாம்.

ஆனால், பத்திரிகையில் பிரதி வாரமும் தொடர்கதையாக வெளிவரும் நவீனம் உணர்ச்சி அம்சத்தில் எத்தனை சிறந்ததா யிருந்தாலும், நிகழ்ச்சிகளின் பின்னலில் தான் உறுதியாக நிற்க வேண்டும்.

நேராக உற்பத்தி ஸ்தானத்திலிருந்து கடலில் போய்க் கலக்கும் ஒரு நதியைப் புத்தகமாக வரும் நவீனத்துக்கு உதாரண மாகக் கூறலாம். இடையிடையே பல கால்வாய்களாகப் பிரிந்து, பண்படுத்திப் பயிர் செய்யப்பட்ட கழனிகளிலெல்லாம் பாய்ந்து வளப்படுத்தியவாறே சென்று கடலில் கலக்கும் இன்னொரு நதியை, பத்திரிகையில் வரும் தொடர்கதைக்கு உதாரணமாகச் சொல்லலாம். நேராகச் செல்லும் நதியைவிட, வயல் வரப்புகளில் பாய்ந்து வளப்படுத்திச் செல்லும் நதிக்கு வேலை அதிகம். அதேபோல், புத்தகமாக வரும் நவீனத்தை எழுதுவது ஒருவிதத் தில் சிரமந்தான் என்றாலும், பத்திரிகைத் தொடர்கதை எழுதுவது இன்னொரு விதத்தில் அதிகச் சிரமம்.

மேற்கூறிய இரண்டு வித இயல்புகளை யும் தனித்தனியே பல நவீனங்களில் காணலாம். ஆனால் இரண்டு இயல்பு களையும் ஒரே நூலில் காண்பது அரிது. அவ்வாறு இரண்டு இயல்புகளையும் ஒருங்கே காணவேண்டுமானால் பாவை விளக்கு நவீனத்தைப் படிக்க வேண்டும்.

ஆசிரியர் அகிலன் அவர்கள் "கல்கி" பத்திரிகையில் தொடர்கதையாக இந்நவீ னத்தை எழுதினார் என்றாலும், இரண்டு வித இயல்பின் சிறப்புக்களையும் இதில் காண முடிகிறது.

மனித இதயத்தின் சாயல் படியாத வெறும் சம்பவம் ஒன்றைக்கூட இந்நவீ னத்தில் காண முடியாது. மனித இதயத் தின் ஒலியோடு, மனிதப் பண்புகளை யெல் லாம் அழகாகச் சொல்லுகிறது.

எழுத்தாளன் தணிகாசலம், அவன் மனைவி கௌரி, தணிகாசலத்தின் வாலிப உள்ளத்தில் சலனத்தை எழுப்பி, பிறகு அவனுக்கு உயர்ந்த எண்ணத்தை ஊட் டிய தேவகி, திடீரென்று அவனது மனத் தில் புகுந்து அவனை ஆட்டி அலைக்கழித்த ஆடலழகி செங்கமலம், அவனையும் அறி யாமல் அவனது இதயத்தில் பங்கு கொண்ட உமா — இத்தனை பாத்திரங் களும் இந் நவீனத்தில் சுற்றிச் சுற்றி வரு கிறார்கள்; இந்திர ஜால, மகேந்திரஜால உணர்ச்சியை எழுப்புகிறார்கள். ஆசிரியர் நம் வாழ்வில் நடக்கக் கூடாத எதையும் நவில முயலவில்லை; காணாத காட்சிகளைக் காட்டக் கருதவில்லை; மனித இதயத்தில் பிரதிபலிக்காத உண்மை எதையும் உரு வாக்க நினைக்கவில்லை; மனித இயல்புக்குப் புறம்பான எண்ணங்களை எங்குமே எழுப்ப முயலவில்லை. அதுவே இந்நவீனத் துக்கு நல்ல வரவேற்பைத் தந்தது, வாசகர்களிடையே மாபெரும் வெற்றி யையும் பெற்றது.

இந்நவீனத்தின் கதாபாத்திரங்களின் உள்ளங்களில் பொங்கும் பண்பு, பரிவு, அன்பு முதலியவை யெல்லாம் அனைத் துலகும் பரவும் சக்தி வாய்ந்தவை. அநா வசியம் என்றோ, சம்பந்தம் இல்லை என்றோ கருதக் கூடிய கதாபாத்திரம் ஒன்று கூட இல்லை. ஒவ்வொரு பாத்திர மும் அதனதன் அளவில் பூரணத்துவம் பெற்று விடுகிறது. நல்ல இலக்கிய சிருஷ்டியின் இலக்கணமே அதுதானே!

இந்த நவீனத்தில் வரும் கதாபாத் திரங்கள் யாவரும் நமக்கெல்லாம் நன்கு அறிமுகமானவர்கள். அவர்கள் பொது வாகக் குடும்ப வாழ்விலும், இன்றையச் சமுதாய வாழ்விலும் பங்கு கொண்டு கதைப் பின்னலில் நிறைவையைக் கிளறி விடுகிறார்கள்.

ஆசிரியர் அகிலன் இந்த அரும் பெரும் நவீனத்தின் மூலம் பல அரிய கருத்துக் களைத் தம் அழகிய நடையில் தெளிவாகக் கூறுகிறார்; வேகமாகச் செல்லும் கதைப் போக்கின் இடையே நின்று, சமூகத்தின் தாழ்ந்து கிடக்கும் பகுதிகளிலும், இருண்டு கிடக்கும் சந்து சந்துக்களிலும், ஒளி பரப்பி உயரச் செய்கிறார்.

அகிலன் அவர்களின் தமிழ் நடை தங்கு தடையின்றிச் செல்லும் எளிமை வாய்ந் தது. வன மயிலின் மனமோகன நடையை யும், பரியின் பாய்ச்சல் நடையையும், அவனி அதிரச் செல்லும் மதங் கொண்ட யானையின் பீடு நடையையும் அவரது எழுத்தில் காண முடியும்.

"பாவை விளக்கு" கல்கியில் தொடர் கதையாக வெளிவந்தபோது பல்லாயிரக்

கணக்கான அன்பர்கள் அதைப் பேரார்வத்தோடு படித்து ரசித்தார்கள். மாதக்கணக்கில் அது தொடர்ந்து வெளி வந்ததாகவே தோன்றவில்லை. கதை முடிந்துவிட்ட பிறகுதான் அந்த நினைவு வந்தது.

''பாவை விளக்கு'' இப்பொழுது புத்தக வடிவில் நல்ல பதிப்பாக வெளிவந்திருக்கிறது. எல்லோருடைய நினைவிலும் சதா சுடர் விட்டு ஒளிரும் வண்ணம் ஓவியர் மணியம் அட்டைப்படத்தைக் கவின்பெற உருவாக்கி யிருக்கிறார்.

பிரசுரம்: பொற்கொடி வெளியீடு; விற்பனை உரிமை: பழனி பிரசுரம், 8, பைக்கிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5; விலை ரூ. 10.

## ஐந்து கவிதைத் தொகுதிகள்

இலக்கியத்தில் வசனநடை என்பது தாராளமாகச் செலவு செய்து தாராளமான பயனை அடைவது போலாகும். ஆனால் கவிதை நடை என்பதோ, சிக்கனமாகச் செலவு செய்து தாராளமான பயன் அடைவதைப் போன்றது. இந்த இருபதாம் நூற்றாண்டில் மறுமலர்ச்சிக் கவிஞர்கள் பலர் தோன்றியுள்ளனர். நமது மொழியின் பண்பாட்டையும், இலக்கண மரபையும் மீறாமல் அழகான, எளிமையான, நல்ல கவிதைகளை எழுத முடியுமென்று சில கவிஞர்கள் நிரூபித்து வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

திருச்சி புதுப்புனல் பதிப்பகத்தார் துறைவனின் பொற்சுடர், திரிலோக சீதாராமின் உதயம், சக்தி சரணனின் பனிமுத்தம், கலைவாணனின் விட்டில், வி. துரைசாமியின் அமுதகலசம் என்ற ஐந்து சிறிய கவிதைத் தொகுதிகளை அழகாக வெளியிட்டிருக்கிறார்கள். ஒவ்வொரு தொகுதியிலும் மேலட்டையின் பின்புறம் அந்தந்தக் கவிஞரின் படமும், வாழ்க்கைக் குறிப்பும் சேர்த்திருப்பது நன்றாயிருக்கிறது. துறைவனின் கவிதைகளில் எளிமையோடு கூடிய இனிமையும், திரிலோக சீதாராமின் கவிதைகளில் எழுச்சியும், அருவி பாய்வது போன்ற சொல்லடுக்கும், சக்தி சரணனின் கவிதைகளில் கற்பனை நயமும், உருவகத் தொடர்களும், கலைவாணனின் கவிதைகளில் நல்ல சந்தமும், மரபோடு ஒத்த வழக்கும், நளினமும், துரைசாமியின் கவிதைகளில் காம்பீர்யமும், பண்பும் சிறப்பாக அமைந்து இந்த ஐந்து கவிதைத் தொகுதிகளும் ஐந்து வகையில் உயர்ந்து விளங்குகின்றன.

பஞ்சாமிர்தம் பழனியிலிருந்துதான் கிடைக்குமென்பார்கள். புதுப்புனல் பதிப்பகத்தார் அதை (ஐந்து கவிதை அமுதங்களை) திருச்சியிலிருந்தே அளித்திருக்கிறார்கள். கவிதைகளைப் பிழையில்லாமல் அச்சிட்டிருப்பது பாராட்டத்தக்கது.

விலை: ஒவ்வொரு கவிதைத் தொகுதியும் 75 காசுகள். கிடைக்குமிடம்: புதுப்புனல் பதிப்பகம், திருச்சி-2.

## நண்பன்

திரு சோமு அவர்களை அறிந்தவர்கள் அவரது இனிய நட்புப் பண்பை உணர்ந்து வியக்காமல் இருக்க முடியாது. இவரால் எப்படிப் பலதரப்பட்ட கொள்கையுடையவர்களுடன் எல்லாம் இனிமையாகப் பழக முடிகிறது என்று வியக்காதவரில்லை. அந்தப் பண்பையே விளக்குவதாக அமைந்திருக்கிறது அவர் ஆசிரியராகவுள்ள நண்பன் என்ற பத்திரிகை.

ராஜாஜியின் மரூட்டி தாசன் என்ற இனிய கருத்துச் செறிந்த கதையுடன் ஆரம்பமாகும் முதல் இதழில் மந்திரி திரு பக்தவத்சலம் மந்திரி திரு சி. சுப்பிரமண்யம், டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை, டாக்டர் மு. வரதராசனார், திரு டி. எஸ். சொக்கலிங்கம் முதலிய பிரமுகர்களுடைய கட்டுரைகளும் விளங்குகின்றன. தமிழ் நாட்டுச் சிறுகதை எழுத்தாளர்கள் பலருடைய கதைகளும் இடம் பெற்றுள்ளன. திரு தி. ஜானகிராமன் அவர்களுடைய 'சங்கீத சேவை' நல்லதோர் ஹாஸ்யக் கட்டுரை. சோமு அவர்களின் 'மனிதப் புரவி'யில் திருநெல்வேலி மாவட்ட மண்ணின் மணம் கமழ்கிறது.

இப் பத்திரிகை தமிழ் இலக்கியத்துக்குத் தொடர்ந்து நல்ல சேவை செய்ய வேண்டும் என்று விரும்புகிறோம்.

தனிப் பிரதி: 30 காசு. ஆண்டுச் சந்தா: ரூ. 3—60. கிடைக்குமிடம்: 59. பிராட்வே, சென்னை-1.







## ஸ்ரீமான் கூனனின் விசித்திர வியாதி

தான் கீல்வாதத்தினால் அவதிப் படுவதாக எண்ணினான் ஸ்ரீமான் கூனன். டாக்டரிடம் ஓடினான். அவனை நன்கு பரிசோதித்துப் பார்த்துக் களைத்தாரே தவிர அந்த விசித்திர வியாதியை அவரால் கண்டுபிடிக்க முடிய வில்லை. திடீரென அவருக்கு ஒரு யோசனை உதித்தது: அவன் தோள்பட்டைகளில் ஏற்பட்ட நோயின் காரணம். சுருங்கிப் போனதால் இறுக் கமான அவன் கோட்டுதான்! தம் அபிப்ராயத்தை வெளி யிட்டார்: "நீங்கள் வாங்கும் ஒவ்வொரு கஜத் துணியிலும் 'ஸான்போரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்று கவனித்து வாங்கினால் பல சலவைக ளுக்குப் பிறகும் உங்கள் ஆடை கள் உடம்புக்குப் பொருந்தாத படி ஒருபோதும் சுருங்காது. இம்மாதிரி மர்ம வியாதியும் உங்களைப் பிடிக்காது."

லேபில் மேல் ·SANFORIZED· என்ற முத்திரையுள்ளதா என்று பாருங்கள். உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்காது.

'ஸான்போரைஸ்ட்' என்ற ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்கின் சொந் தக்காரர்களான க்ளுயட் பீபாடி அண்டு கோ. இன்கார்ப்பொரேடட் (வரை யறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏவில் இணைக்கப் பெற்றது) அவர்க ளால் இந்த விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இந்தக் கம்பெனியின், 'சுருங் காது' என்பதற்கான கடும் நிபந்தனைகளுக்குட்பட்டுத் தயாரிக்கப்படும் துணி களில் மட்டுமே 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க் உபயோகிக்க அனும திக்கப் படுகிறது.

விவரங்களுக்கு: 'ஸான்போரைஸ்ட்' ஸர்வீஸ், 95, மெரீன்டிரைவ், பம்பாய்-2.

SAN-58-SA-TAM

# B·O·A·C COMET 4 JETLINER




## பி.ஓ.ஏ.ஸி. காமட் 4 ஜெட் லைனர்
## ஐரோப்பாவுக்கும், தூரகிழக்கு நாடுகளுக்கும் : ஏப்ரல் மாதத்தில் இந்தியாவிற்கு விஜயம் செய்கிறது

இப்பொழுதே உங்கள் பிரயாணத்திற்கு வேண்டிய டிக்கட்டுகளை புக் செய்யுங்கள். எங்கு செல்ல வேண்டுமெனத் திட்டமிட்டாலும், பி.ஓ.ஏ.ஸி. ஜெட்லைனர்கள் உங்களுக்காக காத்திருக்கின்றன. ஏப்ரல் மாதம் முதல் பி.ஓ.ஏ.ஸி. காமட் 4 விமானங்கள், இந்தியாவிலிருந்து இங்கிலாந்து ஐரோப்பா, மற்றும் தூரகிழக்கு நாடுகளுக்கும் பறந்து செல்லும். வாயு வேகமுள்ள ஜெட்-ப்ராப் பிரிட்டானியா விமானங்கள் முக்கியமான ஆகாய மார்க்கங்களில் ஏற்கெனவே பறந்து சென்று கொண்டிருக்கின்றன. ஜெட் லைனர் மூலம் ஒவ்வொரு கண்டத்திற்கும் பிரயாணம் செய்ய பி.ஓ.ஏ.ஸி.யாரால்தான் பறந்து செல்ல இயலுகிறது.

நேர்த்தியான ஜெட் லைனர்களுக்கும், அருமையான சர்வீஸுக்கும் பி.ஓ.ஏ.ஸி. விமானங்களில் பறந்து செல்லுங்கள். பி.ஓ.ஏ.ஸி.யாரால் நியமிக்கப்பட்ட உங்கள் உள்ளூர் ஏஜெண்டையோ அல்லது பி.ஓ.ஏ.ஸி. பம்பாய், கல்கத்தா, டில்லி, மதராஸ் இவைகளையோ விசாரித்து விவரமறிந்து கொள்ளுங்கள்

உலக முழுவதிலும் பி.ஓ.ஏ.ஸி.

# B·O·A·C

உங்கள் நலனைப் பேணுகிறது



பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேய்ஸ் கார்பரேஷன்

# பாண்டிமாதேவி

அத்தியாயம் 34

## இடையாற்று மங்கலத்தில் ஓர் இரவு

'இடையாற்று மங்கலத்துக்குப் போய் அங்கே நிலவறையில் மகா மண்டலேசுவரர் ஒளித்து வைத்திருக்கும் ஆயுதங்களைக் கோட்டாற்றுப் படைத் தளத்துக்குக் கிளப்பிக் கொண்டு வந்துவிட வேண்டு' மென்று — தளபதி தனக்குக் கட்டளை இட்ட போது ஆபத்துதவிகள் தலைவன் மகர நெடுங் குழைக் காதன் அதற்கு உடனே ஒப்புக் கொள்ளவில்லை.

"மகா சேனாதிபதி அவர்கள் கூறுவது போல் இது அவ்வளவு இலேசான காரியமாகப்படவில்லையே எனக்கு? இடையாற்று மங்கலத்துக்குப் போய் நிலவறைக்குள் புகுந்து ஆயுதங்களை வெளியேற்றிப் பறளியாற்றைக் கடந்து இங்கே கொண்டு வர விடுகிற அளவுக்குப் பாது காப்புக் குறைவாக மகா மண்டலேசுவரர் வைத்திருக்க மாட்டார் என்று எனக்குத் தோன்றுகிறது!" என்று தன் சந்தேகத்தைத் தெரிவித்தான் அவன்.

"குழைக்காதரே! நீங்கள் சொல்வது சரிதான். இது ஒன்றுமட்டுமில்லை; மகா மண்டலேசுவரருக்கு எதிராக நாம் எந்தக் காரியத்தைச் செய்யத் தொடங்கினாலும், அது நமக்கு இலேசான காரியமாக இருக்காது. கடினமாகத்தான் இருக்கும். ஆனால் கடினமாக இருக்கு மென்பதற்காக நாம் சும்மா இருந்து விடவும் கூடாது. முடிந்ததைச் செய்துதானாக வேண்டும்."

"என்னால் முடிந்தவரை முயன்று பார்க்கிறேன். உதவிக்கு இங்கிருந்தும் சிலரை அழைத்துக் கொண்டு





போகிறேன்" என்று குழைக்காதன் இணங்கியதும் தளபதி அவனுக்குச் சில விவரங்களை விளக்கினான். நிலவறைக்குள் எப்படிப் போவது, எவ்வாறு ஆயுதங்களை வெளியேற்றுவது என்பதையெல்லாம் விவரித்துச் சொன்னான். அன்றிரவு அங்கே படைத்தளத்திலேயே தங்கி விட்டு மறுநாள் வேறு சிலரையும் அழைத்துக் கொண்டு இடையாற்று மங்கலத்துக்குப் புறப்பட்டு விட்டான் குழைக்காதன்.

பறளியாற்றைக் கடப்பதற்கும் ஆயுதங்களைக் கொண்டு வருவதற்கும் சொந்தமாக ஒரு தனிப் படகை ஏற்பாடு செய்துகொள்ள வேண்டுமென்றும், இடையாற்றுமங்கலத்தில் அவர்கள் பிரவேசிக்கும் நேரம் இரவு நேரமாயிருக்க வேண்டுமென்றும் தளபதி வற்புறுத்திச் சொல்லியனுப்பியிருந்தான். ஆபத்துதவிகள் தலைவனும் அவனோடு சென்றவர்களும், அந்தி மயங்குவதற்குச் சில நாழிகைக்கு முன்பே பறளியாற்றங்கரையை அடைந்து விட்டார்கள். அவர்கள் வேண்டுமென்றே மெதுவாகப் பயணம் செய்து வந்ததனால்தான் அவ்வளவு நாழிகையாயிற்று. இல்லையானால் இன்னும் விரைவான நேரத்திலேயே அங்கு வந்திருக்க முடியும். இடையாற்று மங்கலத்துக்குப் பக்கத்தில் பறளியாற்றின் இக்கரையில் கிழக்கு மேற்காகச் சிறிது தூரத்துக்கு ஒரே ஆலமரக் காடு. ஆலமரங்களென்றால் சாதாரணமான ஆலமரங்கள் இல்லை. ஒவ்வொரு மரமும் படர்ந்து பரந்து, வளர்ந்து, பற்பல விழுதுகளை இறக்கிக் கொண்டு மண்ணின் மேல் தனக்குள்ள ஊன்றிக் கொள்ளும் உரிமையை நிலை காட்டும் வயதான மரம். இத்தகைய மூத்து முதிர்ந்த ஆலமரங்களைத் 'தொன்மூதாலம்' என்று பழைய கவிகள் புகழ்ந்திருந்தார்கள். அந்தப் பகுதியின் நதிக்கரை மண்ணில் வெய்யிலின் கதிர்கள் படக் கூடாதென்று இயற்கை தானாகவே அக்கறை கொண்டு வேய்ந்து வைத்த பசுமைப் பந்தல் போல் மண்ணுக்கு விண்ணையும், விண்ணுக்கு மண்ணையும் தெரிய விடாமல் அடர்ந்து செழுமையாய்ச் செம்மையாய்த் தண்மையாய் வளர்ந்திருந்தன ஆலமரங்கள்.

அந்த இடத்தில் இடையாற்று மங்கலத்தை ஒட்டிப் பறளியாற்றங்கரையில் சிறிது தொலைவுவரை பரவி நிற்கும் இயற்கையின் எழில்களை, பசுமையின் செல்வங்களை—வளமையின் வகைகளை—உண்மையாக அனுபவிக்க வேண்டுமானால் ஓவியனின் கண்களும், கவியின் உள்ளமும், ஞானியின் உள்ளுணர்வும், குழந்தையின் பேதைமையும் வேண்டும். அறிவின் எல்லைக் கோடாகிய மகா மண்டலேசுவரரின் இருப்பிடத்தைச் சுற்றிலும் இயற்கை செலுத்துகிற மரியாதைகள்தான் இப்படி மலர்ச் செடிகளாகவும் மரக் கூட்டங்களாகவும், பசுமைப் பெரும் பரப்பாய்த் தோன்றிப் பிரகிருதி என்னும் காணாக் கவிஞன் எழுதாத எழுத்தால் இயற்றி வைத்த பயிலாக் கவிதைகளாய்ப் பரந்து கிடக்கின்றனவோ? இவ்வளவு அழகிலும் அந்தச் சூழ்நிலையில் பறளியாற்றுநீர் ஒலி, பறவைகளின் குரல்கள், மரங்கள் ஆடும் ஓசை, தவிரச் செயற்கையான வேறு மண்ணுலக ஓசைகளே இல்லாத ஒரு தனிமையின் அடக்கம், இடையாற்று மங்கலம் நம்பியின் மன ஆழத்தின் விளங்கிக் கொள்ள முடியாத் தன்மைபோல் வியாபித்திருந்தது.

'மங்கலம்' என்றால் திரு நிறைந்தது, தூயது, அழகியது என்று பொருள் தமிழில். இடையாற்று மங்கலம் அந்தப் பொருட் பொருத்தப் பெருமையைக் காப்பாற்றிக் கொண்டு காட்சியளித்தது.

ஆபத்துதவிகள் தலைவனும் அவனுடன் வந்தவர்களும் பறளியாற்றங்கரை ஆலமரக் கூட்டத்தின் இடையே

நுழைந்தபோது, மாலை நேரமாக இருந்தாலும் பெரிதும் ஒளி குன்றி இருள் படர ஆரம்பித்திருந்தது. வழக்கமாகக் கரையிலிருந்து இடையாற்றுமங்கலத்துக்குப் படகு புறப்பட்டுப் போகும் நேரடியான துறை வழியே செல்வதற்கு அவர்கள் தயங்கினார்கள். ஆற்றில் சிறிது தொலைவு தள்ளிக் குறுக்கு வழியாகப் படகைச் செலுத்திக் கொண்டு போய் இடையாற்றுமங்கலம் விருந்தினர் மாளிகைக்குப் பின்புறம் இறங்குவதற்கு ஏற்றாற்போலச் செல்வதற்குத் திட்டமிட்டிருந்தனர் அவர்கள். அதற்கு முன்னேற்பாடாகத் தங்களுக்கு வேண்டிய படகோட்டி ஒருவனைப் படகோடு புறப்பட வேண்டிய இடத்தில் மறைந்து காத்திருக்கும்படி ஏற்பாடும் செய்திருந்தனர். இருட்டிச் சில நாழிகைகள் கழிந்த பின் புறப்படலாமென்று சொல்லி நதிக்கரை நாணற்புதரிலும் தாழை மரங்களின் அடர்த்தியிலும் படகும் படகோட்டியும் மறைந்திருக்கச் செய்து விட்டு ஆலமரக் காட்டில் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார்கள் அவர்கள்.

தன்னோடு கூடவந்தவர்களைக் கீழே நிறுத்தி விட்டு ஒரு பெரிய ஆலமரத்தின் மேல் விழுதுகளைப் பிடித்துக் கொண்டு தாவி ஏறினான் ஆபத்துதவிகள் தலைவன். மிக உயரமான உச்சிக் கிளையில் ஏறித் தலைக்குமேல் குடைபோல் மூட்டம் போட்டிருந்த இலைகளின் அடர்த்தியை விலக்கிக் கொண்டு தலையை நீட்டிப் பார்த்தான். பறளியாற்றுக்கு அப்பால் இடையாற்றுமங்கலம் தீவும், மகா மண்டலேசுவரர் மாளிகையும், அதன் சுற்றுப்புறங்களும் நன்றாகத் தெரிந்தன. 'தானும் தன்னைச் சேர்ந்தவர்களும் இரவில் தீவுக்குள் போய் நிலவறையில் புகுந்து ஆயுதங்களைக் கடத்திக் கொண்டு எப்படி வெளியேறித் தப்புவது?' என்று மனத்தில் முறையாகத் திட்டத்தை வகுத்துக் கொண்டே ஆலமரத்துக் கிளையில் நின்று மகா மண்டலேசுவரர் மாளிகையையும், அதன் சுற்றுப்புறங்களையும் கண்காணித்தான் அவன். நேரம் வளர்ந்து கொண்டிருந்தது. எவனோ கண்ணுக்குத் தெரியாத மாயாவி ஒருவன் தன் முரட்டுக் கைகளால் ஒளித்து வைத்திருந்த கறுப்புப் போர்வையை எட்டுத் திசையிலும் எடுத்து விரித்துப் போர்த்துவதுபோல் உலகத்தை இருள் தழுவிக் கொண்டு வந்தது. இருள் மாயாவியின் பயங்கரமான சூனியத்தனத்துக்கு வாழ்த்தொலி வழங்குவது போல் ஆந்தைகளின் குரல்கள் பலவாகப் பரந்து மூலைக்கு மூலை ஒலித்தன. இருட்டில் நடமாடும் பிசாசுகளைப் போல் மகர நெடுங்குழைக்காதனும், அவனோடு வந்திருந்தவர்களும், அந்தப் பகுதியில் சுற்றிக் கொண்டிருந்தார்கள். இருட்டிச் சில நாழிகைகள் கழிந்ததும், தாழை மரங்களின் மறைவில், நாணற் புதருக்குள் மறைக்கப்பட்டிருந்த படகை அதிகம் ஒலியுண்டாகி விடாமல் மெல்ல வெளிக் கிளப்பிக் கொண்டு வந்தான் அதற்கு உரியவன். மகரநெடுங்குழைக்காதனும், அவனோடு இருந்தவர்களும் படகில் ஏறி அமர்ந்து கொண்டார்கள். படகு பறளியாற்றில் நகர்ந்து முன்னேறியது. பழக்கமில்லாத அந்தப் புதிய படகோட்டி படகை மெதுவாகச் செலுத்திக் கொண்டு போய் இடையாற்றுமங்கலத்துக் கரையில் விருந்தினர் மாளிகைக்குப் பின்புறம் புதர் அடர்ந்த பகுதியில் நிறுத்தினான். படகு நின்ற இடத்துக்கு நேரே விருந்தினர் மாளிகையின் பின்புறத்து வாயிற் கதவு அடைத்திருந்தது. கதவுக்குக் கீழே வரிசையாகப் படிகள். படிகளில் காலைந்தை நீரில் மூழ்கச் செய்து பறளியாறு பாய்ந்துகொண்டிருந்தது.

“நீங்கள் எல்லோரும் இப்படியே இந்த இடத்தில் இருங்கள். நான் முன் பக்கமாக விருந்தினர் மாளிகைக்குள் புகுந்து வந்து இந்தப் பின்புறத்துக் கதவைத் திறந்து விடுகிறேன்” என்று மற்றவர்களை அங்கேயே நிறுத்தி விட்டு முன்புறம் சென்றான் மகரநெடுங்குழைக்காதன். மரங்களிலிருந்து உதிர்ந்திருந்த இலைச் சருகுகளில் கால் பதிந்தால் எழுகிற சலசலப்பு ஒலி கூடக் கேட்க விடாமல் பம்மிப் பம்மி நடந்து போய் விருந்தினர் மாளிகையில் புகுந்து விட்டான் அவன். காவல் வீரர்களெல்லாம் அந்த இடத்திலிருந்து சிறிதுதொலைவு தள்ளியிருந்த மகாமண்டலேசுவரர் மாளிகையைச் சுற்றி யிருந்தார்கள். அரசுரிமைப் பொருள்கள் காணாமல் போன சமயத்தில்மட்டும் தொடர்ந்து சில நாட்களுக்குத் தீவைச் சுற்றிலும் எல்லா இடங்களிலும் காவல் ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. பின்பு நாளாக ஆக அந்தக் காவல் ஏற்பாடு சுருங்கித் தீவின் பிரதான மாளிகை அளவில் நின்று விட்டிருந்தது. அதனாலும், செறிந்து கனத்த இருட்டும்,

மரங்களின் அடர்த்தியும், தனக்குச் சாதகமாக இருந்ததனாலும் ஆபத்துதவிகள் தலைவன் இடையாற்று மங்கலத்தில் அந்த இரவில் அதிகம் துன்பப்படவில்லை. ஒருவன் வைத்து விட்டுப் போன பொருளை அவனே திரும்பி வந்து அடையாளமாக எடுத்துக்கொண்டுபோகிற மாதிரிக்காரியம் சுலபமாக நடந்தது. தளபதி சொல்லி விட்டிருந்தபடியே எல்லாவற்றையும் செய்தான். விருந்தினர் மாளிகைக்குப் பின்புறம் படகை நிறுத்தி அதற்கு நேரே இருந்த கதவையும் திறந்து வைத்துக் கொண்டது அவனுக்கு வசதியாகப் போய்விட்டது. அவன் முன்னேற்பாடாகக் கையோடு கொண்டு வந்திருந்த தீப்பந்தத்தைக் கூட நிலவறைக்குள் கொண்டுபோய்த் தீக்கடையும் கற்களைத் தட்டிக் கொளுத்திக் கொண்டான். விறகுக் கட்டைகளை மணிக்கயிற்றால் கட்டுக் கட்டாகக் கட்டுவது போல் இரண்டொரு நாழிகைக்குள் அங்கிருந்த ஆயுதங்கள் கட்டப்பட்டன. கட்டப்பட்டதற்கு ஆகிய காலத்தில் நான்கில் ஒரு பங்குகூட அவற்றைப் படகில் கொண்டு வந்து வைப்பதற்கு ஆகவில்லை. விருந்தினர் மாளிகைக்குள் புகுந்து குறுக்கு வழியாகப் பின்புற வாயிலை ஒட்டி நின்ற படகில் கொண்டு வந்து அடுக்கி விட்டார்கள். படகில் பாரம் அதிகமாகிவிட்டது. தன்னைத் தவிர இன்னும் ஒரு ஆள்தான் ஏறிக் கொள்ள முடியும் என்று படகோட்டி உறுதியாகச் சொல்லி விட்டான். அக்கரைக்குப் போய் அடர்த்தியான ஆலமரக் காட்டில் ஆயுதங்களை எங்காவது ஒரு மறைவான இடத்தில் ஒளித்து வைத்து விட்டுத் திரும்பிப் போய் விட்டால் பின்பொருநாளிரவில் வசதியான வாகனத்தோடு வந்து அவைகளைக் கோட்டாற்றுப் படைத்தளத்துக்குக் கொண்டு போய்விடலாமென்பது அவன் திட்டம். தன் திட்டப்படி செய்து வெற்றிகரமாக நடந்து தளபதியிடம் செல்வாக்குப் பெறலாம் என்று அவன் நம்பினான். மனத்தையும், சிந்தனைகளையும், அறிவையும் நம்பாமல் உடல்வன்மையாலேயே வெற்றிகளைக் கணக்கிட்டுக் கொண்டு போகும் மனம் அவனுக்கு.

படகோட்டி ஒரு ஆள்தான் ஏறிவர முடியும் என்று சொன்னவுடன், "ஆற்றில் வேகம் அதிகமில்லை! நீங்களெல்லாம் மெதுவாக நீந்தி அக்கரைக்கு வந்து விடுங்கள். நான் படகில் போய் விடுகிறேன்"— என்று தன்னோடு வந்தவர்களுக்கு உத்தரவு போட்டு விட்டுப் படகில் ஏறிக் கொண்டான் குழைக்காதன். 'கவிழ்ந்து விடுமோ?' என்று பயப்படுகிற அளவு பாரம் இருந்ததனால் நத்தை ஊர்வதை விட மெதுவாகப் படகு செலுத்தப்பட்டது. அதன் காரணமாக ஆற்றில் குதித்து நீந்த ஆரம்பித்தவர்கள் படகு நடு ஆற்றைக் கடப்பதற்கு முன்பே அக்கரையை அடைந்து விட்டார்கள்.

"மகா மண்டலேசுவரரையும், அவருடைய சாமர்த்தியசாலியான அந்த ரங்க ஒற்றனையுமே கண்களில் விரலை விட்டு ஆட்டி ஏமாற்றி யிருக்கிறேன் நான். கேவலம்! இந்த இடையாற்று மங்கலத்தில் வேலைப் பிடித்துக் கொண்டு நிற்கும் நாலைந்து யவனக் 'காவல் நாய்'களா என்னைப் பிடித்து விடப் போகின்றன? நீ சும்மா, பயப்



படாமல் படகை ஓட்டிக் கொண்டு போ அப்பா!" என்று படகோட்டிக்குத் தைரியமூட்டிக் கொண்டிருந்தான் குழைக்காதன். அவனுடைய அந்த இறுமாப்பான பேச்சின் ஒலி அடங்குவதற்கு முன் இருபுறமும் நெருங்கி வந்த ஆபத்துக்கள் அவன் ஆணவத்தை அடக்கி முற்றுப்புள்ளி வைத்தன. சற்றுமுன் அவனால் 'நாய்கள்' என்று வருணிக்கப்பட்ட இடையாற்றுமங்கலம் மாளிகையைச் சேர்ந்த யவனக்காவல் வீரர்கள் வலது பக்கத்திலும், இடது பக்கத்திலுமாக இரண்டு படகுகளில் வேகமாக வளைத்துக் கொண்டு அவனது ஆயுதங்கள் நிறைந்த படகை அணுகிக் கொண்டிருந்தனர். ஆபத்துதவிகள் தலைவன் தன்னை நெருங்கும் ஆபத்தை எண்ணி மலைத்தான். படகை வேகமாக ஓட்டிக் கொண்டு கரைக்குப் போய்விட முடியாமல் பாரம் தடுத்தது. அகப்பட்டுக் கொண்டாலோ அதைவிடக் கேவலம் வேறு

இல்லை. அவனுக்கு மட்டும் கேவலமில்லை. அவனால் தளபதியின் பெயருக்கும் கேவலம். அவன் நினைத்தான். கள்ளிப் பழம்போல் சிவந்துகொடுமை குடியிருக்கும் அவன் கண்கள் கொடூரமாக உருண்டு புரண்டு விழித்தன. ஏற்கெனவே கடுமையான முகத்தில் கொடுமை வெறி கூத்தாடியது. அடுத்த கணம் முன்புறம் பார்த்துப் படகைச் செலுத்திக் கொண்டிருந்த படகோட்டியின் முதுகுக்குமேல் பிடரியைத் தன் இரும்புக் கரங்களால் பிடித்துத் தலைகுப்புறத் தண்ணீரில் தள்ளினான். படகோட்டியின் அலறல் தண்ணீர் ஓசையில் சிறிதாகி மங்கி விட்டது. படகின் ஒரு மூலையைக் காலால் ஓங்கி மிதித்து அது கவிழத் தொடங்கியதும், தண்ணீரில் பாய்ந்து மூழ்கினான் குழைக்காதன்.

தண்ணீர்ப் பரப்பில் மேலாக நீந்தினால் தெரிந்து விடும் என்பதற்காக மூச்சடக்கிக் கரையைக் குறி வைத்து நீரின் ஆழத்திலேயே மூக்குளித்து நீந்தினான் அவன். கடத்திக்கொண்டு வந்த ஆயுதங்களோடு படகைக் கவிழ்த்தது பற்றி அவனுக்குக் கவலை இல்லை. யவனக்காவல் வீரர்களிடம் அகப்பட்டுக்கொண்டு மானத்தையும், பெருமையையும் கவிழ்த்து மூழ்கடித்துக் கொண்டு கேவலப்பட்டு நிற்க நேர்ந்துவிடக் கூடாதே என்பதுதான் இப்போது அவனுடைய ஒரே கவலை. எத்தனையோ ஆபத்துக்களைக் காத்து உதவ வேண்டியவன் அவன். இப்போது அவனுடைய ஆபத்துக்கு உதவ ஆளின்றி ஆபத்தில் மூழ்கி வேகமாக நீந்திக் கொண்டிருந்தான். கனமான பருத்த சரீரம் உடைய அவனுக்குத் தண்ணீரில் மூழ்கி மூச்சடக்குவது கடினமாயிருந்தது. இடையிடையே தலையை வெளியே நீட்டி மூச்சு விட்டுக் கொண்டு மறுபடியும் மூழ்கி நீந்தினான். ஒருவழியாக ஆய்ந்தோய்ந்து போய்த் தள்ளாடிக் கொண்டே கரையை அடைந்து விட்டான். அங்கே முன்பே நீந்தி வந்திருந்தவர்கள், நாணற் புதரில் பதுங்கிக் காத்திருந்தார்கள். குழைக்காதனுக்கு நீந்திவந்த களைப்புத் தீர ஓய்வு கொள்ளக்கூட நேரமில்லை. தன் ஆட்களையும் கூட்டிக் கொண்டு ஆலமரக் காட்டில் புகுந்து ஓட்டம் எடுத்தான்.

* * *

மறுநாள் உலகைப் போர்த்த மெல்லிருட் போர்வை விலகும் அருங்காலை நேரத்தில் மகரநெடுங்குழைக் காதனும் அவன் ஆட்களும் கோட்டாற்றுப் படைத்தளத்தில் தளபதிக்கு முன்னால் நின்றார்கள். குழைக்காதன் கூறியவற்றையெல்லாம் கேட்டு முடித்த வல்லாளதேவன் பெருமூச்சோடு பேசினான்: "குழைக்காதரே! நீங்கள் படகை மட்டும் பறளியாற்றில் தலைகுப்புறக் கவிழ்க்கவில்லை. நீங்களே கவிழ்ந்து விட்டீர்கள். நம்முடைய திட்டத்தையும் கவிழ்த்து விட்டீர்கள். ஆனாலும் பரவாயில்லை. இதை நான் மன்னித்துத்தானாக வேண்டும்."

"மகாசேனாதிபதிக்கு என் நிலை புரிந்திருக்குமென்று நினைக்கிறேன். அந்த ஆபத்தான சூழ்நிலையில் படகைக் கவிழ்த்து விட்டு நான் தப்புவதைத் தவிர வேறு வழியில்லை."

"படகோட்டி என்ன ஆனான்?"

"அவன் அநேகமாக நீந்தித் தப்பியிருப்பான். அவன் அகப்பட்டுக் கொண்டாலும், தப்பினாலும், அவன் மூலம் நம்முடைய எந்த இரகசியமும் வெளிவராது. அவன் எனக்கு மிகவும் வேண்டியவன். 'உன் வாயிலிருந்து இரகசியம் வெளியேறினால் கழுத்திலிருந்து தலையை வெளியேற்றி விடுவேன்' — என்று முன்பே பயமுறுத்தி வைத்திருக்கிறேன்."

"எப்படியானால் என்ன? ஆயுதங்களை அங்கிருந்து வெளியேற்றியாயிற்று. இனிமேல் கவலை இல்லை. நீங்கள் வழக்கம்போல் அரண்மனையில் போய் இருங்கள். மகாராணியாரைப் பாதுகாத்துவரவேண்டும். மகாமண்டலேசுவரருடைய செயல்களிலும் உங்கள் கண்காணிப்பு மறைமுகமாக இருக்கட்டும்" என்று சொல்லி மகரநெடுங்குழைக்காதனை அரண்மனைக்கே மீண்டும் அனுப்பிவைத்தான் தளபதி.

## அத்தியாயம் 35

# ஏனாதி மோதிரம்

மகா மண்டலேசுவரர்மேல் நம்பிக்கையில்லையென்று தென் பாண்டி நாட்டுக் கூற்றத் தலைவர்களின் சார்பில் தாம் கொண்டு வந்த ஒப்புரவு மொழிமாறு ஓலையை மகாராணியார் ஒப்புக் கொள்ளவில்லையென்றதுமே பொன்மனைக் கூற்றத்துக் கழற்கால் மாறனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக

கல்கெமிகோவின்

# காந்தரிடைன்

## கூந்தல் தைலம்



கூந்தலைச் செழுமையாக வளரச் செய்வதில் இணையற்றவை எனப் பண்டைகாலம் முதல் புகழ்பெற்ற சுத்தமான ஆலிவ் ஆயிலும் இதர தாவர எண்ணெய்களும் சேர்ந்து விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. மென்மையான நறுமணம் கொண்டது.

5 & 10 அவுன்ஸ் கொண்ட அழகான பாட்டில்களில் கிடைக்கும்.

கல்கத்தா கெமிகல் கோ. லிட்.,
கல்கத்தா - 29.

CAN-TN-4

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

---

## நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# 'அனாஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

## *சிறந்தது*

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனாஸினைப்' போல் துரிதமாயும் . . . அபாயமின்றியும் நிச்சயமாயும் குணமளிக்க இயலாது. லட்சோப லட்சம் ஜனங்கள் 'அனாஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும், பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனாஸின்' வைத்திருங்கள்.






GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER.

K. 68 (R) TAM.

வந்தது. அதனால்தான் அவர், 'இனி மேல்மகாராணியாருக்கும் நாட்டுக்கும் எங்கள் ஒத்துழைப்புக் கிடைக்காது'— என்று கோபமாகக் கூறிவிட்டு அங் கிருந்து வெளியேறினர்.

ஆனல் அந்தச் சமயத்தில் யாரும் எதிர்பாராதவிதமாக மகாமண்ட லேசுவரரே திடீரென்று அங்கே வந்து விட்டதால் அப்படியே அயர்ந்து போய் நின்று விட்டார் கழற்கால் மாறனர். மகுடியோசையில் மயங்கிக் கடிக்கும் நினைவை மறந்து படத்தை ஆட்டிக் கொண்டிருக்கும் நாகப் பாம்பைப்போல், எந்த மகாமண்ட லேசுவரரை அடியோடு கீழே குழி பறித்துத் தள்ளிவிட நினைத்திருந் தாரோ, அவரையே எதிரே பார்த்து விட்டதும் ஒன்றும் தோன்றாமல் அடங்கி நின்றார் அவர்.

எதிரே நிற்பவர்களை அப்படி ஆக்கி விடுவதற்கு மகாமண்டலேசுவரர் என்ற மனிதரின் நெஞ்சிலும், நினைவு களிலும், கண்களிலும், பார்வை யிலும், — அவ்வளவேன்; ஒவ்வொரு அசைவிலும் தன்னைப் பிறர் அசைக்க முடியாத — தான் பிறரை அசைக்க முடிந்த ஒரு வலிமை இருந்தது. பகை வர்களை அடக்கி விடவும், நண்பர்களை ஆக்கிக் கொள்ளவும் முடிந்த இந்தப் பெரும் பேராற்றலைத் தவம் செய்து அடைந்த சித்தியைப் போல் வைத் திருந்தார் அவர்.

"ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தால் வரும்"

என்று துறவியின் ஆற்றலாகச் சொல் லப்பட்ட அதைத் துறவியாக வாழா மலே இடையாற்றுமங்கலம் நம்பி பெற்றிருந்தார்.

"பொன்மனைக்கூற்றத்துத் தென்னவன் தமிழவேள் பாண்டிய மூவேந்த வேளாரக்ய கழற்கால் மாறனர் அவர்கள் இன்று அரண்மனைக்கு வரப்போகிறாரென்று எனக்குத் தெரியவே தெரியாதே"— என்று அவருடைய எல்லாப் பட்டப் பெயர்களையும் சேர்த்து நீட்டிச் சொல்லி அவரிடமே கேட்டார் மகா மண்டலேசுவரர். அந்தக் கேள்வியில் இயல்பான பேச்சின் தொனி கொஞ்ச மாகவும், குத்தல் அதிகமாகவும் இருப் பதுபோல் பட்டது. கழற்கால் மாற னர் மிரண்டு போய் நின்றார். அதைக் கேட்டு, அந்த மிரட்சி மகாராணி யாருக்கு வேடிக்கையாக இருந்தது. எதிரே கம்பீரமாக நின்று சிரித்துக் கொண்டிருக்கும் மகாமண்டலேசுவர ரிடம் என்ன பேசுவதென்று தெரி யாமல் தவருன காரியத்தை மறை வாகச் செய்து கொண்டிருக்கும் போது வயதானவர்களால் கண்டு பிடிக்கப்பட்ட சிறு குழந்தை மருண்டு விழிப்பதைப்போல் விழித்துக் கொண்டு நின்றார் கழற்கால் மாறனர்.

"ஓ! இதென்ன கையில்?.........என் மேல் நம்பிக்கையே யில்லை என்று மகாராணியிடம் கொடுப்பதற்காகக் கூடி எழுதிக் கொண்டு வந்த ஒப்புரவு மொழிமாரு ஓலையா?" என்று கேட் டுக் கொண்டே உரிமையோடு மிகவும் சுவாதீனமாக வானவன்மாதேவியின் கையிலிருந்து அந்த ஓலையை வாங்கி னர் மகாமண்டலேசுவரர். 'அதை அவர் வாங்கிப் படிக்க நேர்ந்தால் அவ ருடைய மனம் புண்படும்' என்பதனல் அவரிடம் கொடுக்கக் கூடாதென்று

## அருள் வாக்கு

கீதம் என்பது பாட்டு. தொண்டை யில் சப்தம் உண்டாகிறது. எல்லோரும் சப்தம் போடுகிறோம். இந்தசப்தத்தை ஸ்வரமாகப்பிரித்து இதற்குப் பிறகு இன்ன ஸ்வரம் என்று வரிசைக் கிரமமாக வைத் தால் அது ஒரு இனிமையை உண் டாக்குகிறது. புரட்டி வைத்தால் ஓர் இன்பம் ஏற்படுகிறது. அந்தப் புரட்டலில் நன்ருகப் பழகினவன் சங்கீதம் அறிந்த வித்வானுகி விடு கிருன். எழுத்துக்களைப் புரட்டினல் அதன் மூலம் பல புஸ்தகங்கள் உண்டாகி விடுகின்றன. நன்ருகச் சங்கதி போட்டுப் பாடினல் அதிக சந்தோஷம் உண்டாகிறது. அந்தப் புரட்டலையே பிலாக்கணமாகப் பாடினல் துக்கம் உண்டாகிறது. சித்திரக் கலையும் இப்படிப்பட்டது தான். வர்ணமுள்ள புட்டியையும் பிரஷையும் வைத்துக் கொண்டு நாமும் இறுக்குகிறோம். அவை பார்க்க நன்ருக இருப்பதில்லை. அதில் பழக்கமுடையவன் வரைந் தால் கண்ணுக்கு ரம்மியமாக இருக் கிறது. மஹாகவி ஒரு ஸ்லோகம் எழுதினல் நன்ருக இருக்கிறது. அவனும் வார்த்தைகளைப் புரட்டிக் கவி பாடுகிருன். நமக்கும் வார்த் தைகள் தெரியும். ஆனல் நம்மால் கவி பாட முடியாது. புரட்டி வைப் பதில்தான் வித்தியாசம் இருக் கிறது. ஸ்வரம், எழுத்து வார்த்தை எதுவாயிருந்தாலும் புரட்டலுக் குத் தகுந்தபடி உயர்வு தாழ்வு அமைகின்றன.

— ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சிகாமகோடி பீடம்

வினைத்திருந்த மகாராணி, மகாமண்டலேசுவரர் கேட்டபோது மறுக்க முடியாமல் கொடுத்து விட்டார்.

தன்மேல் நம்பிக்கையில்லை என்று கூற்றத் தலைவர்கள் கூடி நிறைவேற்றியிருந்த அந்த ஒப்புரவு மொழி மாறு ஓலையைப் படித்து முடித்ததும் புன்னகை செய்து கொண்டே தலைநிமிர்ந்தார் மகாமண்டலேசுவரர். ஒரேவிதமான வார்த்தைக்குப் பல பொருள்கள் கிடைக்கும் சிலேடைப் பாட்டைப் போல் அவருடைய அந்த ஒரு புன்னகைக்குப் பல பொருள்கள் உண்டு. புன்னகை தவழும் முகத்துடனேயே பேசினார் அவர் :—

“ஐயா, கழற்கால் மாறனாரே! இப்படி, இங்கே என் முகத்தைக் கொஞ்சம் நிமிர்ந்து பார்த்து நான் சொல்வதைக் கேளுங்கள். இதோ இந்த இடத்துக்குள் நான் நுழையுமுன் என் கால்களில் அணிந்திருந்த பாதக் குறடுகளை (மரச் செருப்புக்கள்) எப்படிக் கழற்றி எறிந்து விட்டுச் சுலபமாகக் காலை வீசிக் கொண்டு நடந்து வந்திருக்கிறேனோ; அவ்வளவு இலேசாகப் பதவியையும் என்னால் கழற்றி எறிந்துவிட முடியும்.”

“எறிந்துவிட முடியுமானால் நீங்கள் இதற்குள் கழற்றி எறிந்திருக்க வேண்டுமே? ஏன் அப்படிச் செய்யவில்லையோ?” துணிவை வரவழைத்துக் கொண்டு எதிர்த்துக் கேட்டு விட்டார் கழற்கால் மாறனார்.

“நல்ல கேள்வி கேட்டீர்கள், கழற்கால் மாறனாரே! உங்களைப் போல் ‘தமிழ வேள் பாண்டிய மூவேந்த வேளார்’ பட்டம் பெற்ற ஒருவரால் தான் இந்தக் கேள்வி என்னிடம் கேட்க முடியும்! அதற்காகப் பாராட்டுகிறேன். தங்களுடைய கால்களின் அளவுக்குப் பொருந்துமோ, பொருந்தாதோ, மற்றவர்களுடைய பாதக் குறடுகளைத் திருடிக் கொண்டு போக ஆசைப்படுகிறவர்கள் நிறைய இருக்கிறார்கள். அதே மாதிரி மற்றவர்களுடைய பதவிகளைத் தங்கள் தகுதிக்குப் பொருந்தா விட்டாலும் அடையத் துடித்துக்கொண்டிருக்கிறார்கள் பலர். ஆனால் நான் என்ன செய்வது? என்னுடைய காலுக்கு அளவான பாதக் குறடுகளை நான்தானே அணிந்து கொள்ள முடியும்? நீங்கள் ஆசைப்படுகிறீர்கள் என்பதற்காக என் பாதக் குறடுகளை உங்களிடம் நான் எப்படிக் கொடுக்கலாம்?”

மகாமண்டலேசுவரர், கழற்கால் மாறனாரைச் செருப்புத் திருடுகிறவனோடு ஒப்பிட்டு மறைமுகமாகக் குத்திக் காட்டிப் பேசியபோது வானவன்மாதேவிக்குச் சிரிப்பு வந்து விட்டது. வாய் விட்டுச் சிரித்துப் பழக்கமில்லாத அவர் அப்போது அடக்க முடியாமல் சிரித்து விட்டார்.

“தானாகக் கனியாவிட்டால் தடி கொண்டு அடித்துக் கனிய வைப்போம். எங்களுடைய ஒப்புரவு மொழி மாறு ஓலை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இனி நாங்கள் சும்மா இருக்க மாட்டோம்.” கழற்கால் மாறனார் ஆத்திரத்தோடு இரைந்தார்.

“உங்களால் முடிந்ததை நீங்கள் செய்யுங்கள். சரியான எதிரிகள் பக்கத்தில் இல்லாத காரணத்தால் சிறிது காலமாக என் சிந்தனைக் கூர்மை மழுங்கிப் போயிருக்கிறது. நீங்களெல்லாம் கிளம்பினால் அதைக் கூர்மையாக்கிக் கொள்ள எனக்கு வசதியாக இருக்கும்.”

“அறிவின் திமிர் உங்களை இப்படி என்னை அலட்சியமாக எண்ணிக் கொண்டு பேசச் செய்கிறது!”

“ஆசையின் திமிர் உங்களை இப்படி ஒப்புரவு மொழி மாறு ஓலையோடு ஓடி வரச் செய்கிறது!” கன்னத்தில் அறை

வது போல் உடனே பதில் கூறினார் மகாமண்டலேசுவரர்.

"உங்கள் ஆட்சியின் மேல் எனக்குள்ள வெறுப்பைக் காட்டுவதற்காக மகாமன்னர் பராந்தக பாண்டியர் காலத்தில் எனக்கு அளிக்கப்பட்ட 'தென்னவன் தமிழவேள் பாண்டிய மூவேந்த வேளான்' என்ற பட்டத்தையும் அதற்கு அறிகுறியாக என் விரலில் அணிவிக்கப்பட்ட ஏனாதி மோதிரத்தையும் இப்போதே கழற்றி எறியப் போகிறேன் நான்." கொதிப்போடு கத்தினார் கழற்கால் மாறனார்.

"தாராளமாகக் கழற்றி எறியுங்கள். அவைகளை நீங்கள் கழற்றி எறிந்து விட்டால், உங்களைச் சார்ந்திருந்த காரணத்தால் அந்தப் பட்டத்துக்கும் மோதிரத்துக்கும் ஏற்பட்டிருந்த களங்கமாவது நீங்கும். ஒரு காலத்தில் தென்பாண்டி நாட்டிலேயே சிறந்த வீரர்களுக்கு அளிக்கப்பட்ட ஏனாதி மோதிரம் என்ற மரியாதைப் பரிசு இப்போது உங்களைப் போல் ஒரு பதவி ஆசை பிடித்த கிழட்டு மனிதரின் கைவிரலில் கிடப்பதை யாருமே விரும்ப மாட்டார்கள்" என்று மகாமண்டலேசுவரர் சொல்லி முடிப்பதற்குள் அவருடைய காலடியில் 'ணங்' கென்று அந்த மோதிரம் கழற்றி வீசி எறியப்பட்டு வந்து விழுந்தது.

மகாமண்டலேசுவரர் கீழே குனிந்து அந்த மோதிரத்தைக் கையில் எடுத்துக் கொண்டு நிமிர்ந்தபோது கழற்கால் மாறனார் கோபத்தோடு வேகமாக அந்த இடத்திலிருந்து வெளியேறிப் போய்க் கொண்டிருந்தார்.

"பாவம்! முதிர்ந்த வயதில் முதிராத மனத்தோடு பதவி ஆசைக்கு ஆளாகி என்னென்னவோ பேசுகிறார்" என்று மகாமண்டலேசுவரரை நோக்கிக் கூறினார் மகாராணி.

"ஆமாம்! வீடு போ, போ என்கிறது. காடு வா வா என்கிறது. இந்த வயதில் இப்படிக் கேட்பார் பேச்சைக் கேட்டுக் கொண்டு கெட்டலைய வேண்டாம் இவர்!" என்றார் அவர்.

"மகாராணி! இந்த ஓலையும் இந்த மோதிரமும் என்னிடமே இருக்கட்டும். நான் உங்களை அப்புறம் வந்து பார்க்கிறேன்" என்று கூறி விட்டு அவர் அங்கிருந்து புறப்பட்டபோது, "நீங்கள் இந்தச் சிறுமையாளர்களின் செயலை மனத்தில் வைத்துக் கொண்டு புண்படக் கூடாது" என்று உபசாரமாகச் சொன்னார் மகாராணி.

"அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். மகாராணி!" என்று சுருக்கமாகப் பதில் சொல்லி விட்டு நடந்தார் மகாமண்டலேசுவரர். அவர் போகும் போது வெளி வாசலில் ஒருபுறமாக நின்று கொண்டிருந்த புவனமோகினியை அருகில் கூப்பிட்டு, "தொடர்ந்து இது மாதிரியே இங்கு யார் வருகிறார்கள், போகிறார்கள் என்பதை நீதான் அவ்வப்போது எனக்கு வந்து சொல்ல வேண்டும். கவனமாக நடந்து கொள்!" என்று சொல்லி விட்டுப் போனார். பயபக்தியோடு, ஒப்புக் கொண்டாள் அவள்.

நாளுக்கு நாள் மகாமண்டலேசுவரரின் எண்ணங்கள் ஒவ்வொன்றாக நிறைவேறி வந்த சமயம் அது. கொற்கையிலும், கரவந்தபுரத்துப் பகுதிகளிலும் கலவரமும், குழப்பமும் ஓய்ந்து அமைதி நிலவியது. முத்துக் குளிப்பு ஒழுங்காக நடைபெற்றது. அவர் செய்த இரகசிய ஏற்பாட்டின்படி குழல்மொழியும் சேந்தனும் கடல் கடந்து போய் இளவரசன் இராசசிம்மனையும் அரசுரிமைப் பொருள்களையும் மீட்டுக் கொண்டு வந்து விடுவார்கள். அவர் மெய்க்காவற்படையிலிருந்து தேர்ந்தெடுத்து அனுப்பிய ஐம்பது ஒற்றர்களும் வடக்கே கொடும்பாளூர்ப் பகுதியில் சென்று பயனுள்ள வேலைகளை மறைந்திருந்து செய்து கொண்டிருந்தார்கள். வட திசைப் படையெடுப்புப் பயமுறுத்தல் தாற்காலிகமாக நின்று போயிருந்தது. அந்த நிலையில்தான் கழற்கால் மாறனாரின் ஒப்புரவு மொழிமாறு ஓலை வந்து அவரைச் சிறிது அதிர்ச்சிக்குள்ளாக்கியது. அதற்கு மறுநாள் 'கொடும்பாளூரில் உளவறிய முயன்றபோது அன்று ஒரு நாள் அழகாகப் பொய் சொல்லி அவரை மகிழ்வித்த வீரன் அகப்பட்டுக் கொண்டு கழுவேறி இறந்த செய்தி அவருக்கு வந்தது. சிவல்லபமாறனைவிட்டுக் கோட்டாற்றிலிருக்க அந்த வீரனின் மனைவியையும், மகனையும் வரவழைத்து ஆறுதல் கூறினார் அவர். கழற்கால் மாறனார் திருப்பிக் கொடுத்த ஏனாதி மோதிரத்தை இறந்த வீரனுக்குச் செலுத்தும் மரியாதைப் பரிசாக அவன் மகனுக்கு அளித்தார் மகாமண்டலேசுவரர். அன்று மாலை 'இடையாற்றுமங்கலம் நிலவறையிலிருந்து இரவோடு இரவாக யாரோ ஆயுதங்களைக் கடத்திக் கொண்டு போய் விட்டார்கள்' என்று அம்பலவன் வேளான் வந்து புதிதாக ஒரு செய்தியைச் சொன்னபோது அவர் பலவாறு சந்தேகப்பட்டார். (தொடரும்)




"நெய்க்குத் தொன்னை, ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா?" என்பது ஒரு பழைய கேள்வி. இப்பொழுது இதை மாற்றிப் புது முறையில் ஒரு கேள்வி கேட்கலாம். அதாவது ஒரு சினிமாப் படத்துக்குத் திரைக் கதை ஆதாரமா, திரைக் கதைக்குச் சினிமாப் படம் ஆதாரமா என்பதுதான் அந்தக் கேள்வி.

ஆனால் அந்தக் கேள்வி எல்லோரையும் தலை சுற்றச் செய்து விடும். முக்கியமாக நம் நாட்டுப் படாதிபதிகளில் பெரும் பான்மையோருக்கு அந்தக் கேள்வி பெரிய குழப்பத்தையே தரும்.

ஏனென்றால் நம் படாதிபதிகள் சிறிதும் சிந்தனை செய்யாத விஷயம் ஒன்று உண்டு என்றால் அது திரைக் கதை தான்; அது விஷயமாக அவர்கள் சிந்தனை செய்யத் தயாராயில்லை யென்று கூறினால் தவறில்லை. மேலும், திரைக்கதையைத் தயார் செய்து கொண்டு எந்தப் படாதிபதியும் படப் பிடிப்பைத் துவங்கு வதில்லை. 'ஜனரஞ்சகம், ஜன ரஞ்சகம்' என்ற பல்லவியைப் பாடிக் கொண்டேயிருக்கும் படாதிபதிகள் படப் பிடிப்பின் போது பலகாட்சிகளை மனம்போன போக்கில் மாற்றுகிறார்கள். ஆகவே படப் பிடிப்பு துவங்குவதற்கு முன்பே திரைக் கதை யின் உயிர் பிரிந்து விடுகிறது. பிறகு உயிரற்ற பொருளை யார் என்னத்தைச் செய்தால்தான் என்ன?

இதன் காரணமாகத்தான் நம் நாட்டுத் திரைக் கதை ஆசிரியர்கள், வசன கர்த் தாக்களில் பலர் வெள்ளித் திரையில் தங்கள் பெயர் வராமல் இருக்க வேண் டுமே என்று இறைவனைப் பிரார்த்திக்க நேர்டுகிறது.

இது பற்றி மேல்நாட்டுத் துணுக்கு ஒன்று உண்டு:—திரைக் கதை எழுதும் ஆசிரியர் ஒருவரின் கதை படமாக்கப் பட்டதும் பிரத்தியேகக் காட்சி காட்டப் பட்டது. அந்தப் படத்தைப் பார்த்து விட்டு மேற்படி ஆசிரியர் உள்ளம் உடைந்து போனார். படம் முடிந்ததும் டைரக்டரைப் பார்த்து, "ஸார், இந்தப் படத்தில் என்னுடைய வாக்கியங்களும் கொஞ்சம் வந்திருக்கின்றன! அதற்கு என் நன்றி!" என்று பொங்கிவந்த ஆத் திரத்தை அடக்கிக் கொண்டு சொன்னார். அதற்கு டைரக்டர், "நான் மிகவும் வருந்து கிறேன் ஆசிரியர், ஸார்! அந்த வாக்கியங் களையும் கூடப் படம் வெளியாவதற்கு முன்பு எடுத்துவிடப் போகிறோம்!" என்று மறுமொழி தந்தார்.

நான் முன்பு ஒரு தமிழ்ப் படம் பார்த்து விட்டு அதன் திரைக்கதை ஆசிரியரைப் பார்த்து, "கதைத் தொடர்பே இந்தப் படத்தில் சரியாக அமையவில்லையே, ஸார்! அதைக் கவனிக்க வேண்டாமா?" என்று

# நான் சொல்லும் ரகசியம்

கார்த்தன்

கேட்டேன். அதற்கு அவர், "நான் என்ன செய்ய முடியும்? எல்லாம் டைரக்டர் ஸாரைக் கேளுங்கள்!" என்றார். நான் அந்தப் படத்தின் டைரக்டரைப் பார்த்து அதே கேள்வியைக் கேட்டேன். டைரக்டர் "ஸார்! இதையெல்லாம் படத் தயாரிப்பாளரைக் கேட்க வேண்டும். அவர் அவ்வப்போது கதையில் பல மாறுதல்களைப் புகுத்தச் சொல்லித் தூண்டினார். நான் என்ன செய்வது? சொல்லுங்கள்!" என்றார்.

அந்தச் சமயம் அங்கு வந்த படாதிபதி, "அந்த மாறுதல்களுக்கு யாரையும் காரணமாகக் கூற முடியாது. பொது ஜனங்கள் ரஸித்துப் பார்க்கக் கூடிய ரஞ்சகமான காட்சிகள் பலவற்றையும் படத்தில் சேர்த்தால் தான் படம் ஓடும். ஆகையினால், கதையில் பல மாறுதல்கள் ஏற்படுவதற்குக் காரணம் பொது ஜனங்கள்தான்!" என்று கூறினார்.

நிரபராதிகளான பொது ஜனங்கள்மீது அவர் பழியைச் சுமத்திய பிறகு நான் மேலே ஒன்றும் பேசவில்லை.



இப்பொழுது வெளி வரும் தமிழ்ப்படங்களில் கதைப் பகுதி மிகவும் பலவீனமா யிருக்கிறது. பலவீனமான கதை நடிகர்களையும் பலவீனப் படுத்திவிடும்.

கஸ்தூரி பிலிம்ஸாரின் தயாரிப்பான "நான் சொல்லும் ரகசிய"த்தில் கூடக் கதைப் பகுதி மிகவும் பலவீனமானது தான். சிவாஜி கணேசனும், அஞ்சலி தேவியும் பிரதான பாகங்களை ஏற்று நடித்திருக்கும் கூடப் படத்தைப் பற்றிய நம் அபிப்பிராயத்தை ரகசியமாகத்தான் சொல்லும் படியா யிருக்கிறது.

ஒரு பணக்காரர் மகன் பணக்காரச் சூழ்நிலை பிடிக்காமல் தவிக்கிறான். அவன் தவிப்புக்கு டாக்டர் ஷைலக் தந்த தூக்க மருந்து பெரிதும் பயன்படுகிறது. தூக்க மயக்கத்தில் வீட்டை விட்டு வெளியேறிய அவன் ஒரு ரிக்ஷாவில் மயங்கி விழுந்து விடவே, திருடர்கள் வந்து அவனது உடைகளைக் கழற்றிக் கொண்டு போய் விடுகிறார்கள். அவன் விழித்தெழுந்ததும் வேறு வழியில்லாமல் ரிக்ஷாக்காரனின் கந்தல் உடைகளை அணிந்து சந்தர்ப்பக் கோளாறினால் ரிக்ஷா இழுக்க ஆரம்பிக்கிறான். அப்பொழுதுதான் ஏழைகளின் உலகம் அவனுக்கு நன்றாய்த் தெரிகிறது; ஒரு ஏழைப் பெண்ணின் அன்பும் கிடைக்கிறது. அவளும் அவள் தந்தையும் பணக்காரர்களிடம் வெறுப்புக்கொண்டவர்கள்.

பணக்கார இளைஞன் கருணாகரனாகவும், ஏழை ரிக்ஷாவாலா முத்துவாகவும் சிவாஜி கணேசன் நன்றாய் நடிக்கிறார் என்றால் அதில் அதிசயம் ஒன்றுமில்லை. அவர்தான் இந்தப் படத்துக்கு முக்கிய பலம். ஏழைப் பெண் மனோரமாவின் களங்கமற்ற அன்பைப் பெற்று, பிறகு அதை இழக்க நேர்ந்த சந்தர்ப்பத்தில் ஒரு சில விநாடிகள் நம்மை மெய்சிலிர்க்க வைத்து விடுகிறார், சிவாஜி கணேசன்.

அஞ்சலிதேவி ஏழைப் பெண் மனோரமாவின் பாத்திரத்தில் பொருத்தமாய்த் தோன்றுகிறார்.

இவர்கள் காதலுக்குக் குறுக்கே கருணாகரனின் சகோதரனே புகுந்து விடுகிறான். ஒரு வில்லன் போதாக்குறைக்கு இன்னொரு வில்லனாக டாக்டர் ஷைலக் குறுக்கிடுகிறான். இதிலும் திருப்தியடையாதவர்களைத் திருப்திப் படுத்துவதற்குக் கருணாகரனின் தந்தை வடிவேலு இந்தக் காதலை அழிக்க முயல்கிறான். காரணம், மனோரமா வடிவேலுவின் தங்கை மகள் என்பதுதான். தங்கையை வஞ்சனையால் கொலை செய்து அவள் சொத்தை அபகரித்த வடிவேலு அந்தக் காதலை எப்படி ஆசையோடு வளர்க்க முடியும்?

டாக்டர் ஷைலக்காக வரும் சந்திரபாபு எல்லோரையும் ஒரே சிரிப்பாய்ச் சிரிக்க அடிக்கிறார். அவருடைய ஒவ்வொரு செயலிலும், அவர் வரும் ஒவ்வொரு காட்சியிலும் ஹாஸ்யம் துள்ளி யோடுகிறது. எல்லாவற்றையும் விட நாய்க் கடியால் பைத்தியம் பிடித்தவனுக்கு வைத்தியம் செய்வது மிகவும் வேடிக்கை.

சந்திரபாபுவின் ஹாஸ்யம் போதாத குறைக்குத் தங்கவேலு பேச்சுக்குப் பேச்சு ஹாஸ்யத்தை அள்ளி வீசுகிறார்.

டாக்டர் ஷைலக் மனோரமாவையும், கருணாகரனின் அத்தைமகள் லீலாவையும் கெடுக்க முயலும் காட்சிகள் மிகவும் வெறுக்கத் தக்கவை.

நம்பத் தகாத, அசட்டுத்தனமான பல காட்சிகள் சேர்ந்து படத்தை உபயோகமற்றதாக்கி விட்டன.

இந்தப் படத்தின் பாடல்களைப் பற்றிய நினைப்பே யாருக்கும் வேண்டியதில்லை. அவை நிரபராதிகள்! நம் நினைவில் தங்காமல் ஓடியே போய்விடுகின்றன. "நான் சொல்லும் ரகசிய"த்தைப் பார்ப்பவர்கள் அதில் என்ன ரகசியம் இருக்கிறது என்று தேடி அவதிப்பட வேண்டாம். படத்தில் தோல்வியின் ரகசியம்தான் அடங்கியிருக்கிறது.

# சோக்ரதர் சம்வாதங்கள்

க. சந்தானம்

## 9. ஆதர்ச அரசாங்கம்

*[பங்கெடுத்துக் கொள்ளுவோர் : சோக்ரதர், களக்கோன், ஆதிமந்தேகன் முதலியோர்]*

சோக்: ஒற்றுமை இருக்க வேண்டிய இடத்தில் வேற்றுமைகளும், குழப்பமும் இருப்பதைக் காட்டிலும் பெரிய தீமை உண்டோ?

கள: இருக்க முடியாது.

சோக்: ஒற்றுமை எப்பொழுது இருக்கும்? எல்லாப் பிரஜைகளும் ஓர் சம்பவத்தைக் குறித்து மகிழ்ச்சியும் வருத்தமும் ஏகோபித்து அடையும் பொழுதல்லவா?

கள: ஐயமின்றி.

சோக்: ஒவ்வொருவரும் வெவ்வேறான உணர்ச்சி பெற்றுப் பொது உணர்ச்சி ஏதுவும் இல்லாத சமூகத்தில், ஒரு பாதி வெற்றி முரசார்த்தியும், மற்றோர் பாதி துக்க சாகரத்தில் மூழ்கியும் இருந்தால் அந்த ராஜ்யம் சீர்குலையுமன்றோ?

கள: நிச்சயமாக.

சோக்: அவ்வித வேறுபாடுகள் 'எனது' 'உனது' என்ற பொருள்களைப் பற்றி எழும்புகின்றன அல்லவா?

கள: ஆம்.

சோக்: ஆதலால் நன்கு அமைந்திருக்கும் ராஜ்யத்தில் ஒரே பொருளுக்கு மிகப் பெரும்பாலரான மக்கள் 'எனது' அல்லது 'எனதல்ல' என்று ஏகோபித்துக் கூறுவார்களன்றோ?

கள: முற்றிலும் உண்மை.

சோக்: அவ்வித ராஜ்யம் ஓர் மனிதனின் உடலை ஒக்கும். ஓர் விரல் நுனியில் காயம் ஏற்பட்டால், உடல் முழுதும் ஆத்மாவுடன் சேர்ந்து துன்பமுற்று வருந்துகின்றது. மனிதனுக்கு விரலில் காயம் என்கிறோம். அவ்வாறே எந்த அங்கத்தில் துன்பமாயினும், இன்பமாயினும் அது அவனுக்குப் பொதுவாக இருக்கும் அல்லவா?

கள: ஆமாம். நல்ல ராஜ்யத்திலும் அதே நிலை ஏற்பட வேண்டுமென்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன்.

சோக்: இப்பொழுது நமது ராஜ்யத்தைக் கவனிப்போம். அதில் இந்தத் தத்துவம் பொதிந்து கிடக்கின்றதா என்று ஆராய்வோமா?

கள: மிகவும் நல்லது.

சோக்: மற்ற ராஜ்யங்களைப் போலவே, நமது ராஜ்யத்திலும் ஆளுவோரும், ஆளப்படுவோரும் இருக்கிறார்களன்றோ?

கள: அதற்கென்ன சந்தேகம்?

சோக்: அனைவரும் ஒருவர் மற்றொருவரைப் பிரஜை என்று அழைப்பார்களா?

கள: ஆமாம்.

சோக்: மற்ற ராஜ்யங்களில், ஆளுவோரை இதர பிரஜைகள் எவ்விதம் பாவிப்பார்கள்?

கள: பொதுவாக 'எஜமானர்கள்' என்று கூறுவார்கள், ஜனநாயகத்தில் 'ஆளுவோர்' என்று மட்டுமே சொல்லுவார்கள்.

சோக்: நமது ராஜ்யத்தில் எப்படி அவர்களை அழைப்பார்கள்?

கள: ரட்சகர்களென்றும், துணை புரிவோர் என்றும் கூறுவார்கள்.

சோக்: ஆளுவோர் பிரஜைகளை என்ன சொல்லுவார்கள்?

கள: போஷிப்பவர்களென்றும், வளர்ப்புத் தந்தைகளென்றும் சொல்லுவார்கள்.

சோக்: ஆளுவோர், பரஸ்பரம் என்ன பெயர் சொல்லுவார்கள்?

கள: கூட்டுக் காவலர் என்று.

சோக்: இதர ராஜ்யங்களில் ஆளுவோர் கூட்டத்தில் ஒருவர் மற்றொருவரை மித்திரன் என்றும், வேறொருவரை விரோதி என்றும் கூறுவதுண்டோ?

கள: ஓயாமல் கூறுவதுண்டு.

சோக்: தனது லாப நஷ்டங்களில் பங்குள்ளவனை மித்திரன் என்றும் இல்லாதவனை விரோதி என்றும் சொல்லுவார்களல்லவா?

கள: நிச்சயமாக.

சோக்: நமது காவலர்களில் ஒருவர் வேறொருவரை அன்னியராக நினைப்பாரோ?

கள: ஒருகாலும் நினைக்க மாட்டார். தாம் சந்திப்போரெல்லாம் சகோதரன், சகோதரி, தந்தை, தாய், மகன், மகள் என்ற உறவாகவே கருதுவார்கள்.

சோக்: மிகவும் நல்லது. மீண்டும் உன்னை வினவுகிறேன். இது வெறும் பெயரளவிலேதானா, அல்லது மனத்திலும் செயலிலும் அப்படியே கருதுவார்களா? 'தந்தை' என்று சொன்னால் மக்கள் மீதுள்ள அன்பும், மக்களுக்கு அவர்பாலுள்ள பணிவும், மரியாதையும் குறிப்பிட வேண்டுமல்லவா? இந்தக் கடமைகளை மீறுவோர் இம்மையிலும், மறுமையிலும் நற்கதியடைய மாட்டார்கள் அல்லவா?

கள: அப்படியில்லாவிட்டால், வெறும் உறவைச் சொல்லுவது பரிகாசமாகும்.

சோக்: ஆதலால், நமது ராஜ்யத்தில் ஒற்றுமைப் பேச்சு எங்கும் வழங்கும். ஒருவன் மகிழ்ந்தால் அனைவரும் மகிழ்ச்சியடைவார். ஒருவனுக்குத் துன்பம் நேர்ந்துவிட்டால் எல்லோரும் வருந்துவார்கள். இது சரிதானே?

கள: மிகவும் சரி.

சோக்: இம்மாதிரி நினைத்து உணர்வுடன், இன்பங்களும் துன்பங்களும் பொதுவாக இருக்குமல்லவா?

கள: இருக்கும்.

சோக்: ஒரே விதமான பொருள்களை 'எனது' என்று கருதுவார்கள். அதனால் உண்டாகும் இன்பதுன்பங்களும் பொதுவாகுமல்லவா? மற்றக் காரணங்களைவிட இதற்கு முக்கிய காரணம் காவலர்களின் குடும்பம், சொத்து அனைத்தும் பொதுவாக இருப்பதன்றோ?

கள: அதே மூல காரணமாகும்.

சோக்: மனைவிகள், மக்கள் எல்லாம் பொதுவாக இருப்பதே நமது ராஜ்யத்தின் உத்தம நலமாகுமல்லவா?

கள: சந்தேகமில்லாமல்.

சோக்: காவலர்களுக்குத் தனிமையில் வீடுகளோ, நிலங்களோ, சொத்துக்களோ இருக்கலாகாது; அவர்களுடைய உணவும் உடையுமே ஊதியம்; வேறு பணம் அவர்களிடம் இருக்கக் கூடாது என்பதெல்லாம் இதற்கு அனுகுணமானதன்றோ?

கள: ஆமாம்! ஆனால், சோக்ரதரே, இப்படியே நீங்கள் போய்க் கொண்டிருந்தால், இம்மாதிரியான ராஜ்யம் சாத்தியமா, எவ்விதம் சாத்தியமாகும் என்கிற முக்கியப் பிரச்னையை நாம் மறந்து விடுவோம். நீங்கள் கூறியபடி ராஜ்யம் அமைப்பது சாத்தியமானால், அது உத்தமமாக இருக்குமென்பதில் சந்தேகமில்லை. அதன் பிரஜைகள் சிறந்த போர்வீரர்களாக இருப்பார்கள். ஒருவரையொருவர் நெருங்கிய பந்துவாக நேசிப்பர். ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் எல்லாப் பயிற்சிகளும் பெற்றுச் சைனியத்திலும் சேவை செய்வார்களாயின் அந்த ராஜ்யத்தை எவரும் தீண்ட முடியாது. இவையனைத்தையும், இதற்கு அதிகமான நன்மைகளையும் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் அதைச் சாதிக்க முடியுமா, எவ்விதமாகச் சாதிக்கலாம் என்பதை ஆராய வேண்டும்.

சோக்: நீதி, அநீதி என்ற தத்துவங்களை ஆராய்ந்து கொண்டே இந்தக் கட்டத்துக்கு வந்திருக்கிறோமல்லவா?

கள: உண்மை. அதனால் என்ன?

சோக்: நாம் அந்தத் தத்துவங்களைக் கண்டுவிட்டதால், நீதியிலிருந்து அணுவளவும் பிறழாத நீதிமான் எங்கே என்று கேட்க முடியுமா? அல்லது கூடிய வரையில் அந்த லட்சியத்தைப் பின்பற்றுகிறவர்களைக் கொண்டு திருப்தி அடையலாமா?

கள: அதன் சமீபத்தில் இருந்தால் போதும்.

சோக்: ஓர் பூரண சௌந்தர்யமுள்ள புருஷனைச் சித்திரத்தில் கலைஞன் வரைந்தால், அவ்விதமான மனிதன் பிறந்ததில்லை என்றால் அது கலைஞனின் குறைவாகுமா?

கள: ஆகாது!

சோக்: நாம் இப்பொழுது ஓர் ஆதர்ச ராஜ்யத்தையல்லவா அமைத்து வருகிறோம்?

கள: நிச்சயமாக.

சோக்: நாம் கூறிய விதத்தில் ராஜ்யத்தை அமைப்பது சாத்தியமில்லையேல், அது லட்சியத்தின் குறைவாகுமா?

கள: அப்படி ஆகாது.

சோக்: இதுவே உண்மை. ஆயினும், நீ விரும்பினால் எவ்விதச் சூழ்நிலையில் அந்த ஆதர்ச ராஜ்யத்தைக் கூடிய வரையில் அனுசரிக்கும் ராஜ்யத்தை ஸ்தாபிக்கலாம் என்பதை விளக்கத் தயாராக இருக்கிறேன்.

கள: எனக்குச் சம்மதம்.

சோக்: அடுத்தாற்போல் தற்காலத்திய ராஜ்யங்களில் செங்கோல் இல்லாதது எக்குறையினால் என்று ஆராய்வோம். பிறகு எவ்வித மாறுதல்களை செய்தால் அது சீராகி லட்சியத்துக்கு ஒத்ததாகும் என்பதையும் கவனிப்போம். மாறுதல்கள் எண்ணிக்கையில் குறைந்தும் செய்வதற்கு எளிதாகவும் இருக்க வேண்டும் என்பதையும் மறக்கலாகாது.

கள: அப்படியே!

சோக்: ஒரே ஒரு மாறுதல் செய்யக் கூடுமாயின் அதனால் பெரும் சீர்திருத்தம் உண்டாகும். அது சுலபமல்ல, ஆனால் சாத்தியமானதே.

கள: அதென்னவோ?

சோக்: கடலில் நீந்துவோன் ஓர் மகத்தான அலையை எதிர்க்கும் நிலையில் நான் இப்பொழுது இருக்கிறேன். நான் கூறுவதைக் கேட்டு உங்களுடைய பரிகாசச் சிரிப்பில் நான் மூழ்கிவிட்டாலும், அதனைச் சொல்லுவேன்.

கள: பிடிகையின்றி, மேலே கூறுவீர்.

சோக்: தத்துவ ஞானிகள் அரசராக வேண்டும். அல்லது இவ்வுலகில் இருக்கும் அரசர்கள் தத்துவ ஞானிகளின் மனோபாவமும் ஆத்மசக்தியும் பெற வேண்டும். இவ்வாறு விவேகமும் அதிகாரமும் ஓரிடம் சேர்ந்தாலன்றி, மேலும் விவேகத்துக்குப் பாத்திரமல்லாதவர் அரசியலிலிருந்து ஒதுங்கி நிற்கும்படி நிர்ப்பந்தம் இருந்தாலொழிய ராஜ்யங்களின் தீமைகள் அகல மாட்டா. மானிட வர்க்கத்துக்கும் விமோசனமில்லை. அந்நிலை உருவாகும்பொழுதே நமது ஆதர்ச ராஜ்யமும் தோன்றும். இதுவே எனது முடிவு. ஆனால் இதைக் கூறுவதற்கு என் மனம் கூசியது. இதர ராஜ்யங்களில் நலமும் சுகமும் இல்லை என்று நிர்ணயிப்பது துக்ககரமானதன்றோ?

என் மனைவி மிகுந்த
சுவையுள்ள

தித்திப்புகளைத்
தயாரிக்கிறாள் !

# துஷார்

வைடமின் நிறைந்த வனஸ்பதி



துஷார் வனஸ்பதி சமையலுக்கு ஏற்ற சாதனம் மட்டுமல்ல. இதில் ஏ. டி. வைடமின் சத்துக்கள் நிறைந்து, சமையலின் ருசியையும் வாசனையை ஊட்டமளிக்கும் சக்தியையும் அதிகரிக்கச் செய்கின்றன.

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட், கர்நூல்

TI-2/58

# மறக்கமுடியாத சாப்பாடு



ஸ்ரீரங்கத்துக்கும், காளமேகப் புலவருடைய வாழ்க்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அவருடைய இளமைப் பருவத்து வாழ்வின் பெரும் பகுதி சீரங்கத்திலும், திருவானைக்காவிலும் கழிந்தது. இடைக் காலத்தில் மற்றப் புலவர்கள் பாடிய தனிப் பாடல்களுக்கும், காளமேகப் புலவர் பாடிய பாடல்களுக்கும் ஒரு வேறுபாடு இருக்கிறது.

காளமேகப் புலவர் ஆசுகவி. அதாவது கவி எழுதுவதற்குரிய இலக்கணக் கட்டுப்பாடுகளை முறையாகப் படிக்காமலே பாடல்களைப் பாடித் தற்செயலாக அந்தக் கட்டுப்பாடுகளும் அமைந்து விடும்படி செய்கிறவர். இத்தகைய அசாதாரணத் திறமை வாய்ந்த கவிகளைத்தான் தமிழில் 'ஆசுகவி' என்பது வழக்கம். காளமேகப் புலவர் பாடியவற்றில் மற்றவர்களைத் தூற்றிப் பாடிய வசைப் பாடல்களே அதிகம். வஞ்சப் புகழ்ச்சியாகவும், பழிப்பாகவுமே அவர் மிகுதியாகப் பாடியுள்ளார். பெரும்பாலும் அவருடைய பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சமயத்தில் பாடியவை.

சீரங்கத்தில் ஆச்சாள் என்று ஒரு ஏழைப் பெண் ஒரு சாப்பாட்டுக் கடை மாதிரி வைத்துக் கொண்டு நாலைந்து பேருக்குச் சமையல் பண்ணிப் போட்டுப் பிழைத்து வந்தாள். ஆச்சாளுக்கு நடுத்தர வயது. அவ்வளவாகப் புத்தி கூர்மை கிடையாது. விவரம் தெரிந்தவளும் இல்லை. கொஞ்சம் அசட்டுத்தனமாக நடந்துகொள்கிற சுபாவமுள்ளவள். அவளிடத்தில் காசு கொடுத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் வேறு வழி இல்லாததால்தான் அப்படிச் செய்தார்களே ஒழிய அவள் சாப்பாட்டின்பேரிலுள்ள விருப்பத்தால் சாப்பிடவில்லை. சாப்பிடுகிறவர்களின் வசதியறிந்து அவரவர் ருசிகளுக்கேற்ப வகையாகச் சமைத்து நிதானமாகப் பரிமாறி உபசரிக்க ஆச்சாளுக்குத் தெரியாது. ஏதோ ஓடியாடிச் சாப்பாடு போட்டோமென்று பேர்பண்ணிவிடுவாள். அவள் சமையலை விட மோசமாக இருக்கும் இலையில் சமைத்ததைப் பரிமாறுகிற முறை. ஏதோ கடனுக்குச் செய்கிற காரியம் மாதிரிப் பரிமாறுவாள்.

இப்படிப்பட்டவளிடம் குறும்புத்தனமும், முன்கோபமும் நிறைந்த காளமேகப் புலவர் ஒருநாள் சாப்பிட வந்தார். வந்திருப்பவர் காளமேகப் புலவரென்று ஆச்சாளுக்குத் தெரியாது. தெரிந்தாலும் அதற்காகப் புது மரியாதைகள் எதையும் அவள் செய்யத் தயாராயில்லை. காளமேகப் புலவர் அவள் செயல்களையும் அவளிடமிருந்த அலட்சியமான போக்கையும் அங்கு சாப்பிடுவதற்காக உட்கார்ந்த விநாடியிலிருந்து கூர்ந்து கவனித்துக் கொண்டே இருந்தார்.

எல்லோரையும் போல் அவரையும் வரிசையில் உட்காரச் செய்து இலையைப் போட்டுப் பரிமாறினாள் ஆச்சாள். காளமேகப்புலவருடைய முகத்தையோ, கைகளையோ பார்த்து அளவறிந்து, தேவையறிந்து பரிமாறவில்லை அவள். சோற்றைப் போட்டாள். சோற்றோடு சரிக்குச் சரி கல்லும் கலந்திருந்தது. கீரைக் கூட்டுப் பரிமாறும்போது காளமேகப் புலவர் போதும் போதுமென்று கையை நீட்டி மறித்தும் கவனிக்காமல் காவேரியாற்றின் வெள்ளத்தையே இலையிற் கொண்டு வந்து கவிழ்ப்பதுபோல் கொட்டி விட்டாள் ஆச்சாள். இலை தாங்க முடியாமல் நாற்புறமும் பெருகி ஓட்டமெடுத்தது கீரைக் கூட்டு. காளமேகப் புலவருக்கு அடக்க முடியாத ஆத்திரம் வந்தது. பொறுத்துக் கொண்டார். அடுத்த படியாக ஆச்சாள் புளிக்குழம்பை எடுத்துக் கொண்டு வந்து பரிமாறினாள். புளிக்குழம்பு காயவில்லை.

காளமேகப் புலவர் கையை உதறி விட்டுத் துள்ளியெழுந்தார். எழுந்து நின்று ஆச்சாளை எரித்து விடுவது போல் பார்த்தார். சுற்றிலும் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த மற்றவர்களையும் பார்த்தார். அவர் ஒரு பாட்டைப் பாடினார்.

''நீர்சாற் பெருகுதிரு காவேரியாற்றை நிகர்நிகர்த்த
சாப்பாட்டில் இலைகறிச் சாற்றையெல்லாம் அது
நாறுமணத்
காய்ச்சம் புளியும் நற்கல்லுடன் சோறும்
கலந்து வைத்த
ஆச்சாளை யாம்மறவேம், மறந்தால் மனம்
ஆற்றிடுமோ?''

[இலைக்கறிச்சாறு - கீரைக்கூட்டு]

ஆச்சாள் இலையில் கொட்டிய கீரைக் கூட்டுக்குக் காவேரியாற்றை உவமை கூறியது பெரிய குறும்பு. ''நற்சோறுடன் கல்லும் சமைத்து''— என்று சொல்லாமல் 'நற்கல்லுடன் சோறும்' என்று கல்லுக்குப் பெருமை கொடுத்தது சோற்றை விடக் கல் கன்றாயிருந்தது என்று குத்திக் காட்டுவதற்காகவே. ஆச்சாளுடைய அவலட்சணச் சாப்பாட்டை எத்தனையோ பொறுமையாகச் சாப்பிட்டுக் காலம் கடத்தி வந்தார்கள். கேலி செய்து குத்திக் காட்டி அதை ஒரு பாட்டாகப் பாடிவிட்டுப் போகக் காளமேகப் புலவர் ஒருவரால் தானே முடிந்தது?

— வளவன்




வேலை ஒன்றுமில்லாமல் நான் தவித்துக் கொண்டிருந்தேன் ஒரு சமயம். ஏறி இறங்காத காரியாலயங்கள் இல்லை. என்னதான் பாடுபட்டாலும் மனிதனுக்கு அதிர்ஷ்டம் என்று ஒன்று வேண்டுமல்லவா? அது எனக்குப் பூஜ்யமாக இருந்து விட்டது. நான் ரொம்பவும் மனமுடைந்து போனேன். எத்தனை மாதங்கள் வீட்டில் தாய் தந்தையருக்குப் பாரமாக வாழ்வது?

என் நண்பன் ராமுவிடம் ஒரு நாள் இதைப் பற்றி ரொம்ப வருத்தத்துடன் பேசிக் கொண்டிருந்தேன். "வீட்டுக்குள் காலடி எடுத்து வைப்பதற்கே எனக்கு வெட்கமாயிருக்கிறதடா" என்றேன்.

"இன்று காலைப் பத்திரிகையைப் பார்த்தாயோ?" என்று கேட்டான் ராமு.

"இல்லையே! என்ன விசேஷம்?"

"அட முட்டாள்! வேலைக்கு ஆட்கள் தேடும் விளம்பரங்களைக் கரைத்துக் குடிக்க வேண்டாமா?"

"அப்படி என்னடா விளம்பரம் வந்திருக்கிறது இன்றைக்கு?"

அவன் வீட்டுக்குள் போய்க் காலைப் பத்திரிகையை எடுத்து வந்து ஒரு விளம்பரத்தைக் காட்டினான்.



அதைப் படித்து முடித்ததும், எனக்கு உற்சாகம் கரை புரண்டு விட்டது.

அந்த வேலைக்கு நான் ரொம்ப ரொம்பப் பொருத்தமானவன் தான். விளம்பரதாரர்கள் வரிசையாகப் போட்டிருந்த பத்துவித குணங்களும் என்னிடம் நிரம்பி யிருந்தன.

நிச்சயம் அந்த வேலை எனக்குக் கிடைத்து விடும் என்ற எண்ணத்தில் நண்பனுக்கு எப்படி நன்றி தெரிவிப்பது என்று தெரியாமல் திணறினேன்.

வீட்டுக்கு வந்து பத்திரிகையை வைத்து விண்ணப்பத்தைத் தயாரித்து அனுப்பிய பிறகுதான் மூச்சு விட்டேன்.

அதன் பிறகு ஒவ்வொரு நாளும் தபால்காரனை ஆவலுடன் எதிர்பார்க்க ஆரம்பித்தேன். 'இன்று வரும், நாளைக்கு நிச்சயம் வரும்' என்றெல்லாம் எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

ஒரு மாதத்துக்குப் பிறகு பதில் வந்தது. ராமுவைவாழ்த்திக் கொண்டே கடிதத்தைப் பிரித்தேன். "தங்கள் விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ள முடியாததற்கு வருந்துகிறோம்" என்ற வரிகளைப் பார்த்ததும் என் தலை சுற்ற ஆரம்பித்தது.

ஒரு வாரம் ஒன்றுமே பிடிக்காமல் பித்துப் பிடித்தவன் போல் அறையிலேயே அடைபட்டுக் கிடந்தேன். பிறகு நிஜமாகவே பைத்தியம் பிடித்து விடுமோ என்று பயந்து காற்றாடக் கடற்கரைக்கு நடந்தேன். நண்பன் ராமு வீட்டு வழியாகத்தான் போக வேண்டும். அந்தப் பக்கம் போனபோது ராமு எங்கேயோ வெளியே போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான். வீட்டுக்குள் நுழையப் போனவன் என்னைப் பார்த்து விட்டுப் புன்சிரிப்புடன் வரவேற்றான்.

"என்டா பழி! எங்கேடா இத்தனை நாட்களாக உன்னைக் காணோம்?"

நான் ரொம்ப மனத் துயருடன் நடந்ததை யெல்லாம் விவரித்துச் சொன்னேன். என் ஆசையில் மண் விழுந்து விட்டதைக் கூறினேன்.

ராமு சொன்னான்: "உனக்கு அந்த வேலை கிடைக்காது என்று எனக்கு முன்பே தெரியும்!"

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. "எப்படித் தெரியும் உனக்கு?"

"அந்த வேலை எனக்குக் கிடைத்து விட்டது. அதனால் உனக்குக் கிடைக்காது என்று தெரியும்!"

உண்மையை மறைக்காமல் சொல்ல வேண்டுமானால் எனக்குப் பற்றி எரிந்தது. அதற்கும் மேல் வியப்பு உண்டாயிற்று. ஏனெனில் அந்த விளம்பரத்தில் 'அவசியம் தேவை' என்று குறிப்பிட்டிருந்த குணாதிசயங்களில் ஒன்றுகூட ராமுவுக்குக் கிடையாது!

"அடப் பாவி! எனக்குக் கிடைக்க வேண்டிய வேலை எப்படியடா உனக்குக் கிடைத்தது?" என்று கேட்டேன்.

ராமு சிரித்தான். "உனக்கு என் மீது கோபமாகத்தான் இருக்கும். ஆனால் என்ன செய்வது? உன்னிடம் எல்லாக் குணாதிசயங்களும் பொருந்தியிருந்தும் உன்னிடம் இல்லாத ஒன்று என்னிடம் இருக்கிறது" என்றான் ராமு.

"என்னடா அது?"

"அந்தக் கம்பெனியின் மானேஜர் ஸ்ரீ......அவர்களுடைய மனைவியின் சிநேகிதிக்குப் பெரியப்பா பிள்ளையாக்கும் நான்" என்றான் ராமு.

அதைக் கேட்டதும், நான் மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்து விடவில்லை.

எல்லாவற்றுக்கும் அதிர்ஷ்டம் வேண்டும் சுவாமி! அதிர்ஷ்டம் வேண்டும்! அதுதான் என்னிடம் கிடையாதே!








பிரீமென் மற்றும்
ஸுலேகா
இன்றைய
மிகவும்
நம்பகமான
பேனாக்கள்









# மோஹன்தான் வெற்றிக்கான 'கோலை' அடித்தான்

சிறந்த கால்பந்து விளையாட்டுக்காரனாக விளங்க வேண்டுமானால், உங்களுக்கு சாமர்த்தியம், வேகம், சக்தி இவைகள் வேண்டும். இம்மூன்றும் மோஹனுக்கு ஏராளமாக உண்டு. அங்ஙன மிருந்ததினால்தான் அவனுடைய கட்சி வெற்றி அடைய அவனால் உதவி செய்யமுடிந்தது! தவறாத பயிற்சி மோஹனுடைய சாமர்த்தியத்தையும், வேகத்தையும் அபிவிருத்தியாக்கியது. மேலும் அவனுக்குத் தேவையான சக்தி, தினந்தோறும் க்ளுகோவிடா சாப்பிடுவதன் மூலம் கிடைக்கிறது. வேலையிலோ அல்லது விளையாட்டிலோ அதிகமாக உழைக்கும்போது உங்கள் ரத்தத்துடன் சீக்கிரம் கலந்துகொள்ளும் அவசியமான சர்க்கரையை க்ளுகோவிடா அளிக்கிறது.

க்ளுகோவிடாவை டீயிலோ, காப்பியிலோ பாலிலோ அல்லது குளிர்ந்த பானம் எதிலோ சேர்த்து அருந்துங்கள். ஒரு கப் அல்லது கிளாஸுக்கு ஒன்று முதல் மூன்று தேக்கரண்டியளவு க்ளுகோவிடாவை கலந்து சாப்பிடுங்கள். அது எளிதில் கரையக்கூடியது.



இந்தியாவிற்கான ஏஜெண்டுகள் :
பாரி அன்டு கோ. லிமிடெட்.

## அதிக சக்திக்கு அவசியம் வேண்டியது க்ளுகோவிடா



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

# நினைவும் கனவானால்...

பூவாளூர் சுந்தரராமன்



'சாரு! ஆனாலும் நீ இப்படிப் பிடிவாதம் பிடிக்கக் கூடாது!'

'பிடிவாதம் பிடிக்கிறது நானா, நீங்களா? நன்றாக நினைத்துப் பார்த்துப் பிறகு பேசுங்கள்!'

'இத்தனை நாள் வேண்டும் என்றாயே! இப்போது ஏன் வேண்டாமென்கிறாய்?'

'பொங்கலுக்கு எனக்குப் பட்டுப் புடவை இல்லாமல்தான் ஆகவில்லையாக்கும்! மேலே மேலே எத்தனையோ செலவுகள் காத்துக்கொண்டிருக்கின்றன. இப்போது எதற்கு வீண் செலவு?'

'சாரு! ஏன் இப்படிப் பைத்தியம் போல் பேசுகிறாய்! எப்போதுதான் நமக்குச் செலவுகள் இல்லை?'

'அதற்காகத்தான், எனக்கு இப்போது பட்டுப் புடவையா?'

'நீதானே நேற்று எனக்குப் பட்டுப் புடவை வாங்கித் தருகிறீர்களா என்று என்னிடம் கேட்டாய்?'

'வேடிக்கைக்கு வாய் தவறிக் கேட்டு விட்டேன். அதற்காக இந்தச் சமயத்தில் நூறு, நூற்றிருபது என்று போட்டுப் புடவை வாங்குவார்களா, என்ன?'

'ஏன் வாங்கக் கூடாது? மறுபேச்சுப் பேசாமல் உடனே கடைக்குப் புறப்படு! சீக்கிரம்' என்று அவசரப்படுத்தினான் சந்திரசேகரன்.

'நல்ல வேடிக்கை இது! ஒன்றை நினைத்துக் கொண்டுவிட்டால் அவ்வளவுதான், அதை முதலில் முடித்து விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பது!'

சாரதாவுக்குப் பட்டுப் புடவை வாங்கிக் கொள்வதில் உள்ளூற விருப்பந்தான். இத்தனை வருஷங்களாக - புக்ககம் வந்து இருபது வருஷங்கள் ஆகியும்கூட - ஒரு தீபாவளிக்கோ, பொங்கலுக்கோ அவள் மனம் மகிழ, ஒரு பட்டுப் புடவை கிடைக்க வில்லை! எத்தனை முறை சந்திரசேகரனைத் தனக்கு ஒரு பட்டுப்புடவை வேண்டுமென்று கேட்டிருப்பாள்? அப்போதெல்லாம் அவள் கணவனால் அவளுடைய விருப்பத்தை நிறைவேற்ற முடியவில்லை! எதையாவது அவள் பிடிவாதமாகக் கேட்டால் அதைக் கண்டிப்பாக மறுத்து விடும் சுபாவம் சந்திரசேகரனுக்கு உண்டு! சாரதா சொல்வதுபோல், அவள் கணவனைப் பாம்பென்று தாண்டவும் முடியாது: பழுதையென்று மிதிக்கவும் முடியாது! அது ஒரு காலம்!

* * *

சாரதா சந்திரசேகரனை மணந்து கொண்டு புக்ககம் புகுந்தபோது, அங்கே மாமனார், மாமியார், அத்தைப் பாட்டி என்ற பெரியவர்கள் வீடு நிறைய இருந்தார்கள். மாமனாருடைய அதிகாரம், மாமியாரின் மிரட்டல், அத்தைப் பாட்டியின் தொணதொணப்பு, தன் கணவனின் இரண்டுங்கெட்டான் நிலை இவைகளுக்கெல்லாம் ஒண்டியாளாக அவள் ஈடு கொடுக்க வேண்டியிருந்தது.

'ஏண்டாப்பா! உன் மனைவிக்குக் காரியப்பாங்கே தெரியவில்லையேடா? எதைச் சொன்னாலும் 'மொத்து' மாதிரி பேசாமல் இருக்கிறாளே!...' என்று மாமியார் குற்றம் சாட்டுவாள்.

'ஆமாம், அம்மா! அவள் ஒரு பெரிய மொத்துவாகத் தான் இருக்கிறாள். என்ன செய்து அழுவது?....' என்று ஒத்துப் பாடுவான் சந்திரசேகரன், ஒன்றும் யோசிக்காமல்.

'சொன்னால் கேட்க வேண்டாமோ? பேசாமல் இருந்தால் எப்படி?'

'நீ சொல்வதைக் கேட்கா விட்டால் அவளுக்கு இங்கே என்ன வேலை என்று கேட்பதுதானே, அம்மா! ஆமாம், நீ கண்டிப்பும் கண்காணிப்புமாக இருந்தால்தான் சரிப்படும்! நீ இப்படி முதலில் இடம் கொடுத்து விட்டுப் பிறகு...' இந்த ரீதியில் சந்திரசேகரன் அம்மாவிடம் வார்த்தையாடுவான்.

பிறகு தன் தாயார் கோவிலுக்கோ, குளத்துக்கோ போயிருக்கும் சமயத்தில் சந்திரசேகரன் ஆசையுடன் 'சாரு' என்று கொஞ்ச வருவான்.

சாரதா திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாள்; 'விருக்'கென்று முகத்தைத் தோளில் இடித்துக்கொண்டு கடுகடுப்பான பாவத்துடன் இருப்பாள்.



'சாரு, சாரு !... இதோ பார்!' அவன் குரலில் குழைவும் நெகிழ்வும் ததும்பிப் பொங்கும்.

'சாருவும் மாச்சு, மோருவும் மாச்சு! நான்தான் ஒருபெரிய மொத்துவாச்சே!' என்று நிஷ்டூரமாகக் கூறுவாள் சாரதா.

'அடி, அசடே! அம்மா சொன்னதற்காகவா இப்படி வருத்தப் படுகிறாய்! நீ தங்கக்கட்டி என்று எனக்குத் தெரியாதா, என்ன?' என்று அவள் கன்னத்தை மெதுவாகச் சீண்டுவான்.

'பேச்சைப் பாரு, பேச்சை!'

'சாரு, மெய்யாகவே சொல்லுகிறேன். நீ பத்தரை மாற்றுத் தங்கம்! நான் அம்மாவோடு ஒத்துப் பாடுகிறேன் என்று கோவித்துக் கொள்ளாதே!' சந்திரசேகரனை அப்போது பார்க்கப் பரிதாபமாக இருக்கும்!

'நான் எதிர்த்து வாயாடாதபோதே இந்தப் பட்டம்; நான் ஏதாவது பேசிவிட்டால், சும்மா இருப்பாராக்கும் உங்கள் அம்மா!'

'சாரு! உனக்கு இன்னும் அம்மா சுபாவம் தெரியவில்லையே?'

'உங்களுக்குத் தெரிகிறதல்லவா, அதுவே போதும்!'

'சாரு! என்ன இப்படி.....?' அவன் நெருங்கி வருவான்.

'உங்களை யெல்லாம் பாம்பென்று தாண்டவும் முடியாது, பழுதையென்று மிதிக்கவும் கூடாது!' என்று சாரு சொல்லுவாள்.

அந்தக் காலத்தில் இப்படித்தான் சாரதாவினுடைய நிலைமை இருந்தது. கணவனிடம் ஒரு நகை நட்டை ஆசையுடன் கேட்டாள்; அதை அடைந்தாள் என்பதை அவள் அகராதியில் காண முடியாது! கேவலம், தீபாவளி, பொங்கல் என்ற சாக்கில்கூட ஒரு பட்டுப் புடவைக்கு அவள் கனவு காணக்கூடாது.

பண்டிகைக்குப் பத்து நாட்களுக்கு முன் சாரதா சந்திரசேகரனைச் சமயம் பார்த்து ஒரு பட்டுப் புடவை வாங்கித் தருமாறு கேட்டாள்.

அவன் சர்வ சாதாரணமாக, 'என்ன திடீரென்று உனக்குப் பட்டுப் புடவை ஞாபகம் வந்தது?' என்று கேட்பான்.

'பொங்கல் பண்டிகை வருகிறதே! தீபாவளி சமயத்தில் இப்போது வாங்கித் தருவதாகச் சொன்னது நினைவில்லையா?' அவளுடைய ஒய்யார நிலையை விழுங்கி விடுவதுபோல் பார்த்துக் கொண்டிருக்கும், அவனால் அவள் வேண்டுகோளை எப்படி மறுக்க முடியும்?

'நீ அம்மாவையே கேளேன்!' என்பான், நிதானமாக.

'ஏன் நீங்கள் சொல்லி வாங்கித் தரக்கூடாதா?' என்று கேட்பாள் நொந்த உள்ளத்துடன்.

'நீ சொன்னால் அதன் சலுகையே வேறு. நீ அம்மாவிடம் மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிறாய் என்று அவள் பெருமைப்படுவாள்! காரியமும் சுலபமாகப் பலிக்கும்!'

'உம்...உத்தியோகம் செய்து, சம்பாதிக்கிற புருஷனைப் பண்டிகைக்கு ஒரு பட்டுப்புடவை வாங்கித் தருமாறு கேட்டால், அம்மாவைக் கேள், அத்தையைக் கேள் என்கிறீர்களே!' என்று கண் கலங்கக் கேட்டுவிட்டு உள்ளே வேகமாகப் போய் விடுவாள்.

கடைசியில் சமயம் பார்த்துச் சந்திரசேகரன் தன் தாயாரிடத்தில் 'சாரதாவுக்கு ஒரு பட்டுப்புடவை வாங்கலாமா?' என்று கேட்பான்.

'பட்டுப் புடவை எதற்கு, இப்போது?' என்பாள் மாமியார்.

'வெளியே போவதானால் கட்டிக்கொள்ள நல்லதாக ஒன்றுமில்லையாம்!'

'அவள் சொன்னாளா?' என்று நறுக்கென்று கேட்பாள்.

'இல்லை, அம்மா! நானே பார்த்தேன். அன்றைக்குக் கோடி வீட்டுக் கல்யாணத்துக்குப் பழைய புடவை கட்டிக்கொண்டு போனாள். கேட்டதற்கு வேறு ஒன்றும் நல்லதாக இல்லை என்றாள்!'

அவன் தாயார் அதற்குள் நீண்ட ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே, 'பட்டுப் புடவை என்றால் இப்போது அதற்கு

நூறே, நூற்றைம்பதோ வைக்க வேண்டுமே, அப்பா!' என்று கேட்பாள்.

'எப்படியோ செலவோடு செலவாக வாங்கித்தானே ஆக வேண்டும்!'

'என்றைக்கோ ஆடிக்கொருநாள் வெளியே போவதற்கு ஒரு பட்டுப் புடவை வாங்கிக் கொண்டால் போதுமா? இப்போது கடன் வாங்கியாவது பட்டுப் புடவை வாங்க வேண்டுமா? எல்லாம் பிற்பாடு பார்த்துக் கொள்வோம்!' என்று கூறி மெதுவாகத் தடுத்து விடுவாள்.

* * *

கல்யாணம் ஆன புதிதில் இரண்டு மூன்று ஆண்டுகள் இவ்வாறு கழிந்தன. பிறகு சாரதா வரிசையாக நான்கு ஆண் குழந்தைகளுக்குத் தாயாரானாள். அருமைக்கும், பெருமைக்கும், தன் கைவேலைக்கு உதவியாக இருக்கவும் ஒரு பெண் குழந்தை இல்லையே என்று அவள் ஏங்கினாள். அவள் ஆசைப்படி ஐந்தாவது அருமைப் பெண்ணாக மாலினி பிறந்து தாயின் ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கினாள்.

இப்படிக் குழந்தைகள் பிறந்து புதிய ஜீவன்களாக வீட்டில் புழங்க ஆரம்பித்ததும் பழையவர்கள் 'கால்' வாங்க ஆரம்பித்தார்கள். முதலில் அத்தைப் பாட்டி தான் கண்ணை மூடினாள். சாரதாவுக்கு ஓரளவு வேலை குறைந்தது. அடுத்தது மாமனார்; அவர் காலமான பிறகும் கூட மாமியார் இடுப்பை விட்டுக் கொத்துச் சாவி சாரதாவின் கைக்கு வரவில்லை. இவ்வளவு வருஷங்கள் அந்தக் குடும்பத்தில் அடிபட்ட பிறகு சாரதா அதற்கு ஆசைப்படவு மில்லை; மாமியாரிடத்தில் உண்மையாகவே இப்போது ஒருவித அன்பும் மரியாதையும் அவளுக்கு ஏற்பட்டு விட்டன. வீட்டுக்குப் பெரியவளாக மாமியார் இருந்தால் எத்தனையோ காரியங்களுக்கு நல்லது என்பதை அனுபவ மூலமாகவே அவள் தெரிந்து கொண்டு விட்டாள்.



கடைசியில் சாரதாவின் மாமியாரும் கண்ணை மூடிவிட்டாள். கொத்துச் சாவியும் சாரதாவின் கைக்கு வந்தது. வீட்டுச் செலவுகளைப் பற்றி அதட்டிக் கேட்க மாமியாரில்லை. சந்திரசேகரன் வாங்கும் சம்பளத்தை அப்படியே அவள் கையில் கொடுத்துவிட்டு, பஸ்ஸுக்கும், ஹோட்டலுக்கும் அவளிடமிருந்து சில்லறை வாங்கிக் கொண்டான். ஆனால் சாரதாவுக்குப் பட்டுப்புடவை மட்டும் இன்னும் வாங்கப்படவில்லை!

பையன்கள் வளர்ந்து பள்ளிக்கூடம் போனார்கள். அதற்குப் பிறகு செலவுக்குக் கேட்க வேண்டுமா? நல்ல ஆடைகள் மாதச் சம்பளம், நோட்டுப் புத்தகங்கள் இப்படிச் செலவு இனம் வளர்ந்து கொண்டே போயிற்று.

பள்ளிக்கூடத்துக்குப் பிறகு கல்லூரிப் படிப்பு. கல்லூரிப் பிள்ளைகளுக்குத் தகுந்த உடைகள்; இடைவேளைச் சிற்றுண்டிக்குக் கையில் சில்லறை; பஸ் கட்டணம்; இப்படித் தினந்தோறும் ஓயாத செலவுகள்!

இதற்குள் மாலினி கல்யாணத்துக்கு நின்றாள். தான் நூல் புடவை கட்டிக் கொண்டாலும், அவளுக்குப் பட்டுப் பாவாடையும், பட்டுச் சிற்றாடையும் வாங்கித்தர வேண்டியதாயிற்று. அப்படி அருமை பெருமையாக வளர்க்காவிட்டால் நல்ல வரன் குதிருமா?

மாலினிக்கும் நல்ல வரனாகக் குதிர்ந்து கல்யாணமும் ஆயிற்று. கலியாணத்தின் போது கூடச் சாரதா தனக்குப் பட்டுப் புடவை வாங்கிக் கொள்ள விரும்பவில்லை. சம்பந்திகளையும் தனக்கு ஓதிக் கொடுக்க வேண்டிய பட்டுப் புடவைக்குப் பதிலாகப் பணமாகக் கொடுத்து விடும்படி கேட்டுக் கொண்டாள். இப்படிப் பணத்தை மிச்சப் படுத்திச் சம்பந்திகளுக்குச் சிறப்பாக மரியாதை செய்து தீர்த்தாள்.

கல்யாணம் ஆன மறுவாரமே மாலினி தன் புருஷனுடன் பம்பாய்க்குப் பயணமாகிவிட்டாள். மாலினியின் ; ; தலை

தீபாவளியின்போது சந்திரசேகரன் கடனோடு கடனாக மேலும் வாங்கிச் சாரதாவுக்கும் ஒரு பட்டுப் புடவை வாங்கிவிட வேண்டுமென்று தீர்மானமாகத் திட்டம் வகுத்திருந்தான். தனக்கு வேண்டிய பட்டுப் புடவையைத் தானே வாங்கிக் கொள்வதாகக் கூறிச் சந்திரசேகரனிடம் பணத்தை வாங்கிக் கொண்டு கடைக்குப் போனாள். திரும்பி வந்தபோது, அவள் கையில் இருந்த 'மூட்டையை'ச் சந்திரசேகரன் அவசரம் அவசரமாக அவிழ்த்துப் பார்த்தான். அதில் பட்டுப் புடவை இல்லை; கல்லூரியில் படிக்கும் தன் இரு பிள்ளைகளும் கேட்டுக் கொண்டிருந்த இரு ஜதை குவாலியர் ரேயான் உடுப்புக்கள் இருந்தன!

சந்திரசேகரன் சாரதாவை விழித்துப் பார்த்தபோது, 'எது இப்போது முக்கியம், என் பட்டுப்புடவையா, குழந்தைகளின் உடுப்பா?' என்று சிரித்துக் கொண்டே உள்ளே போய் விட்டாள். இப்படி மாலினியின் தலை தீபாவளி அன்றும் வழக்கம்போல் நூல் புடவையே சாரதாவை அலங்கரித்தது! அவளுடைய 'வெகுளித்'தனத்தைக் கண்டு குழந்தைகள் பரிகாசம் செய்தனர்! சந்திரசேகரனுக்கு மட்டும் இதயத்தைப் பிழிந்தெடுத்தது!

பொங்கல் பண்டிகைக்கு இரண்டு நாட்கள் இருந்தன. சாரதா வேடிக்கையாக, 'என்ன, பொங்கலுக்காவது எனக்குப் பட்டுப்புடவை வாங்கித் தருகிறீர்களா?' என்று கேட்டாள், கண்களைச் சிமிட்டிக் கொண்டு.

அவள் வேடிக்கைக்கு அப்படிக் கேட்டாலும் கூடச் சந்திரசேகரனுக்கு அது உள்ளத்தைத் துளைத்தது.

'திடீரென்று இப்போது அவ்வளவு பணத்துக்கு எங்கே போவது?' என்று உதட்டைப் பிதுக்கி விட்டான்.

ஆனாலும் மறுநாள் எப்படியோ முயற்சி செய்து பணத்தைத் தயாரித்துக் கொண்டு சாரதாவைக் கடைக்கு வரும்படி அழைத்தான். அவள் எவ்வளவு மறுத்தும்கூடச் சந்திரசேகரன் பிடிவாதமாக அவளை அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

* * *

சந்திரசேகரனும் சாரதாவுமாக ஒவ்வொரு ஜவுளிக்கடையாக ஏறி இறங்கினார்கள். சாரதா விரும்பிய புடவை கிடைக்கவில்லை. இறுதியில் ஒரு கடையில் அவள் மனத்துக்குப் பிடித்த புடவை கிடைத்தது. நல்ல கரும் பச்சை நிற உடல்; அதற்கேற்ற மஞ்சள் நிற 'பார்டர்;' அதில் நிறையக் கெட்டிச் சரிகையும் போடப்பட்டிருந்தது. சாரதா ஆசையுடன் அதையெடுத்துக் குழந்தையைப் போல் அணைத்துக் கொண்டாள். விலை கூட மிகவும் அதிகமில்லையென்று மனம் மகிழ்ந்தாள்.

அந்த ஒருகணத்தில் அவளும் அவள் கணவனும் அமர்ந்திருந்த 'ஏர்கண்டிஷன்' செய்திருந்த அறையில் அடுக்கடுக்காக வைக்கப்பட்டிருந்த புடவைகள் அவைகளின் நயத்தை மிகைப்படுத்திக் கூறும் விற்பனையாளர்கள், பேரம் பேசும் வாடிக்கைக்காரர்கள் யாவற்றையும் மறந்துவிட்டாள். தான் இருபது வயதுப் பெண்ணாக மாறி அந்தப் பட்டுப் புடவையை அணிந்து கொண்டு மாமியாருக்கும், மாமனாருக்கும், அத்தைப் பாட்டிக்கும் கிரமமாக நமஸ்காரம்

## பம்பாய் ஸ்ரீ ஷண்முகானந்த சபையில் கலைவிழா

பம்பாயில் பிரபலமாக உள்ள ஸ்ரீ ஷண்முகானந்தா பைன்ஆர்ட்ஸ் சங்கீத சபை வருஷா வருஷம் நடத்துவது போலவே இந்த ஆண்டிலும் நட்டநிதிக்காக சங்கீத விழா கொண்டாடிப் பம்பாய் வாழ் தென்னிந்தியர்களைப் பதினெட்டு நாட்கள் மகிழ்வித்தது. விழாவுக்குப் பம்பாய் முதன் மந்திரி திரு ஒய். பி. சவ்வான் தலைமை தாங்கித் துவக்கி வைத்தார். விழாவை வெற்றிகரமாக நடத்தி வைப்பதில், திரு ஏ. கே. சி. நடராஜன் (கிளாரினெட்) செம்பை வைத்தியநாத பாகவதர், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமி, ஆலத்தூர் சகோதரர்கள், ஜி. என். பி, மதுரை மணி அய்யர், ராமநாதபுரம் கிருஷ்ணன், ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரி, எம்பார் விஜயராகவாச்சாரியார் (காலட்சேபம்) ஸ்ரீமதி கமலா லக்ஷ்மண், குமாரி வைஜயந்திமாலா, பத்மினி ராகினி (நடனம்) கல்யாண கிருஷ்ண பாகவதர் (வீணை) பிஸ்மில்லாக்கான் (ஷெனாய்) ஆகிய பல பிரபல வித்வான்களும் வித்துவாம்சினிகளும் கலந்து கொண்டனர். சபா விழாவுக்கென்றே பிரத்தியேகமாக அமைக்கப்பட்டிருந்த பிரும்மாண்டமான அலங்காரப் பந்தலும் ஒலிபெருக்கி வசதிகளும் வழக்கம்போல் முதல்தரமாக இருந்தன. சபைத் தலைவர் திரு டி. வி. ராமானுஜத்தின் சொந்த மேற்பார்வையில் நடக்கும் ஏற்பாடுகள் அல்லவா? எல்லா வகையிலும் விழா நிறைவு பெற்றிருப்பதற்குச் சொல்லவா வேண்டும்?

செய்து விட்டு, தன் வரவுக்காக மாடி அறையில் காத்துக் கொண்டிருக்கும் சந்திரசேகரனுடைய கண்களைப் பின்னால் போய்ப் பொத்தி விளையாடுவது போன்ற தோற்றம் மனத்திரையில் ஓடிக்கொண்டிருந்தது!

'என்ன சாரு! புடவை உனக்குப் பிடித்திருக்கிறதா?' என்று சந்திரசேகரன் கேட்டதும்தான் அவளுக்கு நினைவு வந்தது!

திரும்பவும் கையில் இருந்த பட்டுப் புடவையை ஆசையுடன் பார்த்தாள். அவள் மனம் திடுக்கிட்டது! அது ஆறு கஜம் புடவை! ஒரே நிமிஷம்...அந்த ஒரு நிமிஷத்துக்குள் அவள் கனவு கலைந்து விட்டது! அந்த வயதில் அந்தப் புடவை தனக்குப் பயன்படாது என்று நினைத்ததும் அவள் இதயமே விண்டு விடும்போல் இருந்தது!

சந்திரசேகரன் கடைக்காரரிடம் பேரம் பேசிக் கொண்டிருந்தான்.

'இருங்கள்! இந்தப் புடவை எனக்கு... வேண்டாம்!' என்றாள்.

'ஏன், சாரு?' என்றான் சந்திரசேகரன்.

'ஏன், அம்மா?' என்று திடுக்கிட்டுக் கேட்டார், கடை முதலாளி.

'இது ஆறு கஜம் புடவை.'

'என்னம்மா, நீங்க ரொம்பக் கர்நாடகமாக இருக்கிறீங்களே! இந்தக் காலத்தில் எவங்க அம்மா எட்டு கஜம், ஒன்பது கஜம் புடவைகளைக் கட்டிக் கிறாங்க'' என்றார் கடைக்காரர்.

'சாரு! இந்தப் புடவையே இருக்கட்டும்!'

'ஆறு கஜத்தை எப்படிக் கட்டிக் கொள்வது?'

'நீ பாட்டியா, என்ன? இந்தப் புடவையே இருக்கட்டும்!' என்று கூறிவிட்டுச் சந்திரசேகரன் பிடிவாதமாக அந்தப் புடவையையே வாங்கினான். இருவரும் பஸ் நிலையத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

'தீபாவளிக்கு மாலினிக்கு இப்படி ஒரு புடவை வாங்க வேண்டுமென்று ஆன மட்டும் எல்லாக்கடைகளிலும் 'சல்லடை போட்டு'த் தேடினோமே! கிடைக்கவில்லையே!' என்று சாரதா அங்கலாய்ப்புடன் கூறினாள்.

'சாரு! மாலினிக்குக் கொடுத்து வைக்கவில்லை! உனக்குக் கொடுத்து வைத்திருக்கிறது!'

'ஆனால் இது ஆறு கஜமாக... இருக்கிறதே என்று தான் எனக்கு...!'

'சாரு! நீ என்ன பெரிய 'மாமி' மாதிரி நினைத்துக் கொண்டு பேசுகிறாய்? உன்னை முன்பின் யாராவது பார்த்தால் உனக்கு இருபத்தைந்து வயதில் ஒரு பையன் இருக்கிறான் என்பதையோ, கல்யாணமாகிப் புக்ககம் போயிருக்கிற பெண்ணிருக்கிறாள் என்பதையோ நம்பவே மாட்டார்கள்.'

'போதும்! எவர் காதிலாவது விழப் போகிறது!...'

'நல்லது, எங்க அம்மா போனாலும் போனாள்; நீ 'பாட்டி' மாதிரி நினைத்துக் கொண்டு என்னை அதிகாரம் பண்ணிக் கொண்டிருக்கிறாய்! உம்!'

'இல்லை, இல்லை! இப்பத்தான் நீங்கள் புது மாப்பிள்ளை!' என்றாள் அவள்.

அதற்குள் பஸ் வரவே, அதில் ஏறிக் கொண்டு வீடு திரும்பினார்கள். வழியில் கூடச் சந்திரசேகரன் சாரதாவைக் கேலி செய்து கொண்டே வந்தான்.

வீட்டு வாசற்படியை மிதித்ததுமே 'இந்த புருஷர்களுடன் வெளியில் போவதே அவமானம்! பச்சை பச்சையாக எதையாவது பேசிக் கொண்டு!' என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

வாசல் அறையில் சன்னல் வழியாகத் தபால்காரன் போட்டிருந்த கடிதம் சாரதாவின் கண்ணில் பட்டது; எடுத்துப் பார்த்தாள். மாலினி அவளுக்குத் தான் கடிதம் எழுதி யிருந்தாள்.

அன்புள்ள அம்மாவுக்கு,

மாலினி அநேக நமஸ்காரம். க்ஷேமம், எழுதவே எனக்கு வெட்கமாக இருக்கிறது. நீ இத்தனை சீக்கிரத்தில் பாட்டியாகப் போகிறாய் என்று நான் கனவிலும் கருதவில்லை. நான் நான்கு மாதங்களாகக் குளிக்காமல் இருக்கிறேன்! தீபாவளிக்கு வந்தபோதே உன்னிடம் சொல்லலாம் என்று நினைத்தேன். உன் மாப்பிள்ளைதான் 'உண்டாகி' யிருப்பது நிச்சயம் என்று தெரிந்த பிறகு எழுதலாம் என்று தடுத்து விட்டார். அடுத்த வாரம் நான் புறப்பட்டு வருகிறேன். மாலினி

சாரதா வாய் பேசாமல் கடிதத்தைக் கொண்டு போய்ச் சந்திரசேகரனிடம் நீட்டினாள். அவன் வாங்கிப் பார்த்தான்.

'என்னை வழியில் 'பாட்டி! பாட்டி!' என்று பழித்தீர்களே! கூடிய சீக்கிரத்தில் புது மாப்பிள்ளை தாத்தாவாகப் போகிறார்!' என்று சொல்லி விட்டுச் சிரித்தாள்.

'நீ பாட்டியானால் நான் தாத்தா தான்; அதற்கு உனக்கு இவ்வளவு சந்தோஷம் எதற்கு?'

'ஏன், நீங்கள் எனக்குப் பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்து விட்டோம் என்று பூரித்து நிற்கிறீர்கள்! ஆனால் அது மாலினிக்குத்தான் போகப் போகிறது!'

'ஏன்?'

'அவள் வளைகாப்புக்குப் பட்டுப் புடவை வேண்டாமா? நான் உண்மையாகவே பாட்டி ஆகிவிடப் போகிறேன்! எனக்கு எதற்கு ஆறு கஜம் புடவை?' சாரதா வாய் கொள்ளாமல் சிரித்தாள். சந்திரசேகரன் வாயடைத்து நின்றான்!

# ஸாண்டோஸ்

# காப் ஸிரப்

## இருமலுக்கு இதமளிக்கிறது

இருமல்—ஜலதோஷ நிவாரணமாக. இயற்கையன்னை அளித்தருளிய வைத்திய மூலிகைகளுள் மிகவும் கைகண்ட மூன்று மூலிகைகளில் இருக்கும் அதே சத்துக்கள், விஞ்ஞான முறையில் ஒன்றுசேர்ந்த நவீன மருந்தே ஸாண்டோஸ் காப் ஸிரப்.

தொண்டையிலுள்ள இரணவீக்கத்தை சட்டென்று கண்டித்து இதமளிப்பதற்கான மூலிகை பாபாவேர் ஸோம்னிஃபெரோம்; கட்டிப்போன கபத்தைக் கரைத்து, வெளிப்பேற்றிவிட உதவுவதற்கான மூலிகை ஸெபைலிஸ் இபெகாகுவான்ஹா; மூச்சடைப்பு வேதனையை அதிவிரைவில் தணித்துவிடுவது எபேத்ரா என்ற 'இளைப்பாற்றும்' சக்தியுள்ள மூலிகை;—ஆகிய மூன்று சத்துக்களும் இதில் இணைந்துள்ளன.

அதனால்தான் ஸாண்டோஸ் காப் ஸிரப், டாக்டர்கள் குறித்துக் கொடுக்கும் மருந்தாக விளங்குகிறது. மேலும், செர்ரிப் பழம் போன்ற அதன் இனிப்பை குழந்தைகள் பெரிதும் விரும்புகின்றனர்.

ஸ்விஸர்லந்து நாட்டு ஸாண்டோஸ் ஆராய்ச்சி சாலையின் மருந்துச் சரக்கு.







லைசென்ஸ் பெற்ற, ஸாண்டோஸ்ப்ராடக்ட்ஸ்ப்ரைவேட்
லிமிடெட் கம்பெனியால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

SCS.P. 2·50 TM.




# எலக்ஷன் ஏகாம்பரம்

"கதிர்"

காட்சி 1

[சோதிடர் சொக்கலிங்கம் பிள்ளை தெருத் திண்ணையில் அமர்ந்து, பஞ்சாங்கம், ஓலைச் சுவடிகள் முதலியவற்றைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறார். தம்முடைய மூக்குக் கண்ணாடியைக் கழற்றி அதை ஒருமுறை துடைத்துக் கொண்டு, வீட்டின் உள்புறம் நோக்குகிறார்]

**சோதிடர் :** (பயத்துடன்) பாக்கியம், பாக்கியம் !

**பாக்கியம் :** (கடுகடுப்பான முகத்துடன் வெளியே வந்து) நானும் பார்க்கிறேன் ! ஒரு மணி நேரமா... பாக்கியம் பாக்கியம்னு ஏன் அடிக்கறீங்க. எங்கேயானும் இந்தப் பஞ்சாங்க மூட்டையை யெல்லாம் கட்டிக்கிட்டுத் தொலையறதுதானே? வூட்டிலேயானு ஒரு சாமான் கிடையாது. அரிசிப் பானை காலி. மிளகாய்ப் பானை காலி. உப்பு காலி. எல்லாம் காலி.

**சோதிடர்:** ஏன் இப்படி யெல்லாம் காலி காலி என்கிறே ! ஏ காலி !

**பாக்கியம் :** என்ன என்ன ? காலியா ? யாரை.. உம்...ம்..

**சோதிடர் :** இல்லே, இல்லே...வாய்த் தவறுதலா காலி என்கிறதைக் காலின்னு சொல்லிப் பிட்டேன், பாக்கியம்! உன்னைப் போய் அப்படி நான் சொல்லுவேனா? வீட்டிலே அரிசி, பருப்பு, சாமான் இல்லேன்னு அதை எனக்கு முன்னாலேயே சொன்னால்தானே தெரியும்? இல்லாவிட்டால் எனக்கு எப்படித் தெரியும்? சோசியமா தெரியும்?

**பாக்கியம் :** அந்த மாதிரி உரக்கச் சொல்லாதீங்க. சோசியம் தெரியா விட்டாலும் தெரிஞ்சாப்பிலே நடந்தாத்தான் காலத்தை ஓட்டலாம். தெரிஞ்சுதா? சும்மா இங்கேயே ஒக்காந்துக்கிட்டு அதிகாரம் பண்ணுமே, எங்கேயாவது இந்தப் பஞ்சாங்க மூட்டையைத் தூக்கிக்கிட்டு, மூர்மார்க்கெட்டு, இல்லே ஒரு பஸ் ஸ்டாண்டைப் பார்த்துப் போய், மரத்தடியிலே ஒக்காந்துக்கிட்டு, கைரேகை பார்க்கப்படும், ஆருடம் சொல்லப்படும்னு கடை விரிச்சால், ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் கிடைச்சாலும் கிடைக்கும்! சும்மா இங்கே ஈயை ஓட்டிக்கிட்டு, எங்கிட்டேயும் ரெண்டு பாட்டு வாங்கிக்கிட்டு எதுக்காகக் கழுத்தை அறுக்கிறீங்கன்னு கேக்கறேன். ஊம்...!

**சோதிடர் :** அது சரி பாக்கியம் ! நீ சொல்றதும் நல்ல யோசனைதான். மூர் மார்க்கெட்டு பக்கம் போய்க் கடை விரிக்கலாம்... ஆனால் இன்று திங்கள் கிழமை. நாள் நல்லா இல்லே. நாளைக்குச் செவ்வாய். சரிதான். புதன் ஏகாதசி. பலன் பட்டினிதான். வியாழன் கேட்டை நட்சத்திரம். ஆகவே ஆகாது. வெள்ளி கலக நாள். கூடவே கூடாது. சனிக்கிழமை; அந்தக் கிழமையின் பெயரிலேயே சனி இருக்கு. உதவாத நாள். ஞாயிறு...... விடுமுறை நாள். எல்லோரும் சினிமா நாடகம்னு போவாங்களே தவிர எங்கிட்டே யாரும் வரப் போகிறதில்லே. ஆகையாலே...

**பாக்கியம்:** வாரத்திலே ஒரு நாளும் நல்ல நாள் இல்லேங்கிறீங்க. ரொம்பச் சரியாய்ப் போச்சு. இப்படிச் சோம்பேறித்தனமா திண்ணையிலே உட்கார்ந்துக்கிட்டிருந்தால் குடித்தனம் நடத்தி வாழ்ந்திருப்பிலேதான்...

**சோதிடர் :** அப்படியெல்லாம் ஒண்ணும் சொல்லாதே. எல்லாம் நல்ல காலம் வரும் !

**பாக்கியம் :** ஆமாம் ! வரும், வரும் ! மண்ணாங்கட்டி வரும்... !

[அப்போது பழைய மோட்டார் வண்டியொன்று வந்து நிற்கிறது. அதிலிருந்து சரிகை, மேல் அங்கவஸ்திரம், தலைப்பாகை, கோட்டு முதலியவை தரித்து ஒருவர் இறங்குகிறார். சொக்கலிங்கம் பிள்ளையும் அவர் மனைவியும் அதிசயத்துடன் அவரை நோக்குகிறார்கள்.]

**வந்தவர் :** என்னைத் தெரிகிறதா?...

**சோதிடர் :** (சில விநாடி நேரம் விழிக்கிறார். பிறகு) எங்கேயோ பார்த்த ஞாபகம் இருக்கு.....ஆனால்...

**வந்தவர் :** சற்று உரக்கப் பேசுங்க. எனக்குக் காது கேட்காது....

**சோதிடர் :** (உரத்த குரலில்) எங்கேயோ உங்களைப் பார்த்த மாதிரி இருக்கு...

**வந்தவர் :** எங்கே பார்த்தமாதிரி இருக்கு?

**சோதிடர் :** (உரக்க) ஊஹூம். எனக்குத் தெரியல்லீங்க...



**வந்தவர் :** நான் சொல்லட்டுமா?

**சோதிடர் :** சொல்லுங்க....

**வந்தவர் :** பத்துப் பதினைந்து வருஷங்களுக்கு முன்னாலே, மன்னார்சாமின்னு உங்களிடம் ஒரு வேலைக்காரன் இருந்தானே? அவனை ஞாபகம் வருகுதா?

**சோதிடர் :** (உரத்து) இருந்தான், இருந்தான்.

மோசக்காரப் பயல் அவன். வெறும் சோம் பேறி! எந்த வேலையைச் சொன்னாலும் கறு கறுப்பாகச் செய்ய மாட்டான். அவனே அடிக்கத் துரத்திப் போட்டேன்...அந்தப் பயலைத் தேடிக்கிட்டு வந்தீங்களா?

**வந்தவர்:** நிறுத்துங்க. அவனே நீங்க திட்ட வேண்டாம். நான்தான் அவன்!

**சோதிடர்:** (உரக்க) ஆ! என்ன! என்ன? மன்னார்சாமி! மன்னார்சாமியா நீ? அட, மன்னார்சாமி! அநியாயமா உன்னே யார் என்று தெரியாமல் திட்டிப் போட்டேனே...

**மன்னார்சாமி:** அதனால் என்ன? பெரிய வங்க வாய்னாலே திட்டுக் கேட்டால், அது ஆசிர்வாதம்போலே நன்மையைத் தரும்னு சொல்லுவாங்க. அது கிடக்கட்டும்...... வீட்டிலே எல்லாரும் சுகந்தானா?

**சோதிடர்:** சுகத்துக்கு ஒன்னும் குறை வில்லே (கதவருகே நிற்கும் மனைவியை மெள்ளத் திரும்பிப் பார்த்துவிட்டு) உலைநீர்ப் பானைக்குத்தான் அரிசி இல்லே...

**மன்னார்சாமி:** நீங்க சொல்றது சரியாகக் காதிலே விழல்லே!

**சோதிடர் மனைவி:** ஒன்னுமில்லே; அவரு ஏதோ உளறுகிறாரு! (புருஷனைப் பார்த்துப் பல்லைக் கடிக்கிறாள்.)

**மன்னார்சாமி:** அம்மா; என்ன சொல்றீங்க. அடிக்கடி ஏன் பல்லைக் கடிக்கிறீங்க...?

**சோதிடர்:** ஊ ஊம்......! ஒ......ன்னு...ம்...ஒன்னுமில்லே. பல் வலிங்க. இரண்டு நாளா, இந்தப் பல் வலியாலே ரொம்ப வாதைப்படுது...!

**மன்னார்சாமி:** அப்படிச் சொல்லுங்க! ரொம்ப சந்தோசம்.

**சோதிடர் மனைவி:** சந்தோசமா? நல்லா இருக்கே...எனக்குப் பல்வலி வந்தால் உங்களுக்குச் சந்தோசமா?

**சோதிடர்:** (குறுக்கிட்டு) பாக்கியம்! கம்மா இரு! வீட்டுக்கு வருகிறவங்களோடேயும் சண்டை போடுறியே...

**மன்னார்சாமி:** அம்மா என்ன சொல்லுது?

**சோதிடர்:** மன்னாங்கட்டி....

**மன்னார்சாமி:** (ஆச்சரியத்துடன்) ஹா! என்ன! தெரிஞ்சு போச்சா உங்களுக்கும் அது... ஆமாம்...மன்னாங்கட்டிதான். என்ன இருந்தாலும் நீங்க சோதிடரோ இல்லேயோ? ஆருடமாகவே, என் தொழிலைக் கண்டு பிடித்து விட்டீங்க. மன்னாங்கட்டிதான்.

வந்து கொண்டிருக்கிறது. பாருங்க ஒரு பழைய மோட்டார்கூட வாங்கியிருக்கிறேன். வீடு கட்டியிருக்கிறேன். பணம் ரொக்கமாக இருப தாயிரம் பாங்கியிலே போட்டிருக்கிறேன். இத்தனைக்கும் காரணம் அந்த மன்னாங் கட்டிதான்...

**சோதிடர் (உரக்க):** மன்னாங்கட்டியை என்ன செய்வீங்க...

**மன்னார்சாமி:** புழுதேரிக்கு அப்பாலே காட்டுப் பக்கத்திலே, சுத்தமான சிவப்பு நிறத் திலே மன்னாங்கட்டி நிறைய இருக்குதுங்க. அதைக் கொண்டு வந்து சலிச்சு வாசனை கலந்து, காகிதப் பாக்கெட்டுகளிலே போட்டு, 'நவரசப் பற்பொடி' என்று ஒரு பல்பொடித் தொழிலே ஆரம்பித்தேன். அதைக் கொண்டு பல் துலக்கினால், பல் எரிச்சல், பல் ஆட்டம், பல்வலி எல்லாம் அடியோடே போய் விடும்.

**சோதிடர் மனைவி (குறுக்கிட்டு):** பல் வரிசையையும் அடியோடு போக்கிவிடும்...

**சோதிடர் (மனைவியைப் பார்த்து):** உஸ்..!! கம்மா இரு, பாக்கியம்! (பிறகு மன்னார்சாமி யைப் பார்த்து) அதுதான் சரி. இந்த நாளிலே ஏதாவது தொழில் செய்து முன்னுக்கு வந்தால்தான் வந்தது.

**மன்னார்சாமி:** நான் வந்த காரியத்தைச் சொல்லிப்பிடறேன். அடுத்த மாசம் நம்ப வட்டாரத்திலே சட்டசபைக்கு ஒரு உப தேர்தல் நடக்கப் போகுது...கேள்விப் பட்டீங்களா?

**சோதிடர்:** நீங்க சொல்லித்தான் தெரியும். எனக்கென்ன சோசியமா...

**பாக்கியம்:** அப்படிச் சொல்லித் தொலைக் காதீங்க...மூடுங்க வாயை!

**மன்னார்சாமி:** என்னங்க......தெரிஞ்சதுங் களா? அந்தத் தேர்தலிலே நான் வந்து...

**சோதிடர்:** ரொம்ப நேரமா நின்னு கொண்டே பேசுகிறீங்களே, உட்காருங்க. உட்கார்ந்து பேசலாம்...நிற்காதீங்க...

**மன்னார்சாமி:** என்ன நிற்க வேண்டாம்னு சொல்றீங்களா எலக்ஷன்லே......காதிலே சரியா விழல்லே.

**சோதிடர் (உரக்க):** ரொம்ப நேரமா நிற்கிறீங்களே. உட்கார்ந்து பேசுங்கன்னு சொல்றேன், நிற்கிறீங்களே!...

**மன்னார்சாமி:** நிற்கலாமான்னுதான் கேட் கிறேன் ஆருடம் பார்த்துச் சொல்லுங்க.

**சோதிடர்:** விவரமாகச் சொல்லுங்க உங்க தொழிலைப்பற்றி, உட்காருங்க...

**மன்னார்சாமி:** அதெல்லாம்...ஒரு பெரிய வியாபார தந்திரமுங்க...இந்தப் பல்வலி, பல் ஆட்டம், பல் கூச்சம் இதெல்லாம் ஒரே நொடியில் பறந்து போக நான் ஒரு பல்பொடி தயாரித்து அந்தத் தொழிலைத் தான் செய்து கொண்டு வருகிறேன். அதிலே, ஏதோ உங்கள் ஆசிர்வாதத்திலே நல்ல லாபமும்



**சோதிடர்:** சொல்றேன். நிற்காதீங்க. உட்காருங்க...

**மன்னார்சாமி:** அடுத்த மாசம்தான் எலக்ஷன். எப்படி இருக்கு என் பேர் ராசி. ம...ன்...னா...ர்...சா...மி... ஆறு எழுத்து. (விரல் விட்டு எண்ணு கிறார்) நிற்கலாமா நான்...! பேர் ராசி எப்படி?

**சோதிடர்** (பஞ்சாங்கத்தைப் புரட்டிக் கொண்டு, ஏதேதோ மனத்துக்குள் கூட்டல்,

பெருக்கல் கணக்கு போடு கிறார்): ஆறு எழுத்து... வியாபாரமோ மண்ணுங் கட்டி...! ஆறும் மண் ணுங்கட்டியும் ... சேர்ந்து ... நவரசப் பற்பொடி. கன்னைராசி, ரொம்ப நேரமா, கால்கடுக்க நிற் கிறீங்க.

மன்னார்சாமி : நான் நிற்பதைப் பற்றிக் கவ லைப்படாதீங்க. சும்மா இருக்கட்டும். நான் எலக் ஷனுக்கு நிற்கலாமா, பார்த்துச் சொல்லுங்க!

சோதிடர் : பார்த்தாச் சது. காரியம் கைகூடும் போங்க. நிம்மதியா...



மன்னார்சாமி : ரொம்ப சந்தோஷம். இந்தப் பத்து ரூபாயை வச்சுக்குங்க.

சோதிடர் (மனைவியிடம் பணத்தைக் கொடுத்து விட்டு): ரொம்ப சந்தோஷம். பற் பொடி....

மன்னார்சாமி : அடாடா; மறந்து போய் விட்டேனே. இந்தாருங்கள் ஒரு பொட்டலம்.

## காட்சி 2

[மன்னார்சாமி வீட்டில் அவரும் அவ ருடைய தேர்தல் காரியதரிசி ஏகாம்பர ரும். மன்னார்சாமி ஒரு மேஜையின் முன் அமர்ந்து கொண்டிருக்கிறார். தேர்தல் காரியதரிசி ஏகாம்பரம் சில காகிதங்களை அவரிடம் காட்டுகிறார்.]

மன்னார்சாமி : இதெல்லாம் சரி! பொதுக் கூட்டத்துக்கு இவ்வளவு தடபுடலாக ஏற்பாடு செய்தால்...பணம் ரொம்பச் செலவாகுமே...

ஏகாம்பரம் : என்ன பிரமாதச் செலவு ஆகப்போகுது. இந்த எலெக்‌ஷன் ஏகாம்பரத் துக்கு அது தண்ணி பட்டபாடு. மொத்தம் நாற்பது இடத்திலே 'மீட்டிங்' போடணும். ஒலிபெருக்கிச் செலவு மொத்தம் நாலாயிரத் தைந்நூறு ரூபாய். பூமாலே...

மன்னார்சாமி : என்ன?

ஏகாம்பரம் (உரக்க): பூ...இல்லே பூ... அந்த மாலே...

மன்னார்சாமி : அட, பூ! இவ்வளவுதானே? நாலைஞ்சு மாலே வாங்கிட்டாப் போச்சு!

ஏகாம்பரம் (உரக்க): நாலைந்தா? சரி தான் போங்க. நானூறு மாலைக்குக் குறை யாமல் செலவாகும்...பிரசங்கம் பண்ண வருகிறவங்களுக்கெல்லாம் போடவேண்டாம்? மாலைச் செலவு இரண்டாயிரம்.

மன்னார்சாமி : ஊம்...அப்புறம்? ஏதேது... அடே அப்பா...!

ஏகாம்பரம் : காப்பி, டிபன் சாப்பாட்டுச் செலவு ஒரு எண்ணாயிரம்...

மன்னார்சாமி: இரு இரு...எனக்குத் தலை சுற்று...என்னவோ போலிருக்கிறது...சுற்று கிறது... (கண்ணை மூடிக் கொண்டு நெஞ்சை அழுத்திக் கொள்கிறார்.) ஊம்...ம்...அப்புறம் அப்புறம்......

ஏகாம்பரம் : டாக்ஸிச் கார், இருபதுக்கு... வாடகை, பந்தல் செலவு ...லைசான் லைட் செலவு ... எல்லாமாக ஒரு ஐயா யிரம்... ஆக மொத்தம் முப்பத்தைந்து நாற்பதி னாயிரத்துக்கு வந்தாச், ரொம்பக் குறைவுன்னு சொல்லணும்; சட்ட சபைத் தேர்தல் பாருங்க; வெறும் பஞ்சாயத்துத் தேர்தல்னு நினைச்சுப் போட்டீங்களா?

மன்னார்சாமி: ஏதோ, சோசியமெல்லாம்கேட்டு, எலக்‌ஷன்லே நின்னுயிப் போச்சு. இப்போ பின் வாங்கவும் முடியாது...நல்லா இருக்காது... பார்த்துக்கலாம் ஒரு கை...! இந்தா பாங்குக்கு ஒரு செக். இதை மாற்றிப் பணம் வாங்கிக் கொள். மறந்து விடாமல், செல வுக்கெல்லாம் கணக்கு எழுதி வை.

[அப்போது நாகரீக உடை உடுத்திய பெண்மணிகள் சிலர் உள்ளே பிரவே சிக்கிறார்கள்.]

மன்னார்சாமி: வாங்க அம்மா! எங்கே வந்தீங்க சொல்லுங்க...,

வந்த பெண்மணிகளில் ஒருவர் : நமஸ் காரம்! நாங்கள் அன்பு நெறி அனாதைகள் ஆதரவு நிலயத்திலிருந்து வருகிறோம். எங்க ளுடைய நிலயத்தில் இருநூறு குழந்தை களுக்கு மேல் இருந்து வருகின்றனர். எல்லாம் சின்னஞ்சிறு குழந்தைகள். அவற்றை அன் புடன் வளர்த்து அன்னம் அளிப்பதும், ஆடை தந்து, கல்வி புகட்டி, உடல் நலம் காத்துச் சேவை புரிந்து வருகிறோம்.

ஏகாம்பரம் : ஐயாவுக்குச் சரியாகக் காது கேட்காது...என்ன வேண்டுமென்று உரக்கச் சொல்லுங்க...

சமூகசேவகி : குழந்தைகள் நிலயத்துக்குக் குறையாத நிதி வேண்டும். நாங்கள் எவ்வளவு தொகை அளித்தாலும் அதை...

மன்னார்சாமி : பணமா?

சமூக சேவகி : ஆமாம்...

மன்னார்சாமி : அதெல்லாம் இப்போ ஒன் னும் கேட்காதீங்க ... எனக்கு ஏகமான செலவு...காலணாக்கூட இப்போ என்னால் கொடுக்க முடியாது. உங்களுடைய நன்மைக் காகத் தான் எலக்‌ஷன்லே நிக்கிறேன். சட்ட சபைக்குப் போய், உங்களுக்கெல்லாம் சர்க் கார் நிறையப் பணம் கொடுக்கணும்னு சொல்றேன்; நீங்க இப்போ போங்கம்மா. எலக்‌ஷன் வேலை எனக்குத் தலைக்கு மேலே இருக்குது.

சமூக சேவகி: சர்க்கார் மூலம் உதவி செய்யப் போவது இருக்கட்டும். நீங்கள் சொந்த முறையில் ஏதாவது பண உதவி செய்யக் கூடாதா?

மன்னார்சாமி : இப்போ ஒன்னும் கேட்கா தீங்க. தொந்தரவு பண்ணாமே போயிடுங்க.

[சமூகசேவகி வெளியேறுகிறாள்.]

மன்னுர்சாமி : ஏகாம்பரம் ! இப்படி யாசகம் கேட்க வருபவர்களை யெல்லாம் இனி தேர்தல் முடியும் மட்டும் உள்ளே வர விடாதே! தெரிஞ்சுதா? நேரமாயிட்டது. நீ பாங்குக்குப் போ !

['ஸார்! ஸார்!' என்ற குரல் மீண்டும் கேட்கிறது. ஏகாம்பரம் திரும்பிப் பார்த்தும் பதில் கூறுவதற்கு முன் ஒருவர் உள்ளே நுழைந்து ஒரு நோட்டுப் புஸ்தகத்தை நீட்டுகிறார்.]

ஏகாம்பரம் : (அதைப் பார்த்து விட்டு) இப்போதுதான் சிலர் இங்கே வந்து நிதி உதவி கேட்டார்கள். இல்லையென்று ஐயா அதட்டிப் போகச் சொன்னுரு.

மன்னுர்சாமி: (கோபமாக) என்ன அது?

ஏகாம்பரம் : புயல் நிவாரண நிதி வசூலிக்கும் தொண்டராம் இவரு. பண வசூலுக்கு வந்திருக்கிருரு.

மன்னுர்சாமி : போ ஐயா வெளியே! போ, ஐயான்னு என்ன முழிச்சுப் பார்க்கிறே... புயலாம் நிவாரணமாம்.

தொண்டர் : ஏதோ...நீங்கள் தேர்தலுக்கு நிற்கிறீங்களென்னு நிதி வசூலுக்கு வந்தேன். நீங்களானுல் புயல் போலவே சீறுகிறீங்களே !

மன்னுர்சாமி : என்ன ஐயா சொல்லறே? காது கேக்கல்லே.

தொண்டர் : காது கேட்காத நிலைமையில் தானு எலக்ஷனுக்கு நிற்கிறீங்க. ஐயாங்களுடைய குறையெல்லாம் எம்.எல்.ஏ. ஆனதும் உங்கள் காதிலேயா விழப் போகுது?

(தொண்டர் வெளியேறுகிறர்)

## காட்சி 3

[கிழிந்த உடையில் மன்னுர்சாமி, பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருக்கிறான். அதே பஸ் ஸ்டாண்டுக்குப் பூமாலை வியாபாரி, கையில் ஒரு பூக் கூடையுடன் பஸ் ஏற வருகிறர்.]

மன்னுர்சாமி: பூக்கார ஐயா சௌக்கியங்களா? என்னைத் தெரியுதுங்களா?

பூக்காரர் : அட, மன்னுர்சாமிங்களா ?

மன்னுர்சாமி: இரண்டு வருசங்களுக்கு முன்னுலே நடந்த எலக்ஷனிலே உங்களிடம் ஏராளமாகப் பூ வாங்கினேன்.

பூக்காரர் : ஆமாம்பா! இப்போ அதையெல்லாம் நெனச்சு என்ன பிரயோசனம்...? இப்போ, ஊரெல்லாம் முனிசிபல் எலெக்ஷன் நடக்குது. பூ கொண்டு போகணும் நெருக்க.

மன்னுர்சாமி: உங்களிடத்திலே கேட்கிறதுக் கென்னங்க, வித்தியாசமாகவா நெனைக்கப் போறீங்கநீங்க...ஒரு ஐந்து ரூபாய் பணம் கொடுங்க......ரெண்டு நாளிலே....

பூ வியாபாரி : அதுதானே இல்லே. வேறே யாரையாவது கேட்டுக்க...அதோ! பஸ் வந்து விட்டது !

மன்னுர்சாமி (தனக்குத்தானே) : எலக்ஷன் ஏதுண்டாயிருந்தானே ஏகாம்பரம், அவன் வீட்டுக்காவது போய்ப் பார்க்கிறேன்.

(எலெக்ஷன் ஏகாம்பரத்தின் வீட்டுவாசல். மன்னுர்சாமி கதவைத் தட்டுகிறன்.)

மன்னுர்சாமி : ஏகாம்பரம்! ஏகாம்பரம் !! ஸார்!...ஏகாம்பரம் ஸார்!

ஏகாம்பரத்தின் மனைவி (கதவைத் திறந்து கொண்டு வந்து) : அடாடா! நீங்களா? அவர் இன்னும் ஊரிலேயிருந்து வரலீங்களே?

மன்னுர்சாமி: எப்போ வருவாரு அம்மா!...

ஏகாம்பரத்தின் மனைவி : என்னைக்கு வருகிறரோ சொல்ல முடியாது.

[கதவைத் தாளிட்டுச் செல்கிறள்.]

[சோதிடர் சொக்கலிங்கம் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து, விரல் விட்டுக் கிழமை களை எண்ணிக் கொண்டிருக்கிறர்.]

மன்னுர்சாமி: நமஸ்காரம் ஐயா !

சோதிடர் : (திரும்பிப் பார்த்து உரத்த குரலில்) அடேடே ! மன்னுர்சாமி ! என்ன உடம்புக்கு? ஏன் இப்படி இளைச்சுப்போனே? எலக்ஷன்லே வேறே யாரோ ஜெயித்து விட்டானுமே !

மன்னுர்சாமி : அதை ஏன் கேட்கிறீங்க, போங்க...உங்களுக்குத் தெரியாதா ?

சோதிடர் : எனக்கென்ன ஜோசியமா தெரியும். சொல்லக் கேள்விதான்.

மன்னுர்சாமி : சம்பாதிச்ச பணம் அவ்வளவும் போயிட்டுதுங்க எலெக்ஷன்லே.

சோதிடர் : (உரத்த குரலில்) ஹும்... காலக் கோளாறு. பல்பொடித் தொழிலில் மண்ணைப் பணமாக்கினே. எலெக்ஷன்லே பணத்தை மண்ணுக்கினே. நான் நீ குறிப்பாகத் தெரிஞ்சிக்கணும்னு, நிற்காதே, நிற்காதேன்னு அடிச்சுக்கிட்டேன். எலெக்ஷன் ஏகாம்பரம் பேச்சைக் கேட்டுக்கிட்டு நின்னே. இப்போ தெருவிலே நிக்கிறே. அது போகட்டும். இப்போ எங்கே வந்தாய்......பொடி வாங்கணும். காலையிலிருந்து அதற்குச் சில்லறை இல்லே.

மன்னுர்சாமி : இங்கேயும் அதே நிலைமை தான். என்னைப் பழையபடி உங்களிடத்திலேயே வேலைக்கு வைச்சுக்குங்க.....நானும் பழைய நிலைமைக்கு வந்து விட்டேன் !

சோதிடர் : (உரக்க) நானும் பழைய நிலைமையிலேதான் இருக்கிறேன்......உன்னை வேலைக்கு வைச்சுக்கலாம்னு சொல்கிறயா ?

மன்னுர்சாமி : முன்பு, உங்களிடம் வேலையை விட்டுப் போனதிலுல்தான் எனக்கு நல்லகாலம் ஆரம்பித்தது. அதனுலேதா கேட்கிறேன். மறுபடியும் ஒரு நாளாவது உங்களிடம் என்னை வேலைக்கு வைத்துக் கொண்டு, தள்ளிவிடுங்கன்னு. மறுபடியும் எனக்கு நல்ல காலம் பொறக்கா தான்னு......

சோதிடர் : அதுவும் சரிதான் ! என் கையாலே வேலையை விட்டுத் தள்ளினுல் அதிலிருந்து அதிர்ஷ்டம் ஆரம்பிக்கும்னு சொல்றே. அது சரி. ஆனுல்...என்னுடைய வறுமை நிலைமையிலே, உன்னை வேலைக்கு வைச்சுக்கிட்டா, உன்னை அம்மா இருக்கா பாரு, உன்னோடு என்னையும் சேர்த்து வெளியே அனுப்பிச்சுடுவாங்க. ஆகையாலே தயவு செய்து போயிடு அப்பா இந்த இடத்தை விட்டு. அம்மா ஆஸ்பத்திரிக்கு மருந்து வாங்கப் போயிருக்கு. வருகிற நேரம். போயிடு!

[மன்னுர்சாமி வெளியேறுகிறன். அப்பொழுது எலெக்ஷன் ஏகாம்பரத்தின் கார் அவன் கண்ணில் மண்ணை வாரித் தூவிக்கொண்டு போகிறது.]

# தனது தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ் ஒன்றுதான்



# பின்னியின் லஸ்டலின்

## பல சலவைகளுக்குப் பின்பும் புதியதாகவே விளங்குகிறது

ஷர்ட்டுகள் தைத்தவுடனே மட்டும் புதியதாக விளங்கினால் போதாது. பல சலவைகள் ஆன பின்பும் அவற்றின் புதிய தோற்றம் நீடிக்க வேண்டும். பின்னியின் லஸ்டலின் என்றும் புதியதாக விளங்குவதோடு பல சலவைகளுக்கு பின்பும் நீடித்து உழைக்கிறது.

BINNY'S lustalin

பின்னியின் லஸ்டலின்

'சான்பொரைஸ்ட்'
அமெரிக்காவின் [illegible] க்ளுயட், பீபாடி & கம்பெனியின் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

BY 4039

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 94 கொசு

கொசுவுடன் அனுமயக் குழுவினர் பெரும் போர் - கடும் போர் புரிந்து வருகின்றனர். இதில் ஓரளவு வெற்றியைக் கண்டு விட்டதாகவும் சொல்கின்றனர்.

''இது என்ன அதிசயம்! மிகவும் அற்பமான விஷயத்தைக் குறித்து அலட்சிய புத்தியுடன் பேசும்போது, 'கிடக்கிறான், சார்! விட்டுத் தள்ளுங்கள். கொசுப் பயல்.' என்கிறோம். 'இது ஒரு அற்ப விஷயம். கொசுக்கடி போன்றது. [Flea bite]. இதை நான் பொருட்படுத்தவே இல்லை' என்று சொல்கிறோம். இப்படியொரு அற்பமான கொசுவுடன் 'பெரும்போர்' 'கடும்போர்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு என்னதான் செய்யவிருக்கும்? இப்போரில் 'ஓரளவு வெற்றி' கண்டு விட்டதாகப் பெருமைப் படுவதற்கும் என்ன இருக்கிறது?'' என்று கேட்கிறீர்களா?

கேளும் ஐயா, சொல்கிறேன். மஹா மஹா அயோக்கியன் ஒருவன். இவனுக்கு 'சமயோசிதம்' 'காரியவாதி' என்பது போன்ற பல பிருதுகள் அல்லது அடைமொழிகளும் உண்டு. சகல கலா வல்லவன் என்று ஒரு சொல்லில் இவன் பெருமையைச் சொல்லிவிடலாம். ஆனால் இவனுக்குத் தெரியாதது ஒன்றுண்டு. அதுதான் 'நேர்மை' எனப்படுவது. 'மனச்சாட்சி' என்று வேணுமானாலும் சொல்லுங்கள். நேர்மையை அறியாத, மனச்சாட்சியே இல்லாத பிரகிருதி என்றால் இவருக்குத் தான் தகும். இவருடைய நடத்தையைப் பின்பற்றிச் செல்லும் இயல்பு கொசுவுக்கு உண்டு என்று வடமொழியில் ஒரு பாட்டு.

வரும்போதே, 'நமஸ்காரம் என்று காலில் விழ்வான்' இந்த அயோக்கிய சிகாமணி. கொசுவும் இப்படித்தான் முதலில் காலையும் பிறகு முக்கியமாக முழங்காலுக்குக் கீழேயும் - பின்புறமுள்ள 'ஆடுசதை' என்ற பாகம் - இந்த இடங்களைக் கடித்து ரத்தத்தை ருசி பார்க்கும்.

காலக்கிரமத்தில்—அல்லது அடுத்த படியாகக் காதின் அருகில் 'கொய்ங்' என்று [தன் விஷயத்தை] மிக விசித்திரமான சத்த [உபதேச]ம் செய்யும்.

பிறகு, சமயம் பார்த்து, 'சந்து விட்டால் வந்து விட்டேன்' என்று மூக்கோ, காதோ ஒரு கணத்துக்குள்ளே கொஞ்சமாவது பயமோ கூச்சமோ இல்லாமல் மின்னல் வேகத்தில் புகுந்துவிடும். பிறகு சொல்லவும் வேணுமா? இப்படியாகக் கொசு ஒரு பரம அயோக்கியனின் நடத்தையையெல்லாம் பின்பற்றும் இயல்பு பெற்றது என்று அவ்வடமொழிப் பாட்டுக்குப் பொருள். எவ்வளவு பொருத்தமான உவமை பாருங்கள்! ஒரு அயோக்கியனைத் தொலைத்துக் கட்டுவது சாமானிய காரியமல்ல. இந்த அயோக்கியனின் திருஷ்டிக்கு இலக்கானவரோ...? படுநாசம் அடைவதிலிருந்து தப்ப நேரிடுமானால் அதிசயம் எனலாம். இருவானர் கொசுவும் இதேசிறப்புவாய்ந்தவர்தான்.

கும்பகோணத்தில் கொசுக்களின் பாதை மிகவும் அதிகம் என்று ஒருகாலத்தில் பெருங் கூப்பாடு போட்டனர். ''விட்டேனு பார்!'' என்று இக்கொசுக்களுடன் ஒரு கடும் போரைத் தொடங்கினர் அனுமயக் குழுவினர். அதற்காக எடுத்துக் கொண்ட முயற்சிகள் பல. தெருக்களையெல்லாம் சுத்தமாக வைத்திருக்க ஏற்பாடு செய்தனர். குப்பை கூளங்களெல்லாம் போக்கப்பட்டுத் தெருக்கள் சுத்தமாக்கப்பட்டன. சாக்கடைகளைச் சரிவரக் கட்டி - வாட்டம் கொடுத்தும்— வெளியில் தெரிய முடியாதபடி, நிலத்தடியில் அமைத்துப் புரட்சிகரமான சீர்திருத்தத்தைச் செய்தும் முடித்தனர். தெருவிலெல்லாம் சாக்கடைத் தண்ணீர் வழிந்தோடிப் பெரு வெள்ளமாகவும்—குளமும் குட்டையுமாகவும் நிற்பது போக்கப்பட்டது. நடப்பவரெல்லாம் ''தூரம் தாண்டுதல்'' செய்து வழியைக் கடக்க வேணுமென்ற நிலை மாறியது.



...பெரும் போர்....கடும்போர்

கொசுப் போக்கி மருந்துகளை அவசியமான இடங்களில் தவறாமலும்- அவசியமில்லாத இடமானாலும் சந்தேகம் வேண்டாமென்று அவ்விடங்களிலும்—தெளித்தும் பீச்சுக் குழாய்கள் மூலம்

பீச்சியும் கொசுக்களுடன் பெரும் போரைக் கடுமையாகப் புரிந்தனர். நீர் நிலையங்களிலும் சேறு சகதியுள்ள இடங்களிலும் கொசுக்களின் முட்டை குஞ்சு முதலியவை பதுங்கி நிற்கவும், ஒளிந்து வாழவும் கூடுமென்று அவற்றையும் போக்கத் தேவையான உபாயங்களைத் திறம்படச் செய்தனர்.

கொசுக்களும் ஒழிந்தன. இவ் வெற்றியை யாவரும் வரவேற்றுக் கொண்டாடினர். உண்மையிலேயே சந்தோஷப்பட வேண்டிய விஷயம்.



தெருச் சாக்கடைகளை 'ஹை ஜம்ப்' தாண்டி....

கொசுக்களும் உயிர்ப்பொருள் தானே? தாம் எப்படியும் உயிர் வாழ வேணுமென்ற முயற்சியைச் சிறிதும் கைவிடாது பின்பற்றும் இயல்பு ஒவ்வொரு உயிர்ப் பொருளுக்கும் இருப்பதுபோல் கொசுக்களுக்கும் இருக்குமல்லவா? மனிதன், தான் மட்டும் கொசுக்களிடமிருந்து தப்பி உயிர்வாழ வேணுமென்று போர் தொடுக்க முயலும்போது கொசுக்களும் அதே காரணத்துக்காக — தற்காப்புக்காக — எதிர்ப்போர் செய்யவோ அல்லது மனிதன் புரியும் கொடுமையைச் சமாளிக்கவல்ல விதத்தில்—சூழ்நிலையையும் அனுசரித்துத் தன் வாழ்க்கைத் தரத்தை மாற்றிக் கொள்ளவோ முயலாமல் இருக்குமா? அப்படியிருக்குமென்று எதிர்பார்ப்பது புத்திசாலித்தனமாகுமா? "நீரு பெப்பெ நீ தாதகு பெப்பே!" என்ற கதையாகக் கொசுக்களின் சரிதை நடந்து வருகிறது.

"சரகுண்ணி சரகுண்ணி செத்தாயா?" என்றும், "நானேன் சாவேன் சிவனுரே!......" என்றதாம் உண்ணி. இப்படி ஒரு பழைய கதை. இதைப் போலத்தான் ஆயிற்று. இந்தக் கொசுவுடன் புரிந்த போராட்டமும்.

திடீரென்று கும்பகோணத்திலிருந்து ஒரு கூப்பாடு எழுந்தது. ஊரில் ஈக்களின் பாதை சொல்லி முடியாது. தெருப்பைக் கூட மொய்த்துக் கொள்ளுமோ என்ற அளவுக்கு ஈக்கள் உண்டாகியுள்ளன. வாழ முடியவில்லை என்றனர் மக்கள். இதன் விளைவாக ஊரில் "டைபாய்டு" "டிஸெண்ட்ரி" என்று பெருவாரியான மக்கள் இன்னலுக்குள்ளாயினர்.

கொசுக்கள் தொலைந்தது உண்மைதான். ஆகவே "மலேரியாவும்" "பைலேரியாவும்" கட்டுக்கு அடங்கித்தான் இருக்கவேணும். ஆனால்..? "வாலு போச்சு கத்தி வந்தது டும் டும்" என்ற கதையாகக் கொசுக்கள் ஈக்களாகவும்-மலேரியா-டைபாய்டாகவும் தோற்றம் பெறலாயிற்று. கொசுக்கள் தொலைந்ததால்தான் ஈக்கள் உண்டாயின என்றும் விஷயமறிந்த ஒரு சிலர் சொல்லி வந்தார்கள். இவ்விதப் போராட்டத்துக்கு முடிவு ஏது? எப்போது?

வீட்டையும் தெருக்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளத்தான் வேண்டும். சாக்கடைத் தண்ணீர் தெருக்களில் பெருகி ஓடுவது - தேங்கி நிற்பது இவை எல்லாவற்றையும் போக்குவதும் அவசியந்தான். ஆனால் ஒரு முனைச் செயலாகக் கொசுக்களோடு மட்டும் போர் புரிந்தால் போதாது. கொசுக்கள் மட்டுமல்ல, இன்னும்......ஈ எறும்பு என்னுயிரம் ஜீவராசிகளும் எவ்வித இன்னலைச் செய்தாலும் நமது ஆரோக்கியம் பாதிக்கப்படாத வகையில் ஒரு சகிப்புத் தன்மையை நம்முள் நாம் தேடிக் கொள்ளவும் முயன்றிடல் அவசியம். இப்படி இரு முனையில் முயல்வதுதான் அறிவாகும்.

# வானத்தாமரை

## சுதர்சன்

தமிழாக்கம்: ரா. வீ.

## 9. வானத்தாமரை

கண்ணால் காணாத காலத்திலேயே, சதாசுகரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த கடைக்காரன், அவரை வானுயர் தெய்வமாகக் கணக்கிட்டிருந்தான். 'துயரத்துக் கெல்லாம் அப்பாற்பட்டவர்' என்று முடிவு கட்டியிருந்த அவனுக்கு அவர் அப்படி விசித்து விசித்து அழத் தொடங்கவே, 'அநீதியையும் அநியாயத்தையும் காண நேருங் காலத்தில் தெய்வமும் துயரம் மீறி அழத் தொடங்கும் போலும்!' என்று தோன்றியது. எனவே, அவருக்கு ஆறுதல் அளிப்பவன் போல், "தாங்கள் இருக்கும் இடத்தில் துக்கம் தலைகாட்டுமா? தாங்கள் வாழும் இடம் சொர்க்கத்துக்குச் சமானம் அல்லவா? தங்கள் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே அவள் கண்கள் பனிச்சிட்டு ஒளி வீசுவதை நான் கண்டிருக்கிறேன். தங்களைத் தகப்பனாருக்கும்மேலாக மதித்து வந்தாள் என்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். தாங்கள் அதற்குத் தகுந்தவர்தான் என்று தங்கள் முகமே சொல்லுகிறதே! அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்களே, அது எவ்வளவு உண்மை என்பது தங்களைப் பார்த்தபின் விளங்குகிறது......" என்றான் கடைக்காரன்.

சதாசுகருக்கு அவன் பேச்சை நிறுத்த வேண்டும் என்று தோன்றியது. ஆனால் குரல் தழுதழுத்துவிடவே, அவரால் கூற முயன்றதைக் கூற முடியவில்லை. "என் உயர்வைக் கூறுவதாகக் கருதி உச்சாணிக் கிளையில் தூக்கி உட்கார வைத்து ஏன் அப்பா கீழே தள்ளுகிறாய்? என் உள்ளத்தை ஏன் அப்பா துளைக்கிறாய்? அவளுக்கு நான் என்ன அப்பா நல்லது செய்துவிட்டேன்?" என்றவர் மீண்டும் கேவிக் கேவி அழத் தொடங்கி விட்டார்.

ஆனால் கடைக்காரன், தான் சொல்ல நினைத்ததைச் சொல்லாமல் விடுவதாயில்லை. எனவே, "தாங்கள் செய்ததைக் காட்டிலும் தகப்பன்கூட ஒன்றும் செய்துவிட மாட்டான். இது முற்றிலும் உண்மை. கிராமம் முழுவதும் கட்சி கட்டிக்கொண்டு ஒரு புறம் நின்றதாம். நீங்கள் அதை எதிர்த்துத் தனியாக இன்னொருபுறம் இருந்தீர்களாம். அதுவும் யாருக்காக? யாரோ ஒரு அநாதைப் பெண்ணுக்காக. இது சாதாரணமான காரியமா? இதைச் சொன்னால் யாராவது நம்பத்தான் நம்புவார்களா? கைலாசநாதனால் கிராமத்தார்களின் எதிர்ப்பை ஆறு மாதங்கள் சேர்ந்தாற்போலச் சமாளிக்க முடியவில்லை. ஆனால் தாங்களோ அதைவிட மேலான எதிர்ப்பை ஆறு வருஷங்கள் சமாளித்தீர்கள். சமாளித்ததோடு மட்டும் அல்ல; வெற்றியும் கண்டீர்கள். கைலாசநாதனின் காரியங்கள் சிற்றின்ப வேட்கையை ஆதாரமாகக் கொண்டவை. ஆனால் தங்களுடைய செயலோ ஆத்மாவின் எல்லையில்லாத அன்பின் தூண்டுகோலாகும். சிற்றின்பத்துக்கும் பேரின்பத்துக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் அல்லவா? அவன் எவ்வளவுதான் முயன்றாலும் தங்களுக்கு இணையாக முடியுமா? தங்களுடைய கால்தூசிதான் பெற முடியுமா? அது கிடக்கிறது, செருப்பு! விட்டுத் தள்ளுங்கள்! என்னதான் உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா?" என்றான்.

"அது கிடக்கட்டும். நான் இப்பொழுது என்ன செய்தால் நலம் என்று தங்களுக்குத் தோன்றுகிறது? கைலாசநாதனைக் கண்டு பேச எனக்கு விருப்பமில்லை. நான் அப்படியே கண்டு பேசினாலும் பலன் ஒன்றும் பிரமாதமானதாக ஏற்பட்டு விடப் போவதில்லை. வீணில் மனஸ்தாபம்தான் மிஞ்சும்; மனம் புண்ணாகிப் புளிக்கும். ஆமாம்! இந்தப் பெண்ணை என்னோடு அழைத்துக்கொண்டு போய்விட்டால் என்ன, சொல்லுங்கள்! ஒன்றும் இல்லாவிட்டாலும் என் கண்ணெதிரி



லாவது அவள் இருப்பாள் அல்லவா?" என்று கேட்டார் சதாசுகர்.

"தாங்கள் கூறியது லட்சத்தில் ஒரு வார்த்தை. ஆனால் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதே!" என்ருன் கடைக்காரன்.

"அதனால் என்ன? ஒரு வேளை மருந்தினல் குணம் அடையலாம் அல்லவா? வியாதி முற்றிப்போய் விட்டது. பயங்கரமாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் தீராத வியாதி அல்லவே! ஆகவே, முயற்சி செய்து பார்த்தால் என்ன?" என்று அவனைக் கேட்டார் சதாசுகர்.

"ஆமாம், ஆமாம்! அதுதான் நியாயம். எதற்கும் கடவுள் மீது பாரத்தைப் போட்டு அழைத்துப் போய்ப் பாருங்கள். இவள் கவலைப்பட இங்கே யார் இருக்கிருர்கள்? சுவாமி! அங்கேயாவது தாங்கள் இருக்கிறீர்கள். தங்களுடன் இருந்தால் இவளுக்கு எவ்விதமான துன்பமும் நேராது. இங்கே இருந்தால்..." என்ருன் கடைக்காரன்.

அதற்குள்ளாகச் சதாசுகர் குறுக்கிட்டு, "இங்கே இருந்தாலா? அப்பப்பா! இந்த ஊர்ப் பிள்ளைகள் நல்ல ஆசாமிகளையே நாலு நாழிகைக்குள் பைத்தியமாக்கிவிடுவார்கள் போலிருக்கிறதே! இப்படிப்பட்டவளை இவர்கள் என்னதான் செய்ய மாட்டார்கள்? கல் எடுத்து அடிக்கிருர்கள்; கண்ட

படி இட்டுகிறார்கள். கண்களில் விரலை விட்டு ஆட்டுகிறார்கள். பாவம், இவன் எப்படித்தான் இவ்வளவையும் பொறுத்துக் கொள்ளுகிறானோ? இப்படியெல்லாம் செய்தால் இவளுக்கு ஏற்பட்டிருக்கும் பைத்தியம் இன்னும் முற்றியல்லவா போகும்?" என்றார்.

"இவர்கள் பிள்ளைகளா? கோட்டான்களும் சாத்தான்களும் அல்லவா இந்த உருவத்தில் வந்திருக்கின்றன! சாத்தான்கள் என்றால் சாதாரணச் சாத்தான்களா? குட்டிச்சாத்தான்கள் அல்லவா? இந்தச் சாத்தான்களைக் கண்டு தகப்பன் சாத்தானே நடுங்கும் பொழுது நாம் எம்மாத்திரம்?" என்று அந்தக் கடைக்காரன் குழந்தைகளின் உபத்திரவம் பொறுக்க மாட்டாமல் அவற்றைத் தனக்குத் தோன்றியபடி நிந்திக்கத் தொடங்கி விட்டான்.

"இன்று மாலை இவளை என்னுடன் அழைத்துப் போவதாக முடிவு கட்டி விட்டேன். இவள் இங்கேதானே இருப்பாள்? எங்கும் போய்விடமாட்டாளே?" என்று கேட்டார் சதாசுகர்.

"எங்கே போய்விடப் போகிறாள்? இங்கேதான் இருப்பாள்!" என்றான் கடைக்காரன்.

ஆனால் மாலை நேரத்தில் சதாசுகர் அங்கே வந்தபொழுது சாருமதி அங்கே இல்லை. சதாசுகர் நகரம் எல்லாம் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்து விட்டார். கடைத் தெருவில் மூலை-முடுக்கு எங்கும் விடவில்லை. ஆனால் சாருமதி அகப்பட்டால் தானே? மறுநாள் கோமதி ஆற்றிலிருந்து அவளது பிணம்தான் கிடைத்தது. சதாசுகர் தலையில் அடித்துக் கொண்டார். ஆனால் கைலாசநாதனின் கண்களில் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வரவில்லை. அன்றுதான் அவன் வீட்டில் அவனுடைய நண்பர்களுக்குப் பிரமாதமான விருந்துக்கு ஏற்பாடாகியிருந்தது. மாலை நான்கு மணி சுமாருக்குக் காட்டில் சாருமதியின் பிணம் எரிந்து கொண்டிருந்தது. கைலாசநாதன் வீட்டில் அதே சமயம் நண்பர் குழாம் புடை சூழச் சிரித்துப் பேசியவாறு ஏக உல்லாசமாகத் தேநீர் பருகிக் கொண்டிருந்தான்.

அரசன் அன்று கொல்லுவான்; தெய்வம் நின்று கொல்லும் என்பது பொய்யாமொழி. தெய்வம் தாமதம் செய்யுமே ஒழிய அநியாயம் செய்வதில்லை. இந்தச் சம்பவம் நடந்து இரண்டு மாதங்கள் ஆவதற்குள்ளாகக் கைலாசநாதனின் பாக்கியசக்கரம் சுழன்று கொடுத்தது. வியாபாரம் கொடித்தது. அதன் பலனாகப் பணம்-காசு, வீடு-வாசல், தோட்டம்-துரவு, கடை-கண்ணி, தொழில்-வியாபாரம் எல்லாமே நஷ்டத்துக்கு இலக்காயின. நேற்று லட்சாதிபதியாக இருந்தவனை இன்று பாக்கிய தேவதை பிச்சாதிபதியாக்கி வஞ்சம் தீர்த்துக் கொண்டு விட்டது. அந்தப் பழைய ஆடம்பரம், பகட்டு, பணத்திமிர் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டன.

கடவுளின் இந்த லீலைகளைக் கண்ட கைலாசநாதன் உள்ளம் உடைந்து போய் உட்கார்ந்து விட்டான். விதியின் கதியை என்னவென்று சொல்வது? கண்மூடிக் கண் திறப்பதற்குள் என்னவெல்லாம் நிகழ்ந்து விட்டது? நேற்று வரை அந்த லக்ஷ்மணபுரியில் நாலு பேருக்கு நடுவிலே நாணயமாக வாழ்ந்து வந்தானே, கடைத் தெருவிலே கண்யத்துடனும் கனமிடுக்குடனும் உல்லாச நடை போட்டு உலவி வந்தானே, அதே லக்ஷ்மணபுரியில் தலைநிமிர்ந்து நடக்க இன்று அவனுக்குத் துணிவு இல்லாமற் போய்விட்டது. நேற்று வாழ்ந்த மக்கள்தான், மதிப்பும் மரியாதையும் கொடுத்துக் கைலாசநாதனைக் கண்யமாக நடத்தி வந்த அதே ஜனங்கள்தான், இன்றும் லக்ஷ்மணபுரியில் இருந்தார்கள். ஆனால் இன்று அவர்கள் கைலாசநாதனைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. அவனுக்கு நெருங்கிய பந்துக்கள் என்று சொல்லிக் கொண்டவர்கள் கூடப் பார்த்தும் பார்க்காதது போலப் போகலாயினர். எங்கேயாவது ஏதாவது இவன் கேட்டு வைத்து நமக்குக் கை நஷ்டம் ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்ற பயமோ, என்னவோ? 'பணக்காரனைச் சுற்றிப் பத்துப் பேர்; பைத்தியக்காரனைச் சுற்றிப் பத்துப்பேர்!' என்று எல்லோரும் சொல்லுகிறார்களே, அது எவ்வளவு அநுபவபூர்வமான உண்மை!

பணம் இருக்கும்பொழுது பறித்துத் தின்ன, காசு இருக்கும்பொழுது கொத்தித் தின்னப் பத்துப் பேர் காத்திருப்பார்கள்; பசை இருந்தால் பத்துப் பேர்



அட்டையாக ஒட்டிக் கொண்டிருப்பார்கள். பசை போய் விட்டால் அப்புறம் ஒட்டிக் கொண்டிருக்க அவர்களுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? ஐசுவரியம் இருக்கும்பொழுது 'நான் வேண்டியவன், நீ வேண்டியவன்' என்று சொல்வதும், ஆபத்து ஏற்பட்டு விட்டால், 'நான் யாரோ, நீ யாரோ?' என்று சொல்லிக் கொண்டு சிந்தாமல் இருப்பதும்தானே உலகத்தின் இயல்பு?

கைலாசநாதன் ஒருநாள் கோமதி ஆற்றங்கரைக்குச் சென்று மணற் பரப்பிலே உட்கார்ந்து தன் நிலையை நினைத்து வெகு நேரம் வரை அழுது கொண்டிருந்தான்.

'இந்தப் பரந்த உலகத்தில் எனக்கு அடைக்கலம் அளிக்க யாருமே இல்லையா!' என்று உள்ளம் புழுங்கிக் கொண்டிருந்தான்; மனம் வெதும்பிக் கொண்டிருந்தான்.

இந்த உலகத்தில் அவனுக்கு வேண்டியவர்கள் என்று யாரும் இல்லையே? எல்லோருமே அந்நியர்களாக அல்லவா ஆகி விட்டார்கள்! அவன் யாரிடமென்று உதவிக்குப் போவான்?

இம்மாதிரிச் சிந்தனையில் ஈடுபட்டிருந்த பொழுது தான் அவனுக்கு அபாக்கியவதி சாருமதியின் நினைவு வந்தது. இன்று அவள் உயிருடன் இருந்தால் இந்தமாதிரி அவள் அவனைத் தனியே தவிக்க விட்டு விட்டுச் சும்மா உட்கார்ந்திருப்பாளா? மாட்டாள், ஒரு நாளும் மாட்டாள். அம்மாதிரி உட்கார்ந்திருப்பது அவளால் முடியாத காரியம். அது அவள் சுபாவத்துக்கு நேர் எதிரிடையான காரியம் அல்லவா? அம்மாதிரி எண்ணமே அவள் உள்ளத்தில் எழ நியாயம் இல்லை. அவள் இறந்த அன்று கைலாசநாதனின் கண்களிலிருந்து பொட்டு நீர் என்றால் பொட்டு நீர் வரவில்லை. ஆனால் இன்று அவள் நினைவு அவனை இரத்தக் கண்ணீர் சிந்தும்படி செய்து விட்டது. இன்றுதான் அவனுக்கு அவள் இல்லாத குறை பெருங் குறையாகத் தோன்றியது. அவளை இழந்த வேதனை உணர்ச்சி, இருதயத்தின் அடித் தலத்திலே வியாபித்து வாட்டி வதைக்கத் தொடங்கியது. தனது ஒரு கையே ஒடிந்து விட்டதுபோன்ற உணர்ச்சியில் உள்ளம் தவித்தான். உலகத்தில் உள்ள எந்தச் சக்தியினாலும் அவனுக்கு ஏற்பட்டுள்ள அந்தக் குறையை இனி போக்க முடியாது; தீர்க்க முடியாது என்றுதான் தோன்றியது. இனி தனக்கு ஏற்பட்ட அந்த மூளி மூளிதான் என்ற முடிவுக்கு அவன் வந்து விட்டான்.

துர்ப்பாக்கியமே உருவான கரிய இருள் சூழ்ந்த அந்த இரவில், ஜன நடமாட்டமே இல்லாத சூன்யமான கோமதியாற்றங் கரையிலே, உட்கார்ந்து மனம்புழுங்கி அழுது கொண்டிருந்த கைலாசநாதனுக்கு எங்கோ வெகு தொலைவில் நம்பிக்கை என்னும் அகல் விளக்கு சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டு, 'வா, வா' என்று அழைப்பது போலத் தோன்றியது. உடனே அவன் உள்ளத்திலே உணர்ச்சியின் புது வெள்ளம் கரை புரண்டு ஓடத் தொடங்கியது. அடுத்த கணம் அவன் எழுந்து நின்றான். அப்புறமும் அங்கேயே நின்று கொண்டிருக்க மனம் வருமா? ஒளி வந்த திக்கை நோக்கி ஒரே பாய்ச்சலாக ஓடத் தொடங்கினான்.

ஏறக்குறைய இரண்டு மாதங்களுக்கெல்லாம் அவன் வைஜநாத்தில் சதாசுகரின் குடிசைக்கெதிரே நின்று கொண்டிருந்தான்.

இரவு நேரம். நன்றாக இருட்டி விட்டது. குடிசைக்குள் ஒரு கைவிளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. உள்ளே நுழைந்து விட்டால் அவனுடைய களைப்பு, வருத்தம், நிராசை எல்லாவற்றுக்குமே ஒரு முடிவு காலம், ஒரு விடிவு காலம் ஏற்பட்டிருக்கும். ஆனால் அவனுக்கு உள்ளே போகத் துணிவு உண்டானால்தானே? பதினாறு அடிக் கிணற்றைப் பதினைந்து அடி தாண்டியவன் கதையாக அல்லவா முடிந்து விட்டது! தேக சிரமத்தைப் பொருட்படுத்தாமல், தைரியத்தைக் கைவிடாமல் கால் நடையாகவே பல காத தூரத்தை அநாயாசமாகக் கடந்து வந்த பிரயாணி ஒருவன், மிகுதியிருக்கும் கூப்பிடு தூரத்தைக் கடக்க, அடி எடுத்து வைக்கச் சக்தி இழந்து விட்டால் எப்படி இருக்கும்? அதே கதிதான் கைலாசநாதனுக்கு ஏற்பட்டிருந்தது. குடிசைக்குள்ளே இருந்த கைவிளக்கு ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஆனால் அவன் மனத்துள்ளே ஒளிர்ந்து கொண்டிருந்த நம்பிக்கை ஒளி எங்கோ மறைந்து விட்டது. நம்பிக்கை என்னும் நித்திரையில் ஆழ்ந்து, அதே தூக்கக் கலக்கத்தில் அவன் இவ்வளவு தூரம் வந்து விட்டான். ஆனால் இங்கே வந்த பின் அவன் தூக்கம் கலைந்து விட்டது. அத்துடன் கூடவே நம்பிக்கைக்

# பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

(தோற்றம்: 1943)

**மதுரை**

கிளைகள்:

**சென்னை - 10, பிராட்வே**

| | | |
|---|---|---|
| அறந்தாங்கி | கண்டனூர் | ராயவரம் |
| ஆத்தூர் | காரைக்குடி | சேலம் (செவ்வாய்ப்பேட்டை) |
| கோயமுத்தூர் | கீரனூர் | சேலம் (டவுன்) |
| தேவகோட்டை | நெய்வேலி (S. A.) | தஞ்சாவூர் |
| தாராபுரம் | பரமக்குடி | திருச்சிராப்பள்ளி |
| தர்மபுரி | பொன்னமராவதி | திருப்பத்தூர் (N. A.) |
| எடப்பாடி | புதுக்கோட்டை | |

மற்றும் எல்லா முக்கிய வியாபார தலங்களிலும் ஏஜென்ஸிகள் உண்டு

இயக்குநர்:

ஸ்ரீ கருமுத்து தியாகராசன் ............ தலைவர்
ஸ்ரீ வ. ராம. வள்ளியப்ப செட்டியார்
ஸ்ரீ நா. அ. அண்ணாமலை செட்டியார்
ஸ்ரீ உ. ராம. மெ. சுப. சேவு. அ. அண்ணாமலை செட்டியார்
ஸ்ரீ ந. சொ. அரு. அருணாசலம் செட்டியார்

எல்லாவிதமான வங்கி அலுவல்களும் உடனுக்குடன் கவனிக்கப்படும்

பி. எஸ். விஸ்வநாதன், காரியதரிசி.

---

உங்களுக்கு விருப்பமான பாம்
**நோபெயின்**
பெயரை
**நோபின்**
என்று மாற்றப் பட்டிருக்கிறது









நோபினின் ஊடுருவிச் செல்லும் தன்மை தேய்த்த உடனேயே சருமத்தினுள் நுழைந்து பட்டிருக்கும் இடங்களில் ரத்த ஓட்டம் கொடுத்து ஆற்றலைச் செய்து வலியை தணிக்கிறது.




நோபின் குடும்பத்தின் உபயோகத்திற்கு சிக்கனமானது.

நோபின் எப்பொழுதும் சக்தி வாய்ந்ததும் இனிமையான வாசனையுள்ளதும் ஆகும். ஏனெனில் அதில் அடங்கியிருக்கும் சாதனங்களின் குணம் கெடாமலும் தூய்மையுடனும் இருக்க சீலிட்ட டியூபுகளில் பாக் செய்யப்பட்டிருக்கிறது.

**NOPIN**




எப்பொழுதும் ஒரு டியூப் நோபின் தயாராக வைத்திருங்கள்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட் கல்கத்தா-29

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

கனவும் சிதைந்து விட்டது. இப்பொழுது மறுபடியும் அவன் இருதயத்தில் அதே கும்மிருட்டு, அதே நிராசை, அதே ஏமாற்றம் ஆட்சி செலுத்தத் தொடங்கி விட்டது!

"நான் அடி முட்டாள்தான்; சந்தேகமில்லை! முன்பின் யோசியாமல் சட்டென்று புறப்பட்டு வந்த நான் எப்படிக் கெட்டிக்காரனாக இருக்க முடியும்? சதாசுகருக்கெதிரே இந்தக் கரி நிற்றிய முகத்துடன் எப்படிப் போவது என்றுகூட யோசிக்காமல் புறப்பட்டு வந்தேனே! அவர் எவ்வளவுதான் நல்லவராயிருக்கட்டும், என்னைப் பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டு விடுவார்; முகங் கொடுத்துப் பேசமாட்டார். கழுத்தில் கையைக் கொடுத்துக் 'தரதர' வென்று வெளியே தள்ளி, 'உன்னைப் போன்ற கல்நெஞ்சனுக்கு என் வீட்டில் இடம் கிடையாது' என்று அவர் சொன்னாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவருடைய நிலையில் நான் இருந்தால், நான் நடந்து கொள்ளும் விதம் இன்னும் வேறு விதமாகவே இருக்கலாம். — அட பிரகசாரமே! இங்கே நான் எதற்காக வந்தேன்?"

கைலாசநாதன் சிந்தனையில் ஆழ்ந்து மனத்துள் தன்னைத்தானே நொந்து கொள்ளலானான்.

வீட்டிலிருந்து வெகு தொலைவுக்கு வந்துவிட்ட கைலாசநாதன் நள்ளிரவின் பயங்கரக் காரிருளில் நாற்புறமும் கண்களை உருட்டி விழித்துப் பார்த்தான். ஆனால் அவனுக்கு அடைக்கலம் அளிக்கக்கூடிய இடம் எங்குமே இருப்பதாகத் தோன்றவில்லை. ஏறக்குறைய ஒன்றே கால் வருஷத்துக்கு முன்பு அவன் இங்கே ஒரு நடை வந்திருக்கிறான். ஆனால் அப்பொழுது வந்ததற்கும் இப்பொழுது வந்ததற்கும் வானத்துக்கும் புவிக்கும் உள்ள வித்தியாசம் அல்லவா இருந்தது! அப்பொழுது அவனுடைய உயிர் இங்கே இருந்தது. இங்கே சாருமதியைப் பார்த்து அவனுடைய இருதயத் தாமரை மலர்ந்தது. இப்பொழுது அவன் உயிர் இவ்வுலகத்திலேயே இல்லை. அப்படியிருக்கும்பொழுது அவனது மனத்தாமரை மலருமா? ஆகவே, அது சாம்பிக் கூம்பிக் கருகி விட்டது.

இதை நினைத்த மாத்திரத்திலே சிந்தனைச் சங்கிலி மறுபடியும் அவன் உள்ளத்தைப் பற்றிக் கொண்டது.

ஒருவேளை அவன் அவளை அழைத்துக் கொண்டு இங்கே வந்திருந்தால்,

கோலாகலங்கள் நிறைந்த உலகத்தின் பேரிரைச்சலிலிருந்து விலகி, பங்காளிக் காய்ச்சலிலிருந்து பிரிந்து, அமைதியே உருவான ஒரு சாந்தி குடீரத்தை அமைத்துக் கொண்டு இங்கே வாழ்வது என்று முடிவுடன் வந்திருந்தால், அவனுடைய அந்தப் பரிசுத்தமான, ஆனந்தம் தோய்ந்த வாழ்க்கையைக் கண்டு வானுலக வாசிகளே கூடப் பொறாமையினால் புழுங்கிப் போயிருப்பார்கள்; பேராசை தவழும் விழிகளால் பார்த்துப் பார்த்துப் பெருமூச்செறிந்திருப்பார்கள். ஆனால் இப்பொழுது...? அதைப்பற்றிச் சிந்தித்து என்ன பயன்? அவனுடைய சொர்ணபுரிதான் எரிந்துசாம்பலாகி விட்டதே! அதற்கு அப்புறம் அல்லவா அவனுக்கு ஞானோதயம் பிறந்திருக்கிறது! அதுவும் எப்பொழுது? வில்லிலிருந்த அம்பு வெளியே சென்றபின், கையிலிருந்த காரியம் கைநழுவிய பின் அல்லவா அவனுக்கு அந்த ஞானோதயம் பிறந்தது? கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் என்று சொல்வார்களே, அதுபோல! கைலாசநாதன் உள்ளம் வெதும்பி மனம் உடைந்து விட்டான். உடல் பலம் அனைத்தும் குன்றிப் போய், உடல் ஆணி வேறு அக்கு வேறாக ஒடிந்து விழுவது போலத் தோன்றியது அவனுக்கு. கைகள் சோர்ந்தன; கண்கள் இருட்டின; கால்கள் வெலவெலத்தன. உடலே ஒரு ஆட்டம் கொடுத்து விட்டது. அவன் உள்ளே செல்லும் நோக்கத்துடன் மெதுவாகத் தட்டுத் தடுமாறியவாறே வாசற்படியை நோக்கி நடந்தான். ஆனால் அவன் கால்கள் அவன் உள்ளத்துடன் ஒத்துழைக்க வில்லை. வாசற்படியை நெருங்குவதற்குள்ளாகவே, மூர்ச்சித்துத் 'தடால்' என்று தரையில் சாய்ந்து விட்டான்.

அப்பொழுது அவனுக்கு உறுதுணையாக நள்ளிரவின் காரிருள் இருந்தது; மலைப்பிரதேசத்தின் கடுங்குளிர் இருந்தது; அயலூரின் அநாதைத் தன்மை இருந்தது. உண்மைதானே? அயலூரில் அவனைக் கவனிக்க நாதி யார்?

அவனுக்கு உணர்வு வந்தபொழுது, அவனுக்கெதிரே சதாசுகர் உட்கார்ந்திருந்தார். கண் விழித்த கைலாசநாதன் அவரைப் பார்த்தான்; பார்த்துப் பிரமித்து விட்டான்! ஆகா! இந்த மனிதரின் முகத்தில் தான் என்ன தேஜஸ்! எவ்வளவு பரிசுத்தமான இருதயம்! எவ்வளவு தயாள சித்தம்! எவ்வளவு சாந்த சொரூபம்!



காப்டன் பி. ரங்கஸ்வாமி நாயுடுவின் புதல்வியான பேபி பிரேமலதாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் மயிலாப்பூர் ரசிக ரஞ்சனி சபையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

இம்மாதிரி மனிதன் மூவுலகிலும் கிடைப்பது அரிது. கைலாசநாதன் இன்னும் அவரை ஊன்றிக் கவனித்தான். அவர் கண்களிலே கடுகளவு கூடக் கோபக்கனல் இருப்பதாகத் தெரியவில்லை; முகத்திலே மாசு இருப்பதாகத் தெரியவில்லை; மனத்திலே அழுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. சதாசுகர் அவனை அன்பு தவழப் பார்த்துக் கொண்டிருந்தார். அதுவும் யாரை? அவருடைய அருமை மகனைக் கொலை செய்த மாபாவியை! அப்பப்பா! அந்தமாதிரி மன்னிக்கும் குணம் படைத்த மனிதரை எங்குமே காண முடியாதுதான். இந்த அரும் பெரும் குணம் யாரிடமுமே காணக் கிடைக்காதுதான்.

ஆனால் ஒருவேளை அவர் அவனைச் சரியாக அடையாளமே கண்டு கொள்ளவில்லையோ? ஆம், அப்படித்தான் இருக்க வேண்டும்.

'என் உருவம் அடியோடு மாறிப் போயிருக்கிறது. என்னைப் பத்து மாதங்கள் சுமந்து பெற்றெடுத்த தாயாரே வந்து பார்த்தால்கூட அடையாளம் புரியாமல் தவிக்கத்தான் தவிப்பாள். இவரோ என்னை ஒரே ஒரு தடவைதான் பார்த்திருக்கிறார். அப்படி இருக்கும் பொழுது என்னை அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் இருப்பது இயல்புதானே?'

கைலாசநாதன் கண்களை மூடிக் கொண்டு, மனத்துக்குள் தனது நிலைமையைப் பற்றி ஆராயலானான். வெகு காலம் கழித்து மகிழ்ச்சி ஏற்பட்டது. அதுவும் வருவது போல வந்து ஒரு நொடியில் மறைந்து அல்லவா போய்விட்டது!

சதாசுகர் தம் கையினால் கைலாசநாதனின் தலையைத் தடவிக்கொடுத்தவாறே, "இப்பொழுது உன் உடம்பு எப்படி இருக்கிறது? குணம் தெரிகிறதா?" என்று கேட்டார்.

அடே! இவையும் அதே அன்புக் குரல், அதே இனிமையான சொற்கள், மனத்தை மயக்கி மாய லோகத்துக்கு இழுத்துச் செல்லும் பொன்மொழிகள் அல்லவா? இந்தக் குரலில் சிறிதும் கோபமோ, தாபமோ இல்லையே! வறட்சியோ, விரக்தியோ இல்லையே! கைலாசநாதனுக்கு முன்பு சந்தேகம் மட்டும்தானிருந்தது. இப்பொழுது நம்பிக்கையே ஏற்பட்டு விட்டது. இவர் நம்மைக் கட்டாயம் தெரிந்து கொள்ளவில்லை என்று! இல்லாவிட்டால் நம்மைப் போன்ற பாவிக்கு இம்மாதிரியான இனிய சொற்களைக் கேட்கும் பாக்கியம் ஏது? இதை எண்ணிய கைலாசநாதன் பதறிப் போய் எழுந்து உட்கார்ந்தான். பிறகு பித்தம் தலைக்கேறியவனைப் போல், "தாங்கள் இன்னும் என்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. அதனால்தான்...!" என்றான்.

சதாசுகர் அவனுடைய தோள் பட்டைகளைப் பிடித்துக் கட்டிலில் மெதுவாகப் படுக்க வைத்தார். பிறகு இலேசாக இளநகை புரிந்தவாறே, "பேசாமல் படுத்துக் கொள். எழுந்திருக்காதே. என் கண்கள் ஒருவரை ஒரு தடவை பார்த்தபின் மறந்து விடக் கூடியவை அல்ல!" என்றார்.

கைலாசநாதனின் இருதயம் 'படபட' என்று அடித்துக் கொண்டது. "சுவாமி, நான் கைலாசநாதன். தெரியவில்லையா?" என்றான்.

"தெரியாமல் என்ன? நான்தான் உன்னைப் பார்த்ததுமே புரிந்து கொண்டு விட்டேனே!" என்று அமைதியாகவே பதில் அளித்தார் சதாசுகர்.

"அப்படியிருந்துமா தாங்கள் என்னைத் தூக்கி வந்து உதவி செய்தீர்கள்? மருந்து கொடுத்துக் காப்பாற்றினீர்கள்? தாங்கள் என்னை ஏன் வெளியிலேயே வீசி எறியவில்லை? அப்படியே கிடந்து செத்திருப்பேன் அல்லவா?" என்றான் கைலாசநாதன்.

"சிவ, சிவா! இப்படியெல்லாம் பேசாதே! பகவான் பெயரைச் சொல்லு. வாழ்க்கை நீ நினைப்பது போல் அவ்வளவு துச்சமானதில்லை" என்றார் சதாசுகர்.

"இனி உயிர் வாழ்ந்து நான் என்ன செய்யப் போகிறேன்? மனம் பற்று அற்றபின் வாழ்ந்து என்ன பயன்? இனி எனக்கு வாழ்வில் எவ்விதமான பிடிப்பும் இல்லை. உலகத்துக்குப் பாரமாக நான் உயிர் வாழ்ந்து என்ன பயன், சுவாமி! கடவுள் கருணை கூர்ந்து மரணத்தை அளித்தால் பிழைத்துப் போவேன். இனி சாவைத் தவிர உற்ற நண்பன் எனக்கு வேறு இல்லை!" என்றான் கைலாசநாதன்.

சதாசுகர் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். பிறகு, "இவ்வளவு நிராசை எதற்காக? மனத்தைத் தேற்றிக் கொள், அப்பா!" என்றார்.

"இந்தப் பாவிக்கு நிராசையைத் தவிர வேறு என்ன ஏற்படக் கூடும்? எனக்கென்று இந்த உலகத்தில் யார் இருக்கிறார்கள்? நான் எதற்காக உயிர் வாழ வேண்டும்? நீங்களே சொல்லுங்கள்!" என்றான் கைலாசநாதன்.

"எதற்கும் கடவுள் இருக்கிறார். கவலையை மறந்து கடவுளை வழிபடு. நன்மை புரிவார்!" என்று அவனுக்கு உபதேசித்தார் சதாசுகர்.

கைலாசநாதன் அதற்கு எவ்விதமான மறுமொழியும் கூறவில்லை. அவன் கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகத் தொடங்கியது. உள்ளத் தவிப்பின் காரணமாக அவன் உடலிலிருந்து வியர்வையும் முத்துமுத்தாக வடியத் தொடங்கியது.

அழுது அழுது கடைசியில் அவனுக்குத் தூக்கம் வந்து விட்டது. அப்புறம் தான் சதாசுகர் நீண்ட நிம்மதியான மூச்சு விட்டார். சதாசுகரின் அருகிலேயே உட்கார்ந்திருந்த ஒருவன் மெதுவான குரலில், "ஏன், சுவாமி! இவன் சாருமதியின் கணவன் தானே?" என்று கேட்டான்.

"ஆமாம், அவனேதான்! அட, உனக்கு எப்படித் தெரிந்தது? கனகச்சிதமாகக் கண்டு பிடித்து விட்டாயே!" என்றார் சதாசுகர்.

அந்த மனிதன் ஆச்சரியத்தினால் அகல விரிந்த கண்களுடன் சதாசுகரைப் பார்த்தான். பிறகு, "தாங்கள் இவனுக்கா, இந்தத் துரோகனுக்கா இப்படியெல்லாம் உபகாரம் செய்கிறீர்கள்? தங்கள் ஸ்தானத்தில் நான் இருந்தால் காதறுந்த செருப்பாலேயே அடித்து வெளியில் விரட்டியிருப்பேன், இந்தக் கழுதையை! கடவுளுக்குக் கண்ணில்லை என்றுதான் தோன்றுகிறது. கண் இருந்தால் இந்தத் துர்நடத்தைக்காரனை, இந்தக் கொடும் பாவியை..." என்று அடுக்கிக் கொண்டே போனான்.

சதாசுகர் அவனை மடக்கி, "இவற்றையெல்லாம் கவனித்துக் கொண்டிருப்பது என் வேலை அல்ல. என் கடன் பணி செய்து கிடப்பதே. எவன் என் வீடு தேடி வந்தானோ, அவனுக்குப் பணிவிடை புரிய வேண்டியதுதான் என் குறிக்கோள். அவன் எவ்வளவு கெட்டவனாயிருந்தாலும் எனக்கு அக்கறையில்லை. நம் உதவியை நாடி வந்தவன் நல்லவனா, கெட்டவனா என்று நான் ஆராய முற்படுவதில்லை. ஆனால் ஒன்று; என் குடிசையில் இருந்து கொண்டு எவ்விதமான பாவச் செயலோ, தீச்செயலோ செய்ய முடியாது. நான் அதைச் சிறிதும் அநுமதியேன்!" என்றார்.

அதைக் கேட்டதும் அந்த மனிதனுக்கு, தான் ஏதோ ஒரு தெய்வத்துக்கெதிரே நின்று கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. 'இந்த மகான் சாதாரணமானவர் அல்ல. பாவச் சேற்றில் சிக்கி அதள பாதாளத்தில் அழுந்திப் போய்க் கொண்டிருக்கும் இந்த நாசகார உலகத்துக்கு அப்பாற்பட்டவர். இவருடைய நடத்தை மிகவும் பரிசுத்தமானது. இவருடைய வாழ்க்கை மகா புனிதமானது. இவருக்கு இணை இவர்தான். தெய்வங்களுக்கெல்லாம் மேலான தெய்வம் இவர்! இவ்வுலகத்தின் கைக்கு எட்டாத வானத் தாமரை இவர்!' என்ற எண்ணம் எழுந்தது. அடுத்தகணம் அவன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் திரையிட்டது; உள்ளத்திலே சிரத்தை உணர்ச்சி ஊற்றெடுத்துப் பெருகியது. உலகுக்கெல்லாம் அம்மையப்பனாக விளங்கும் உமாமகேசுவர மூர்த்தியே சதாசுகரின் உருவத்தில் அவதாரம் எடுத்து வந்திருப்பதாக எண்ணி மெய் சிலிர்த்துக் கரம் கூப்பி வணங்கி நின்றான்.

சதாசுகரின் குடிசை இன்றைக்கும் வைஜநாத்தில் இருக்கிறது. அதற்கு அருகிலேயே அவருடைய சமாதியும் இருக்கிறது. அன்றைக்கு இன்று எவ்வளவோ வேறுபாடு இருந்தாலும் அவர் வாழ்ந்து வந்த அந்தக் குடிசையின் பெருமையே, அந்த மண்ணின் மகிமையே அலாதிதானே? — சுபம்.

திருச்சி

## 9. ''ஐயோ, செத்தேன்!''

காலில் ஏதோ தட்டுப்பட்டதும், உலகநாதன் திடுக்கிட்டுப் போனானல்லவா? அவனுக்கு அது பாம்போ என்ற பயம் வந்துவிடவே மேலே நடக்காமல் மெதுவாக ஒதுங்கி ஒரு மண்டபத்துக்குள்ளே ஏறி விட்டான். சுவர் ஓரமாகப் படுக்கப்போன போது, ''அங்கே யாருடா அவன்?'' என்ற குரல் கேட்டது. மறுகணம் நெருப்புப் பெட்டியில் குச்சியை உரசிக் கிச்சும் ஓசை. தூங்குகிறவனைப் போல் உலகநாதன் பாசாங்கு செய்தான். தீக்குச்சி கிச்சிய ஆள் நெருங்கி வந்தான். கோழிக்குஞ்சின் தலையை அலாக்காகத் தூக்குவது போல் தூக்கினான் உலகநாதனை.

''நான் அநாதை, ஐயா!''

தீக்குச்சியின் ஒளியை முகத்தில் படர விட்டான். ஆச்சரியம், அந்த ஆசாமி ஜங்ஷன் மேம்பாலத்துக்கு அடியிலே மணிபர்ஸைப் பங்கு வைத்துக் கொண்டிருந்த முரடன்.

''டேய், கோபாலு! எவன்டா அவன்? இழுத்தாடா இங்கே!'' என்று மறுபகுதியிலிருந்து குரல் வந்தது.

''டேய்! மாலையில் ஜங்ஷன் மேம்பாலத்திலே வந்தபோதே உன்னைச் சந்தேகித்தேன். இங்கே எங்கே வந்தே?''

''எனக்குப் பாதை தெரியல்லே. ரயிலில் வந்தேன். டவுன் ஸ்டேஷனில் இறக்கிவிட்டாங்க. இங்கே வந்தேன்.''

''அண்ணே! நமக்குச் சரியான ஆள் கிடைச்சிருக்கான். இவனை விடப்படாது'' என்று பிடித்த பிடியோடு இழுத்து வந்தான் கோபாலு. அந்த முரடனின் கையில் சிக்கிக் கொண்டதைப் பெரிய பீதியாக எண்ணி உலகநாதன் மனம் நையவில்லை. கோபாலு தன்னை விட்டு விடுவான் என்றே எண்ணினான். ஆனால், அடுத்துச் சந்தித்த ஆசாமி மிகவும் பொல்லாதவன். மெழுகுவர்த்தியை ஏற்றிய அவனை அதன் வெளிச்சத்தில் பார்த்ததும் உலகநாதன் அலறிவிட்டான். அங்கே இருந்தது யார்? சில தினங்களுக்கு முன் சந்தித்த குருட்டுப் பிச்சைக்காரன்! இப்பொழுது அவனுடைய கண்கள் புறா முட்டை போல் நன்கு திறந்திருந்தன.

''அட, ஏன்டா கத்துறே?''

''இந்தப் பயல உன்னைக் குருட்டு வேஷத்திலே பார்த்திருப்பான். அதுதான் அலறிப்போய்விட்டான்'' என்றான் முரட்டுக் கோபாலு.

பிச்சைக்காரனுக்கும் நினைப்பு வந்தது. மார்சிங்பேட்டை தெரு முனையில் அழுதுகொண்டிருந்த உலகநாதனை அவன் பார்த்ததும், தன்னோடு அழைத்துப் போக முயன்றதும் நினைவில் வந்தன.

''அட, அந்தப் பயலா? தூணோடு கட்டி வையுடா, கோபாலு! பொல்லாத எமப் பயல் இவன்! நாய்ச் சங்கிலியோடு கட்டிப் போடு!''

கோபாலு அவ்வாறே கல் தூணில் கிடந்த நாய்ச் சங்கிலியோடு கட்டி வைத்தான். அழவும் முடியாமல் விடுதலை கேட்கவும் முடியாமல் தவித்தான் உலகநாதன்.

''ஏன்டா! இந்தப் பயல் நாம் பேசின திட்டம் முழுக்கக் கேட்டிருக்கான். இவனை வெளியே விட்டால் போய்ச்



# உலகநாதன்

சகி

சொல்லி விடுவான். நம்ம எலும்பு நொறுங்கிப் போகும். அதனாலே இவனை என்ன செய்யலாம்?"

"முருகண்ணே! இந்தச் சின்னப் பயலை நீ நம்பலாம். இன்றைக்குத் தொழிலாளர் கூட்டம் திருச்சி ஜங்ஷன் பக்கம் நடந்தது. அந்தக் கூட்டத்திலே பிக்பாக்கெட்டு அடிச்ச போது, ஜங்ஷன் பொதுக் கூட்டத்திலே இவனையும் பார்த்தேன். அவர்களுக்கு இவன் கூட்டு. அதனாலே இவனை நம்பலாம்."

"நம்பலாமா? இல்லே, கல்லையும் இவனையும் ஒண்ணுக் கட்டி காவிரியிலே போட்டு விடலாமா?"

"அண்ணே! இவனால்தான் அந்தச் சந்துக்குள்ளே நுழைஞ்சு கதவைத் திறக்க முடியும். அந்தச் சோதாப் பயல்களுக்கு அவ்வளவு அறிவு போதாது. ஏண்டா, நாங்க சொல்கிறபடி கேட்கணும். இல்லாட்டிக் கொன்னு போடுவாம்."

"கேட்கறேன், அண்ணே!"

உலகநாதன் தெம்பாகப் பேசவே, அவர்களுக்கு நம்பிக்கை பிறந்தது. சின்னக் கடைத் தெருவில் ஒரு சந்துக்குள் திருடுவதற்கு உள்ளே நுழையும் வழியைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். மேலே சுவர் வழியாகச் சிறுவன் இறங்கலாம். அவன் உள்ளே இறங்கினால், பின் பக்கத்துக் கதவைத் திறந்துவிட வேண்டும். மற்றதைக் குருட்டு முருகண்ணன் கவனித்துக் கொள்வான். சுவர் வழியாக உள்ளே இறக்கிவிட வேண்டியது கோபாலு. உள்ளே இறங்க வேண்டிய ஆள் உலகநாதன். இவ்வாறு திட்டம் போட்டு முடித்தார்கள். மணியும் இரண்டுக்கு மேல் ஆகி விட்டது.

"ஏன், கோபாலு! அந்தப் பயலைக் கூட்டுச் சேர்க்க வேண்டாமா?"

"அழகப் பழத்தையும் சேர்த்துத் தான் ஆகணும். போகிற பாதையிலே வௌவால் மரத்திலே இருந்து ஒரு விசில் கொடுத்தால் அவன் வந்து விடுவான்."

தூங்கலாம் என்று நம்பி வந்த உலகநாதனை அவர்கள் திருடுவதற்குக் கூட்டுச் சேர்த்துக் கொண்டு கிளம்பினார்கள். அவன் வந்த கரையோரமாகப் போகாமல் வயலில் குறுக்கில் நடந்தார்கள். வயல் வரப்பில் நடந்து பழக்கமுள்ள உலகநாதனுக்கு அவர்கள் நடுவில் வேகமாக நடப்பது சுலபமாக முடியக் கூடிய செயல்.

# அருள் வாக்கு

ஒவ்வொரு நாளும் 'சந்தியா' காலத்தில் சிவபெருமான் ஆனந்த நடனம் செய்கிறார். சனந்த சனகாதிகள், பதஞ்சலி, வியாக்கிரபாதர் முதலிய முனிவர்கள் தங்களுடைய ஞானக் கண்ணால் தாண்டவத்தைக் கண்டு களிக்கின்றனர். மகா விஷ்ணு மத்தளம் வாசிக்கிறார்; பிரும்மா தாளம் போடுகின்றார்.

சிதம்பரத்தில் சிவபெருமான் பதஞ்சலி முனிவருக்குப் பிரபஞ்சத் தத்துவங்களைத் தம்முடைய தாண்டவத்தின் மூலம் விளக்கிக் காட்டினார். இந்த ஆனந்தக் கூத்தைக் கண்டு களித்து பதஞ்சலி முனிவர் சம்பு நடன அஷ்டகம் என்னும் விருத்தத்தை இயற்றினார். பதஞ்சலி முனிவர் ஆதிசேஷன் அவதாரம். அவருக்குக் காலும் கொம்பும் இல்லை. அவர் இயற்றிய தோத்திரங்களும் கொம்பும், காலும் இல்லாத குறுக்கெழுத்தை உடையவை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சிகாமகோடி பீடம்

"அண்ணே! பயல் நல்லா நடக்கிறானே! அநுபவமுள்ள பயல்தான்."

"ஆமாம்! அதனாலேதானே இவனை அன்றைக்கே இழுக்க நினைச்சேன். இன்றைக்கு இவனாக வந்து சிக்கிக் கொண்டது நமக்கு நல்ல காலம்."

ஒருபைக்குள்ளே ஏதோ சிலசாமான்கள் துருத்திக் கொண்டிருந்தன. கரும்புத் தோட்டத்துள்ளே போய்க் கோபாலு எதையோ எடுத்து வந்தான். இரும்புக் கடப்பாரை போல் இருந்தது. கப்பென்று மிளகாய் மணம் வந்தது.

"ஏண்ணே, முருகண்ணே, மக்கடையிலே, காலணாவுக்கு மேலே மிளகாய்த்தூள் வாங்க முடியல்லே. அந்தப் பயல் பயந்து சாகிறான்."

"மிளகாய்த்தூள் கொஞ்சம் போதும். சேட் பயந்து செத்துப் போவான். நம்ம வங்கதான் மிளகாய்த்தூள் என்றாலும் கண்ணைத் திறந்து திருடனைத் துரத்துவார்கள். நம்மிடம் இருக்கும் மிளகாய்த்தூள் எதேஷ்டம்."

உலகநாதனுக்குக் கண்ணைக் கரித்தது. அவர்கள் குறுக்குவழியாக நடந்து டவுன் ஸ்டேஷன் பக்கமாக வந்தனர். இப்போது குருட்டுப்பிச்சைக்காரன் கையிலே உலகநாதன் இருந்தான். கோபாலு அவனுக்கு முன்னாதாகவோ பின்னதாகவோ நடந்தான்.

"டேய், பயலே! யாராச்சும் வந்தால் நான் குருடனைப் போல் வழி கேட்பேன். நீ என் கையைப் பிடிச்சு நடக்கவேணும். மீறினால் எலும்பை நொறுக்கிப் பொடியாக்கிப் போடுவோம்."

குருடன் வழிகாட்ட உலகநாதன் நடந்து கொண்டிருந்தான். ஒரு சந்துக்குள் மறைந்து போன கோபாலுவின் குரல் 'கிரீச்'செனக் கேட்டது. ஆந்தையொன்று பயந்து அலறுவது போல் அலறினான். அந்த அலறலைக் கேட்டு உலகநாதன் நடுங்கினான். அது அவர்களுக்குச் சைகைக் குரல்.

பிச்சைக்காரன் நடக்க ஆரம்பித்த போது மற்றொரு சந்து வழியாக வந்த ஆளைக் கண்டதும் உலகநாதன் நடுங்கினான். சாட்சாத் பழவெண்டர் தாண்டவராயன் வந்து கொண்டிருந்தான். வந்தவன் நேரடியாகக் கோபாலு நின்ற திக்கு நோக்கிப் போனபோது உயிர் வந்தது. கோபாலு சொன்ன 'அழுகப்பழம்' தாண்டவராயன் என்று முடிவு செய்தான். உடனடியாக எவ்வாறேனும் தப்புவதற்கும் அவன் யோசனை செய்தான்.

குருட்டுப் பிச்சைக்காரன், உலகநாதனைக் கைப்பிடியாக இழுத்துக் கொண்டு, குறுகிய சந்துக்குள் நுழைந்தான். கண் இமைக்கும் நேரத்தில் வளைந்த தென்னை மரத்தின் பக்கமாகத் தாவி மேல் சுவரில் நின்ற கோபாலுவின் கை தெரிந்தது. முருகண்ணன் தன் பலத்தைக் கொடுத்துச் செக்தூக்காக மேலே தூக்கிக் கொடுத்தான். செங்கல்லைப் பிடிப்பது போல் கோபாலு ஒரு கையைப் பிடித்து மேலே இழுத்தான். சுவர் மேலாகக் கோபாலுவுக்குப் பின்னால் உலகநாதன் நடக்க ஆரம்பித்தான்.

"விழுந்திடாமல் வாடா!"

பூனைக்குப் பின்னால் போகும் குட்டிபோல் நடந்தான் உலகநாதன். அந்தச் சந்தின் இரு புறமும் இரண்டு உருவங்கள் நின்றன. ஒன்று குருட்டுப் பிச்சைக்காரன்; மற்றொன்று பழக்கடை தாண்டவராயன். ஆகவே, குதித்துத் தப்பினால் எதிரிகள் வசம் சிக்கவேண்டும். இனிமேல் சுவர்மேல் நடப்பது தவிர வேறு மார்க்கம் இல்லை. கோபாலு பழக்கப்பட்டவனைப் போல் நடந்தான். இந்த வீட்டை அவர்கள் ஒரு வருடமாகக் கண்ணி வைத்து வருகிறார்கள்; அடிக்கடி முயற்சி செய்தும் பலன் இல்லை. சுவரைத் தாண்டி மொட்டை மாடி வழியாக இறங்கினார்கள். இரு சுவருக்கு ஊடாக இரும்புக் கம்பியில் ஒன்று வளைக்கப்பட்டிருந்தது; அந்தக் கம்பியை நீக்கிக் கொண்டு உலகநாதனை உள்ளே தொங்க விட்டான். கீழே தெரிந்த ஜன்னல் கம்பியிலே கால் வைத்துக் கீழே இறங்கி விட வேண்டும். பின்னர் கண்ணை மூடிக் கொண்டு கொல்லைப் பக்கம் வந்து கதவைத் திறந்து விட்டால், உலகநாதன் வேலை முடிந்தது.

ஒரு கையால் மேலே உள்ள கம்பியைப் பிடித்துக் கொண்டு கீழே காலுக்குத் தட்டும்படி ஜன்னல் கம்பியைத் துழாவிக்கொண்டிருந்தபோது துப்பாக்கியின் ஓசை "டுமீல் டுமீல்" என்று கேட்டது.

"ஐயோ, செத்தேன்!" என்று அலறியபடியே விழுந்தான் உலகநாதன். அப்புறம் அங்கே நிற்க அவர்களுக்கு என்ன, பைத்தியமா? ஓடி விட்டார்கள்.

# பார்கோ

## டீசல்கள்







டீலர்கள் :

M/s. T. V. சுந்தரம் அய்யங்கார்
& சன்ஸ், பிரைவேட் லிமிடெட்
மேல வெளி வீதி, மதுரை

M/s. சுந்தரம் மோட்டார்ஸ்
பிரைவேட் லிமிடெட்
மவுண்ட் ரோடு, சென்னை

முன்னேற்றத்துடன் தயாரிப்பவர்கள்

ஸ்ரீ
**பிரிமியர் ஆட்டோமோ
பைல்ஸ் லிமிடெட்.**
பம்பாய்

SISTA'S-PAL-367.TAM

மறுநாள் காலை தமக்கையின் வீட்டுக்குச் சென்று உலகநாதன் அகப்பட்டுத் தப்பியோடி விட்ட விவரத்தைத் தாண்டவராயன் கூறியபோது, அவன் தமக்கை ஜானகி, "ரயிலுக்குள் அகப்பட்டவனை நீ ஏண்டா தப்ப விட்டு விட்டாய்? அவர் பட்டாளத்திலிருந்து வந்தால் வம்பு வருமேடா! அந்த நாசமாகப் போனவன் போனது முதல், உன்னுடைய சின்ன மருமகன் சீனுப் பயல் இருக்கிறானே, அவன் நினைப்பாகவே இருக்கிறான். நேற்று முழுக்க அவனும் காணாமற் போய் ஜங்ஷன் பிளாட்பாரத்திலிருந்து இழுத்து வந்தோம். அண்ணன் உலகநாதன் ஊருக்குப் போனதால் அவனும் போகிறானாம்" என்றாள்.

"நான் முயன்று பார்க்கிறேன், அக்கா! எதற்கும், உன் புருஷனுக்குக் கடிதம் எழுது. 'உலகநாதன் சௌக்கியம். நன்றாகப் படிக்கிறான்' என்று!"

"ஆகட்டும். ஆனால் ஒரு சங்கடம். அவன் கையெழுத்து இருந்தால்தான் திருநெல்வேலிக் கடையிலிருந்து மாதா மாதத்து வட்டிப் பணம் வரும். அது வரவில்லையென்றால்......"

"பணம் ஒழியட்டும்"

"பணத்துக்காகச் சொல்லவில்லை. அந்தக் கடைக்காரன் பட்டாளத்து விலாசத்துக்குக் கடிதம் எழுதி விடுவானே!"

"அட, கருமமே! அக்கா, என்னை இப்போது என்ன செய்யச் சொல்லுகிறாய்?" என்றான் தாண்டவராயன்.

இந்த வேளையில் 'அம்மா, தாயே! தருமம்' என்ற குரல் கேட்டது. தாண்டவராயன் திடுக்கிட்டான். ஏனெனில் அந்தக் குரல் அவனுக்கு அறிமுகமான குரல். அவன் கூட்டாளியான குருட்டுப் பிச்சைக்காரனின் குரல். 'இவன் எதற்காக இங்கே வந்தான்?' என்று எண்ணியவன், "அக்கா! நான் ரயிலுக்குப் போக வேண்டும்" என்று பதிலை எதிர்பார்க்காமல் தெருவுக்குள் வேகமாக இறங்கினான் தாண்டவராயன். குருட்டுப் பிச்சைக்காரனும், கேட்ட கருமத்தை எதிர்பார்க்காமல் நடந்தான். மார்சிங்பேட்டைத் தெரு தாண்டிக் கூனி பஜார் வந்ததும், "என்ன, முருகண்ணே! இங்கே எங்கே வந்தே?" என்றான் பழ விற்பனைத் தாண்டவராயன்.

"அட பாவி! அதோ அந்த வீட்டுக்கு நீ ஏன் போனே?" என்று கேட்டான் முருகண்ணன்.

"அது என் அக்காள் வீடு!"

"அக்காள் வீடா? அங்கே ஒரு சின்னப் பயல் காணாமற் போனவன் இருக்கானே! வந்து விட்டானா?"

"உனக்கு எப்படித் தெரியும்?" என்று ஆவலோடு கேட்டான் தாண்டவராயன்.

"அட. பாவி! நேற்று ராத்திரி சேட்டு வீட்டுக்குள் ஒரு பயலைக் கம்பிக்குள்ளாக இறக்கினோமே, அவன் இந்த வீட்டிலே காணாமற் போனவன்; இந்த வீட்டுச் சின்னப்பயல். தெரியாதா, உனக்கு?"

## சிரிக்காதே!

டிரில் வாத்தியார்: அடென்ஷன்! நேர்பின்னால் திரும்புங்கள். இடது பக்கம் திரும்புங்கள்; வலது பக்கம்; அடென்ஷன். முன்னால் இருந்தது போல் இருங்கள். டேய், கோபு! என்ன விழிக்கிறே!



கோபு: முன்னால் நான் எப்படி இருந்தேன், சார்!

●

"பணத்தைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லு!"

"பணம் பேசும்; பேசுவதை நிறுத்தவும் செய்யும்!"

●

"ஏண்டா! அப்பாவும் நீயும் துக்கமா உட்கார்ந்திருக்கிறீர்கள்?"

"படிப்பைக் கவனி என்றார்! கவனிக்காமல் இருந்தேன்! ஊர் சுற்றாதே என்றார், சுற்றினேன். காலி சகவாசம் வேண்டாம் என்றார்; அதையே செய்தேன். இப்போ அவருக்குச் சொல்வதற்கு ஒன்றுமில்லாமல் போச்சு; எனக்கும் செய்வதற்கு ஒன்றும் இல்லாமல் போச்சு!"



●

"உனக்கு என்னப்பா 'ஜில்' என்று ஊரைச் சுத்திண்டு இருக்கே!"



"ஜில் என்ன வேண்டியிருக்கு?"

"நீ ஐஸ்கிரீம் வண்டி தானே தள்ளிண்டிருக்கே!"

●

"கிளாஸ் ஜாடிக்கு மூடி உடைந்து விட்டதே! வேறு மூடி வாங்கி வருகிறேன்!"

"நேற்றைக்கே மூடியை வாங்கிக் கொண்டிருந்தால் வீண் செலவாக இருந்திருக்காது!"



"ஏன் அப்படி?"

"ஜாடியும் இன்றைக்கு உடைந்து போய் விட்டது!"

●

"உன்னை வேலையை விட்டு நீக்கியதற்குக் காரணம் ஒன்றுமில்லாமல் இருக்காது. நெருப்பில்லாமல் புகையாது! என்ன காரணம்!"

"நான் ஆபீஸ் ரூமிலேயே சிகரெட் குடித்தேன்!"

●



"யார் வாசலில் பாரு!"

"யார் நீங்க?"

"ரா. பிச்சையா"

"யாரோ ராப்பிச்சைக்காரன் வந்திருக்கான், அப்பா!"

ஆயிரம் தேள் ஒரே சமயம் கொட்டியது போல் இருந்தது தாண்டவராயனுக்கு. பையன் செத்துப் போயிருந்தாலும் ஆபத்து; சாகாமல் பிழைத்தாலும் பெரும் ஆபத்து.

"அந்தப் படுபாவிப் பயல் உன்னிடம் எப்படி வந்தான்?"

வந்த விவரத்தைச் சொன்னான் குருட்டுப் பிச்சைக்காரன். சொல்லி முடித்ததும்," சிப்பிலே இருந்து அழுகல் வாழைப் பழத்தைப் பிய்ப்பது போலப் பிய்த்து எறிந்து விடுகிறேன். அந்தப் பயலா? இனிமேல் இங்கே நீ வந்து பயன் இல்லை. பெரிய ஆஸ்பத்திரியிலே போய்ச் சின்னப் பையன் துப்பாக்கிக் குண்டுபட்ட காயத்தோடு வந்தானா என்று விசாரித்து வை. நான் சின்னக் கடைத் தெருவுக்குள் போய் சேட்டின் வீட்டுப் பக்கம் எங்கேயாவது துப்பு கிடைக்கிறதா என்று பார்க்கிறேன்"என்றான் தாண்டவராயன்.

இருவரும் பிரிந்து விட்டார்கள். எந்த நிமிஷமும் தங்களைப் போலீஸ் தேடும் என்ற பயம் தலைகுப்புறத் தள்ளியது. சுடுகாட்டுக்குப்போய் ஏதாவது அநாதைப் பிணம் எரிக்கப்பட்டதா என்பதைத் தெரிந்து கொள்ள முயன்றான். பிறகு சின்னக் கடைத் தெருவில் நுழைந்து சேட்டுக்கு வைத்தியம் செய்யும் டாக்டர்கள் யார் யார் என்பதையும், நேற்றிரவு சுடப்பட்ட பையன் என்ன ஆனான் என்பதையும் அறியத் துடித்தான். சேட்டுக்குச் சொந்தமான அந்த வீட்டுக்கு இரவு பகல் எப்பொழுதும் கூர்க்காவின் காவல் உண்டு.

கூர்க்கா எதுவும் சொல்ல வில்லை. எல்லாக் கேள்விகளுக்கும் தலையசைத்து விட்டான். உலகநாதன் எங்கே போயிருப்பான்? செத்துப் போனான் என்று நிர்ணயம் செய்யவும் முடியவில்லையே!

ஒரு தகவலும் கிடைக்காமல் தாண்டவராயன் பெரிய ஆஸ்பத்திரிக்கு வந்தான். அங்கே குருட்டுப் பிச்சைக்காரன் யார் யார் தயவையோ பிடித்து எந்தப் பையனும் சிகிச்சைக்கு வரவில்லை என்று ஊர்ஜிதம் செய்து விட்டான். கோபாலுவைக் காணவில்லை. எங்கோ தலைமறைவாக ஓடி விட்டான். இது போலவே முருகண்ணன், தாண்டவராயன் இருவரும தப்பிவிட முயற்சி செய்தார்கள். குருட்டுப் பிச்சைக்காரன் ஓடுவது எளிது. ரயில்வே பிளாட்பாரத்தில் வியாபாரம் செய்யும் உரிமையை விட்டு விட்டுத் தாண்டவராயனுக்கு ஓடவும் மனமில்லை; தங்கவும் தைரியம் இல்லை.

சேட்டு தனது காரை எடுத்துக் கொண்டு இரவு இரண்டு மணிக்கு எங்கோ போய்த் திரும்பி வந்தான் என்பதுமட்டும் உண்மையாக இருக்குமானால்? செத்த பிரேதத்தைக் கொண்டுபோய்ப் புதைத்து விட்டோ, எரித்து விட்டோ வந்திருக்க வேண்டும்.

இந்த முடிவுக்கு வந்ததும் தாண்டவராயனின் உடம்பு தடித்து விட்டது. இனிமேல் பயம் ஏதென்று இருந்து விட்டான்.

அவனுக்குத் தோழர்களான கோபாலு, பிச்சைக்காரன் இருவரும் போன இடம் தெரியவில்லை. பத்திரிகைகள், வதந்திகள் ஒன்றும் உலகநாதனின் மறைவு, முடிவு பற்றி வெளிப்படுத்தக் காணோம்.

ஒரு வாரத்துக்கு அப்பால், 'வெற்றிலை, பாக்கு, மலைப் பழம்' என்று கத்திக் கொண்டு பிளாட்பாரத்தில் நடந்த போது, "தாண்டவராயன்" என்று குரல் கேட்டு அசந்துபோனான் தாண்டவராயன். கூப்பிட்ட குரல் பட்டாளத்துச் சிப்பாயின் குரல்.

"என்ன அத்தான், சௌக்கியமா?"

"அட பாவி! நீயாவது தேடி அந்தப் பையனைக் கண்டுபிடித்திருக்கக் கூடாதா? எனக்குக் கடிதம் வந்தது. இன்றுதான் ஊருக்கு வருகிறேன். இன்னும் வீட்டுக்குப் போகவில்லை."

தாண்டவராயனுக்குப் பயம். ஆனாலும் நடுங்காமல், "அக்காள் என்னமோ பையனைத் தொந்தரவு செய்து அடித்திருக்கிறாள். நான்கூட அவனைப் பிடிச்சு இங்கே வைத்திருந்தேன். பயல் தப்பிக் கொண்டு எங்கோ போய் விட்டான். இனிமேல் அகப்பட மாட்டான். இந்த அற்பப் பயலுக்காகவா நீங்கள் பட்டாளத்திலிருந்து இங்கே வந்தீர்கள்?" என்று அலட்சியமாகச் சொன்னான்.

"பெரிய பாவத்தைச் செய்து விட்டேன். எனக்குக் கடிதம் இரண்டு இடத்திலிருந்து வந்தது. ஒன்று திருநெல்வேலிக் கடைக்காரர் எழுதி யிருந்தார். இன்னொன்று மலைக்கோட்டையில் ஏதோ மாமுண்டி மளிகை ஸ்டோர் ஆள் ஒருவராம். அவரும் எழுதி யிருந்தார். உன் அக்காள் தான் செய்த துன்பங்களுக்கெல்லாம் கஷ்டப்படப் போகிறாள்."

தாண்டவராயன் பேச்சை முடித்துக் கொண்டு நகர ஆரம்பித்தான். எந்த நிமிஷமும் தனக்கு ஆபத்து வரலாம். வந்தால் ஒரேயடியாகத் தனக்கு எதுவும் தெரியாது என்பதைச் சொல்லிவிட வேண்டும். இதுதான் தாண்டவராயன் செய்த முடிவு. ரயில் நகர்ந்து ஜங்ஷன் நோக்கிப் போயிற்று. பட்டாளத்துச் சிப்பாய் சித்திவிநாயகம் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு கையெடுத்து உச்சிப்பிள்ளையார் கோவிலுக்குக் கும்பிடு போட்டார். பொல பொல வென்று கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. அநாதையான தமையன் பிள்ளையைத் தாம் வளர்க்க முடியாமற் போய்விட்டதை எண்ண எண்ண அவர் உடல் துடித்தது.

உலகநாதன் கிடைத்தால், எங்கேயாவது ஹாஸ்டலில் அல்லது அநாதை விடுதியில் சேர்த்து விட்டுப் பட்டாளத்துக்குத் திரும்புவது என்று முடிவு செய்தார்.

அவர் தம் வீட்டுக்குள் நுழைந்தபோது 'கோ'வெனக் கதறிக் கொண்டிருந்தாள் ஜானகி அம்மாள்.

அங்கே அவர்களுடைய சின்னப்பையன் சீனுவைக் காணவில்லை. அவன் வீட்டை விட்டுப் போய் இரண்டு நாட்கள் ஆகி யிருந்தன.

(தொடரும்)

குரோம்பேட்டை ஸ்டேஷன் வரும் வரை துப்பறியும் நாவல் ஒன்றில் சுவாரசியத்துடன் ஈடுபட்டிருந்த ராஜாராமன் தற்செயலாக யாரோ, 'குரோம்பேட்டை வந்து விட்டது, இறங்கு' என்று கூறும் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு, வண்டியில் மூலையில் உட்கார்ந்து கொண்டிருந்தவன் பரபரப்புடன் கூட்டத்தை நெருக்கித் தள்ளிக் கொண்டு வந்து இறங்கினான். அவன் இறங்குவதற்கும், கார்டு இரண்டாவது

“என்ன! டிபன் காரியரா? எங்கே? வண்டியில் விட்டு விட்டீர்களா?” என்று ஒருவர் கேட்டார்.

“ஆமாம்!...புதிது....இப்போதுதான் வாங்கினேன்.......ஐயையோ!...... அதற்குள் போய் விட்டதே...”

“பயப்படாதீர்கள். ஸ்டேஷன்மாஸ்டரிடம் சொல்லுங்கள். அவர் தாம்பரம் ஸ்டேஷனுக்குப் போன் செய்து எடுத்து வைத்து அனுப்பச் சொல்லுவார்” என்று இன்னொருவர் கூறினார்.




தடவை குழலை ஊதி மின்சார வண்டியும் யானையின் பிளிறல் ஒன்றை உதிர்த்து விட்டு விசையுடன் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

வண்டி ஸ்டேஷனை விட்டு ஒரு பர்லாங்கு ஓடி விட்ட பிறகுதான், “ஐயோ! டிபன் காரியர்...” என்ற அலறல் அவனுடைய தொண்டையிலிருந்து வெளிவந்தது.

ஸ்டேஷன் மாஸ்டர் அறைக்குச் செல்லக் காலடி எடுத்து வைத்த ராஜாராமன் உடனே, “அதோ! அதோ! என் டிபன் காரியர் அதோ. ஏ...ஏய் மிஸ்” என்று கண்களில் ஆத்திரம் தெறிக்கக் கூவினான்.

“எங்கே...? எங்கே...?” என்று பல குரல்கள் கேட்டன.

ராஜாராமன் வேகமாக நடந்து கொண்டே, “சார்! டிக்கட் கலெக்டர், சார்! அந்தப் பெண்மணியைக் கொஞ்சம் நிறுத்துங்கள். என் டிபன் காரியர். புத்தம் புதிசு” என்று மேலும் உரத்த குரலில் கூவினான்.

அப்போதுதான் டிக்கட் பரிசோதகரிடம் தன் சீசன் டிக்கட்டைக் காண

ந்து விட்டு, 'கேட்'டை விட்டு வெளியேறிக் கொண்டிருந்த அந்த வனிதை ஏதோ படபடப்பான குரல் ஒன்று தன்னை நோக்கிக் கூவிக் கொண்டிருந்ததைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

அதற்குள் ராஜாராமன் அவள் அருகில் வந்து விட்டான்.

"சார்! டிக்கட் கலெக்டர் சார்! இந்தப் பெண்மணியின் கையில் இருப்பது என்னுடைய டிபன் காரியர். இதை இவர் தவறுக..." என்று கூறி முடிப்பதற்குள், "ஐயையோ! இதென்ன அநியாயம். இது உங்கள் டிபன்காரியரா? நான் இப்போதுதான் மாம்பலத்தில் என் பெரியப்பா வீட்டிலிருந்து கொண்டு வருகிறேன். உங்களுடையது என்கிறீர்களே! நல்ல பகல் கொள்ளையாக இருக்கிறதே" என்றாள் அந்த வனிதா ரத்தினம் தன் குயிலினும் இனிய குரலில்.

ஆனால் அப்போது அந்தக் குயிற் குரல் அவனுடைய செவிக்கு இன்பத்தை அளிக்கவில்லை.

"இம்மாதிரி எத்தனை நாட்களாகப் புது மாதிரித் திருட்டுக் கிளம்பியிருக்கிறது? என் டிபன் காரியரை மறதியாக எடுத்து வந்து விட்டீர்களாக்கும் என்று நான் நினைத்தால் உங்களுடையது என்றே சாதிக்கிறீர்களே, பேஷ்!" என்றான் ராஜாராமன்.

அதற்குள் அங்கு பெரிய கூட்டமொன்று கூடிவிட்டது. எல்லோருக்கும் ராஜாராமன்தான் பெரிய புரட்டுப் பேர் வழியாயிருப்பான் என்று பட்டுவிட்டது.

"என்ன, மிஸ்டர்! ஒரு பெண் பிள்ளை என்னவோ சாமானை வாங்கிக் கொண்டு போனால் என்ன கலாட்டா பண்ணுறே? உடம்பு எப்படி யிருக்கிறது?" என்று ஒருவன் புதுப் பாணியில் மொழியில் பேசுவதற்கு ஆரம்பித்தான்.

"நான் ஒன்றும் கலாட்டா செய்யவில்லை. இதோ இந்த டிபன் காரியர் என்னுடையதுதான் என்பதற்கு அத்தாட்சி இப்போதுதான் இரண்டுமணி நேரத்துக்கு முன்பு சென்னையில் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடில் இருக்கும் விஷ்ணுராம், பகவந்த்ராம் எவர்சில்வர் கடையில் ஐம்பத்து மூன்று ரூபாய்கள் கொடுத்து வாங்கி வந்ததற்கு ரசீது இதோ. நான் வண்டியில் புத்தகம் படிக்கும் சுவாரசியத்தில் மூழ்கியிருக்கும் போது இந்த அம்மாள் மெதுவாக இதை எடுத்துக் கொண்டு இறங்கி விட்டார்கள். பாவம், நானும் இங்கே தான் இறங்குகிறேன் என்று தெரியவில்லை போலிருக்கிறது" என்று கேலியாகக் கூறினான் ராஜாராமன்.

"மிஸ்டர்! ஜாக்கிரதையாகப் பேசுங்கள். இது என்னுடைய டிபன் காரியர் தான். நீங்கள் வண்டியில் ஏமாந்து மறந்து இறங்கி விட்டு, என்னை வம்புக்கு இழுக்கவா பார்க்கிறீர்கள்? ஜாக்கிரதை. நான் உடனே போலீஸில் 'ரிப்போர்ட்' செய்து விடுவேன். மரியாதையாகப் பேசாமல் போய் விடுங்கள்" என்று பயமுறுத்தினாள் அந்த நாரீமணி.

"ஸ்டேஷன் மாஸ்டர் சார்! இது என்னுடையதேதான். இதோ அத்தாட்சி காட்டி விட்டேன். தயவு செய்து இதை வாங்கிக் கொடுங்கள்" என்றான் ராஜாராமன்.

ஸ்டேஷன் மாஸ்டர் அந்தப் பெண்ணைப் பார்த்து, "என்னம்மா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? உங்களிடம் ஏதாவது அத்தாட்சி யிருக்கிறதா, இந்தக் காரியர் உங்களுடையதுதான் என்பதற்கு?" என்று கேட்டார்.

ஒரு கணம் தயங்கினாள் அந்தப் பெண். பிறகு, "இது என் டிபன் காரியர்தான். அது எனக்குத் தெரியாதா? இதற்கு நான் என்ன அத்தாட்சி கொடுக்க வேண்டும்? இவர்தான் வண்டியில் மறந்து விட்டு..." என்று கண் கலங்காத குறையாகக் கூறினாள்.

"சார்! தாம்பரம் ஸ்டேஷனுக்குப் போன் செய்யுங்கள். இப்போ போன வண்டியில் டிபன் காரியர் ஏதாவது ...ப் போயிருக்கிறதா என்று பார்த்...ல் அப்போது தெரிந்து விடுகிறது" என்று யாரோ ஒருவர் யோசனை கூறினார். உடனே ஸ்டேஷன் மாஸ்டரும் தாம்பரம் ஸ்டேஷனைக் கூப்பிட்டு விசாரித்துப் பார்த்தார்.

நாகரிகமாக — படித்தவர்களாக விளங்கக் கூடிய இவர்களில் யார் உண்மை பேசுகிறார்கள், அல்லது யார் திருடர் என்று கண்டுகொள்ளும் ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தார்கள் அங்கு கூடி இருந்தோர். சிறிது நேரத்தில் தாம்பரத்திலிருந்து செய்தி வந்து விட்டது. வண்டியில் டிபன்காரியர் ஒன்றும் கிடைக்கவில்லை யென்றும், வண்டியிலிருந்து இறங்கியவர்களில் யாரும் டிபன் காரியரை எடுத்துக் கொண்டு செல்லவில்லை யென்றும் செய்தி வந்தது.

"அம்மா! இவரிடம் இதை வாங்கின ரசீது இருப்பதால், இந்தக் காரியர் இவருடையதுதான் என்று நன்றாகத் தெரிகிறது. அதை அவரிடம் கொடுத்து விடுங்கள். நீங்கள் உங்கள் காரியரை எங்கே போக்கடித்தீர்கள் என்று யோசனை செய்து பாருங்கள். ஒரு வேளை மாம்பலத்துக்கும் பல்லாவரத்

துக்கும் இடையில் உங்களை ஏமாற்றி விட்டு யாராவது எடுத்துப் போயிருந்தாலும் இருக்கலாம்'' என்று கூறினார் ஸ்டேஷன்மாஸ்டர்.

அந்த யுவதியின் கண்களில் நீர் வந்து விட்டது. நெஞ்சையும் அடைத்துக் கொண்டது. அவள் பரிதாபத்துடன், "சார்! இது என்னுடையதுதான். என் பெரியப்பா மாம்பலத்தில் இருக்கிறார். அவர் நேற்று இதை என் அண்ணாவுக்காக வாங்கி வைத்திருந்தார். நான் இன்றைக்கு அவர் வீட்டுக்குப் போய் இதைக் கொண்டு வருகிறேன். இவர் தான் தம் டிபன் காரியரை மறந்து வைத்து விட்டு..." என்று இழுத்தாள்.

"நிறுத்துங்கள், மிஸ்! உங்கள் பெயர் தெரியவில்லை. எனக்கு மறதி என்பதே கிடையாது. இதை நான் இன்றைக்கு வாங்கின அத்தாட்சி இருக்கும்போது, அதென்னமாய் இதை உங்களுடையது என்று சொல்ல முடியும்? பேசாமல் அதைக் கொடுங்கள். இப்படி..." என்று அவளிடமிருந்து அதைப் பிடுங்குவதற்குப் போனான்.

ஸ்டேஷன்மாஸ்டரும், "அம்மா! இருக்கும் அத்தாட்சிப்படி அதன் உரிமையாளர் இவராக இருக்கிறார். பேசாமல் கொடுத்து விடுங்கள். இல்லையென்றால் இதற்காக ரிப்போர்ட் செய்து, போலீஸ், கோர்ட்டு என்று போக வேண்டி வரும். எல்லோருக்கும் அநாவசியமான கஷ்டம். யோசித்துப் பாருங்கள்'' என்று சமாதான வழியில் நியாயம் பேசி ஒரு வழியாகத் தொல்லையைத் தீர்க்க முயன்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

"என்ன, ஸ்டேஷன் மாஸ்டர்! நீங்களும் இப்படி ஒரேயடியாய்ச் சொன்னால் அப்புறம் எப்படி? நான் கொண்டுவந்த டிபன்காரியரை எங்கும் விடவில்லையே? என் பக்கத்திலேயேதானே வைத்திருந்தேன். இவர் எங்கே உட்கார்ந்திருந்தாரோ, அதுகூட எனக்குத் தெரியாது. அப்படியிருக்க இது அவருடையதாக எப்படியிருக்க முடியும்?'' என்றாள்.

"அவர் உங்களுக்குப் பின்னாலிருந்த பெஞ்சியில் உட்கார்ந்திருந்தார், அம்மா!" என்று கூறினார் அங்கிருந்த பிரயாணிகளில் ஒருவர்.

"பார்த்தீர்களா, சார்! நான் சொல்வது அவ்வளவும் உண்மை'' என்று கூறினான் ராஜாராமன்.

"ஏன் ஐயா! இரண்டு பேரையும் வண்டியில் பார்த்ததாகச் சொல்கிறீரே. யாரிடம் காரியர் இருந்தது என்று சொல்ல முடியவில்லையா?'' என்று கேட்டார் ஸ்டேஷன்மாஸ்டர்.

"நான் பல்லாவரத்திலிருந்து வருகிறேன், சார். அதையெல்லாம் நான் பார்க்கவில்லை. உட்கார இடமிருக்கிறதா என்று பார்த்தேன். அப்போ இந்த ஐயா உட்கார்ந்திருந்த பெஞ்சிக்குப் பின் பெஞ்சியில் இந்த அம்மா உட்கார்ந்திருந்ததைப் பார்த்தேன், அவ்வளவுதான் தெரியும்!''

அதற்குமேல் ஒரு ருசுவும் தேவையில்லாமல் போய் விட்டது.

"அம்மா! அதை நீங்கள் அவரிடம் கொடுத்து விடுங்கள். உங்கள் விலாசத்தைச் சொல்லி விட்டுப் போங்கள். ஒரு வேளை இன்னொரு டிபன்காரியர்—உங்களில் ஒருவர் தொலைத்தது—கிடைத்தால் சேர்ப்பிப்பதற்குச் சௌகரியமாயிருக்கும்'' என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

வேறு வழியின்றி அந்தப் பெண் ஐம்பது ரூபாய் விலையுள்ள புத்தம் புது டிபன்காரியரை ராஜாராமனிடம் கொடுத்தாள். அவள் கண்களில் நீர் துளிர்த்தது. அப்போது ராஜாராமனுக்கும் சங்கடமாய்த் தானிருந்தது. ஆனாலும், "அந்தக் காரியர் தன்னுடையது



தான் என்று நிச்சயமாகத் தெரிந்திருக்கும் போது என்ன செய்வது? அந்தப் பெண் எங்கே மறந்து விட்டாளோ, அல்லது அது எவ்வளவு தூரம் உண்மையோ? அதற்கு நாம் என்ன செய்வது? ஜாக்கிரதையாக இருக்க வேண்டாமா?'' என்று மனத்தில் சமாதானம் கூறிக் கொண்டான்.

"நர்மதா! 'டாக்டர் ஆப்' கே. வி. கோபாலன், ராதா நகர், குரோம்பேட்டை'' என்று தன் விலாசத்தை அந்தப் பெண் கொடுத்ததைக் கவனித்தான் ராஜாராமன்.

டிபன் காரியரை எடுத்துக் கொண்டு கணபதிபுரத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான். ஜனங்களில் சிலர், "ஸார்! பார்த்தீர்களா, அக்கிரமமாயிருக்கு... காலம் கெட்டுப் போச்சு...நல்லா படித்த பெரிய வீட்டு மனிதர்கள் இம்மாதிரி நாசூக்கான திருட்டு வேலையில் இறங்கி விட்டார்கள். யாரை நம்புவது என்

படுத கடினமாக இருக்கிறது'' என்று சொல்லிக் கொண்டு போனது அவனுடைய காதில் விழுந்தது.

''சேச்சே! அப்படியெல்லாம் ஒன்றுமில்லே....அந்தப் பெண்ணைப் பார்த்தால் தெரியவில்லே? அது உண்மையாகத்தான் இருக்கும்...தன் டிபன் காரியரை எவன் தூக்கிக் கொண்டு போய் விட்டானோ....இதுவும் தன்னுடையதைப் போலவே இருந்ததால் எடுத்துக் கொண்டு இறங்கி விட்டாள்...'' என்றார் இன்னொருவர்.

ராஜாராமனும் இப்போதுதான் நர்மதாவைப் பற்றி நிதானமாக யோசித்துக் கொண்டே நடக்க ஆரம்பித்தான்.

'அடடா...நர்மதா...என்ன அழகான பெயர்! அதற்கேற்ற அழகான உருவம். அவளை வேறுவிதமான நல்ல சூழ்நிலையில் அறிமுகம் செய்துகொள்ள முடியாமல் இப்படிச் சங்கடமான நிலையில் அறிமுகம் ஆகிவிட்டதே. சேச்சே! வீணுக்கு அவளுடன் சண்டைபிடித்தோமே? இதையே அவளிடம் கொடுத்து விட்டிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? அவசரத்தில் ஒரு நல்ல சந்தர்ப்பத்தை இழந்து விட்டோமே' என்று வருத்தப்பட்டான்.

ராஜாராமன் சென்னையில் எஸ்பிளனேடில் உள்ள ஒரு எண்ணெய்க்கம்பெனி ஆபீசில் வேலை செய்து கொண்டிருந்தான். அவனுக்குத் தினமும் எட்டு மணிக்கெல்லாம் சாப்பிடுவது உடம்புக்கு ஒத்துக் கொள்ளவில்லையாதலால், பன்னிரண்டு மணிக்கு டிபன் காரியரில் வைத்துச் சாப்பாடு கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்திருந்தான். அவனுடைய வீட்டில் இருந்த பித்தளை காரியரில் தான் இதுநாள் வரை சாப்பாடு வந்து கொண்டிருந்தது. அது பல இடங்களில் விளிம்பில் விரிசல் விட்டு, பார்க்கக் கோரமாக இருந்தது. அதிலிருந்து சாப்பிடவே அவனுக்குப் பிடிக்கவில்லை. அவமானமாகவும் இருந்தது. அதனால் அவன் இந்தத் தடவை போனஸ் வந்ததும் முதல் காரியமாக எவர்ஸில்வர் டிபன் செட்டை வாங்கி வந்துவிட்டான். அதுதான் கடைசியில் இப்படி ஒரு கலாட்டாவை உண்டுபண்ணி விட்டது.

அடுத்த நாள் பளபள வென்றிருக்கும் அந்தப் புத்தம் புது எவர்சில்வர் டிபன் காரியரில் வந்த சாப்பாட்டை ஆனந்தத்துடன் எடுத்துப் போட்டுச் சாப்பிடும் போது நர்மதாவின் நினைவு வந்தது.

அவனுடைய மதிவதனம் அவனுடைய மனத்தில் நிரந்தரமாகக் குடிபுகுந்து விட்டது. எப்படியாவது அவளைக் கண்டு, அன்று நடந்த சம்பவத்துக்கு மன்னிப்பு கேட்டுக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டான். 'ஆனால் அவளை எப்படிச் சந்திப்பது? அவள் ராதா நகரில் அல்லவா இருப்பதாகச் சொன்னாள்? விசாரித்துக் கொண்டு போகலாமா? ஆனால் அவளுடைய பெற்றோர்களெல்லாம் இருப்பார்களே...தவறாக நினைத்துக் கொண்டுவிட்டால்......எப்படி?' என்று அவனுடைய மனம் தடுமாறிக் கொண்டிருந்தது. இந்தத் தடுமாற்றத்தினால் அவனுக்கு அந்த எவர்சில்வர் டிபன் காரியரில் சாப்பிடவே பிடிக்கவில்லை. இதற்கு என்ன செய்வது என்று தீவிரமாகச் சிந்தித்தான்.

இரண்டு நாட்களாகத் தீவிரமாக எவ்வளவோ யோசித்த பிறகுதான் அந்த யோசனை உதயமாயிற்று. 'பேசாமல் ஒரு புது டிபன் காரியர் வாங்கி அதை ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுத்து அவளுடைய டிபன் காரியர் கிடைத்து விட்டதென்று கூறி அவளிடம் சேர்த்துவிடச் சொல்லலாம்' என்ற எண்ணம் உண்டாயிற்று. இந்த எண்ணம் ஏற்பட்டதும், அவனுடைய மனத்தில் ஒரு பெரும் நிம்மதி உண்டாயிற்று.

அன்று மாலை காரியாலயம் விட்டதும், நேரே விஷ்ணுராம் பகவந்த்ராம் கடைக்குச் சென்று அதே போல் ஒரு டிபன் காரியரை வாங்கி விட்டான். அதைக் கையில் ஏந்திச் சென்றபோது அவன், ''இதை நாமே நேரில் எடுத்துச் சென்று, 'நான்தான் என்னுடைய டிபன்காரியரை வண்டியில் காணாமல் போக்கிவிட்டேன். தவறாக நர்மதாவின் டிபன் காரியரை என்னுடையதென்று எண்ணி, அவ்விதம் நடந்து கொண்டு விட்டேன். அதற்காக வருத்தப்படுகிறேன். அதனால் ஒரு புது டிபன் காரியரை வாங்கிக் கொடுக்கிறேன்' என்று கூறிக் கொடுத்தால் என்ன?'' என்று எண்ணினான். இந்த யோசனை அவனுக்குப் பிடித்திருந்தது. ஸ்டேஷன்மாஸ்டரிடம் கொடுத்துச் சேர்ப்பிப்பதால் என்ன லாபம் என்று எண்ணினான்.

கோட்டை ஸ்டேஷன் மேம்பாலத்தின் படிகளில் ஏறிக் கொண்டிருந்த போது, அவனுக்கு இரண்டு படிகள் முன்னால் போய்க் கொண்டிருந்த உருவத்தைக் கண்டதும் அவனுக்கு வியப்பும் ஆனந்தமும் தாங்கவில்லை. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்து நின்றது போல் அவனுக்குப் பெரு மகிழ்ச்சி உண்டாகி விட்டது.

''நர்மதா ....!'' என்று உரக்கவே கூவி விட்டான்.

நர்மதாவும் தன்னை யாரோ கூப்பிடுவதைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள். ராஜாராமனைக் கண்டதும், அவளுக்கு ஒரு கணம் அதிர்ச்சி உண்டா

## அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள் !

# கால்கேட் டூத் பிரஷ்

---




# மிக அழகிய ...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது !

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள் !**

ECHO/G/3

யிற்று. உடனே வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டு மேலே வேகமாக நடந்தாள்.


குறித்த காலத்தில் ரயில்வே பட்ஜெட்டைச் சமர்ப்பிக்க ரயில்வே மந்திரிக்கு வர முடியவில்லையாம்!

ராஜாராமனுக்கு ஏமாற்றமாக இருந்தது. ஆனால் அடுத்த கணம் அவனுடைய கண்கள் நர்மதாவின் வலது கரத்தில் இருந்த பொருளைக் கண்டதும் அவனுடைய தலை சுழல ஆரம்பித்து விட்டது. தடுமாறி மயக்கம் வந்து விழாமல் இருக்கப் பாலத்தின் இரும்புக் கிராதிகளைப் பிடித்துக் கொண்டான். நர்மதாவின் கையில் காட்சியளித்த பொருள், அவனுடைய முகத்தைப் போல் பளபள வென்று மின்னும் ஒரு எவர்சில்வர் 'டிபன்' காரியர். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

வேகமாக நர்மதாவின் அருகில் சென்று, "மன்னிக்க வேண்டும், மிஸ் நர்மதா....! இந்த....உங்கள் கையில் இருக்கும்....டிபன்....காரியர்..." என்று ஏதோ உளறினான்.

"ஏன்? இந்த டிபன் காரியரும் உங்களுடையதென்று சண்டைக்கு இழுக்கப் பார்க்கிறீர்களா? இந்தத் தடவை உங்கள் ஜம்பம் சாயாது. ஜாக்கிரதை. இதோ நான் இதைக் கடையில் வாங்கின ரசீது. ஏதாவது கலாட்டா செய்தால் போலீஸில் ரிப்போர்ட் செய்து விடுவேன். என்னை அநாவசியமாக வம்புக்கு இழுப்பதாக...."என்று நர்மதா கோபத்துடன் கூறினாள்.

"இல்லை, இல்லை. நர்மதா! கோபித்துக் கொள்ள வேண்டாம். ஒரு சிறு தவறு நேர்ந்து விட்டது" என்றான் ராஜாராமன் தயக்கத்துடன்.

"அதனால் இனி என்ன, என்னுடன் நீங்கள் பேச வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை..." என்று சொல்லிக் கொண்டே பிளாட்பாரத்துக்குள் நுழைந்தாள்.

அப்போதுதான் ஒரு வண்டி போயிருந்ததால் அவ்வளவுகூட்டமில்லை.

"நர்மதா! ஒரு நிமிஷம். தவறாக எண்ணிக் கொள்ளக் கூடாது. நான்தான் அன்று என் டிபன் காரியரைக் காணாமல் பறி கொடுத்து விட்டேன். வண்டியில் வைத்து விட்டுத் துப்பறியும் நாவலில் ஈடுபட்டிருந்தபோது, எவனோ தூக்கிக் கொண்டு போய் விட்டான். என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தபோது உங்கள் கையில் இருந்த காரியரைப் பார்த்ததும், அது என்னுடையதைப் போலவே இருந்ததால் முதலில் அதுதான் என்னுடையது என்று எண்ணி அப்படி உரிமை கொண்டாடினேன். பிறகு பார்த்தால், அது உங்களுடையது என்று கண்டு கொண்டேன். இரண்டு நாட்கள் கழித்துப் பார்த்தபோது, அது வேறு பிராண்ட் எவர்சில்வரால் செய்யப்பட்டிருக்கிறது. நான் வாங்கினது 'நிலா' மார்க்" என்று ராஜாராமன் ஒரு பொய்யைக் கூறினான்.

"ரொம்ப ஒழுங்காக இருக்கிறது. உங்களுடைய செய்கை. ஒரு பெண்ணை வம்புக்கு இழுத்தீர்களாக்கும்" என்று சிறிது புன்னகையுடன் கூறிவிட்டு உடனே, "சரி, சரி, போகட்டும். இனி அதைப் பற்றி என்ன? உங்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போங்கள்" என்று கடுமையுடன் கூறினாள் நர்மதா.

"இல்லை நர்மதா....!"

"என் பேரைச் சொல்லிப் பேச வேண்டாம். ரொம்பவும் வேண்டியவர் போல் அல்லவா குழைவாகப் பேசுகிறீர்கள்"

"மன்னிக்கணும்! நான் செய்த தவற்றுக்காக வருந்துகிறேன். அதனால் இன்று கடைக்குப் போய் இந்த எவர்சில்வர் டிபன் காரியரை வாங்கி வந்திருக்கிறேன் உங்களுக்குக் கொடுப்பதற்காக. எடுத்துக் கொள்ளுங்கள்" என்று தன் கையிலிருந்த டிபன் காரியரை அவளிடம் நீட்டினான் ராஜாராமன்.

"இனி அது எதற்கு? இன்று ஆபீஸில் கடன் வாங்கி ஒரு டிபன் காரியர் வாங்கியாகி விட்டது. இனிமேல் நீங்கள் வாங்கிக் கொடுத்து என்ன பிரயோசனம்? இரண்டையும் நான் எடுத்துப்போனால் இல்லாத சங்கடங்கள் வந்து மூளக்கும்" என்று வெறுப்புடன் கூறினாள் நர்மதா.

"ஐயையோ! அப்படியா? இந்தப் பாழாய்ப் போன புத்திக்கு இன்றுதான் இதை வாங்கித்தர வேண்டுமென்று எட்டியது. நேற்றே தோன்றியிருந்தால் உங்களுக்குச் செலவு உண்டாகியிருக்காதல்லவா? ஆமாம், அப்புறம் நீங்கள் எப்படி வீட்டில் சமாளித்தீர்கள். ரொம்பவும் கோபித்துக் கொண்டார்களா? அப்போதே எனக்குச் சங்கடமாயிருந்தது" என்று பரிவுடன் விசாரித்தான்.

"நான் சொல்லவே இல்லே. பெரியப்பா வீட்டிலிருந்தே கொண்டுவர மறந்து விட்டேன் என்றும், இன்னொரு நாள் போகும்போது கொண்டு வருகிறேன் என்றும் கூறினேன்."

"நல்லவேளை! எப்படியோ சமாளித்து விட்டீர்கள். இப்போதுதான் மனத்துக்குச் சமாதானமாயிருக்கிறது. அது சரி, நீங்கள், பாவம், என்னால் சிரமப்பட்டுப் பணம் கடன் வாங்கி வேறு காரியர் வாங்கி விட்டீர்களே. நான் அதன் கிரயத்தைக் கொடுத்து விடுகிறேன். வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். என்ன?" என்று மணிபர்ஸைத் திறக்கப் போனாள்.

"வேண்டாம், வேண்டாம்" என்று நர்மதா கூறினாள்.

"வேண்டாம் என்றால் என்ன அர்த்தம்? நீங்கள் யாரோ... நான் யாரோ, கொஞ்சமான தொகையா, அலட்சியப் படுத்துவதற்கு?" என்றான் ராஜாராமன்.

நர்மதா ஒன்றும் பதில் சொல்ல முடியாமல் திணறினாள். ஆனால் பணத்தைப் பெற்றுக் கொள்ளவில்லை.

"நீங்கள் எந்த ஆபீசில் வேலை செய்கிறீர்கள்?" என்று விசாரித்தான் ராஜாராமன், அவளுடைய மௌனத்தைச் சாதகமாக்கிக் கொண்டு.

"லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷனில்!" என்றாள் அவள்.

அதற்குள் மின்சார வண்டி 'விர்' ரென்று வந்து நின்றது. வண்டியில் ஏறப் போனவன், "ராஜாராம் நில், நில். அடுத்த வண்டியில் போ" என்ற குரல் கேட்டுத் திரும்பினான்.

கோட்டை ஸ்டேஷன் உதவி ஸ்டேஷன் மாஸ்டர் ராமநாதன் நின்றுகொண்டிருந்தான். அவன் ராஜாராமனுக்கு நீண்ட நாளைய நண்பன்.

"என்ன சமாசாரம்? அவசரமாகப் போக வேண்டும். பிறகு வருகிறேன்" என்று கூறியவாறே நர்மதாவைப் பார்த்தான் ராஜாராமன்.

"உன் அவசரம் பாழாய்ப் போக. நில், சொல்கிறேன்" என்றான் ராமநாதன்.

கார்டு குழல் ஊத வண்டி புறப்பட்டுப் போய் விட்டது. என்ன காரணமோ, நர்மதாவும் வண்டியில் ஏறவில்லை.

"ஏண்டா! அன்றைக்கு அப்படி அவசரப்பட்டு வண்டி ஏறப் போனாயே. எவர்சில்வர் டிபன்காரியரை மறந்து இங்கே வைத்து விட்டாயே. அது உனக்கு வேண்டாமா?" என்றான் ராமநாதன் வண்டி போனதும்.

"அட, கடவுளே! அதை நான் இங்கேயா வைத்து விட்டேன்?" என்று ராஜாராமன் வியப்பும், பிரமிப்பும்

பொங்கக் கேட்டான். நர்மதாவைப் பார்த்தான். அவளுடைய முகத்தில் தோன்றியது கேலிப் புன்னகையா, கோபமா, பரிதாபமா என்று புரியவில்லை. ஒரு கணத்தில் எல்லா பாவங்களும் தோன்றி மறைந்து விட்டன.

"அவ்வளவு ஞாபகமறதியா? நாலு நாட்களாய்த் தினமும் நீ வருவாய் என்று பார்த்துக் கொண்டேயிருக்கிறேன்" என்றான் ராமநாதன்.

"அட! இதென்ன புது எவர்சில்வர் டிபன்காரியர்?" என்று ராஜாராமன் கையில் இருந்ததைப் பார்த்துக் கேட்டான் ராமநாதன். அவன் அருகில் நர்மதா நிற்பதையும் அவள் கையில் இன்னொரு டிபன்காரியர் இருப்பதையும் பார்த்து விட்டு, "இது யார்? நான் அறிந்து கொள்ளலாமா?" என்று மெதுவான குரலில் கேட்டான்.

"அது ஒரு பெரிய கதை" என்றான் ராஜாராமன். ஆனால் சுருக்கமாகத் தன் ஞாபக மறதியின் விளைவாக உண்டான சம்பவங்களை எடுத்துரைத்தான்.

"பலே! பலே! விசித்திரமான கதையாகத்தான் இருக்கிறது" என்று ரசித்தான் ராமநாதன்.

ராமநாதன் கொடுத்த டிபன்காரியரையும் எடுத்துக் கொண்டு நர்மதாவுடன் அடுத்த வண்டியில் ஏறினான் ராஜாராமன்.

"ஆமாம், மூன்று டிபன் காரியரையும் வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றாள் நர்மதா.

"எவர்சில்வர் பாத்திரக்கடை வைத்து விடுகிறேன்" என்றான் ராஜாராமன் சிரித்துக் கொண்டே.

வீட்டுக்குச் சென்றதும் அவனுடைய தாயார், "ராஜாராமா! இதென்னடா, மொத்தமாய் வாங்கினால் விலை மலிவு என்று இத்தனை டிபன் காரியரையும் வாங்கிவந்து விட்டாயா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"இல்லை அம்மா! உனக்கு வரும் மருமகள் முன்னதாகவே கொண்டு வந்திருக்கும் சீர் வரிசை" என்று விஷயத்தை விளக்கினான் ராஜாராமன்.

இன்றும் ராஜாராமனுடைய வீட்டுக்குச் சென்றவர்கள் மூன்று டிபன் காரியர்கள் இருப்பதைப் பார்க்கலாம். அதைப்பற்றி விசாரிப்பவர்களுக்குத் தன் ஞாபக மறதியால் ஏற்பட்ட அதிர்ஷ்டத்தைப் பற்றி மகிழ்ச்சியுடன் விவரிக்க ஆரம்பித்து விடுகிறான் ராஜாராமன். அவன் மனைவி நர்மதாவும் தன் சிநேகிதிகளிடமெல்லாம் அந்த மூன்று டிபன் காரியர்களைப் பற்றி அலுக்காமல் சொல்லிக்கொண்டிருக்கிறாள்.












# நீதி நிலைத்தது

டி. எஸ். கோதண்டராமன்

நகரம் முழுவதும் அதே பேச்சாகி விட்டது. தினந்தோறும் காலையில் செய்திப் பத்திரிகையைப் புரட்டு கையில் ராசாக்கண்ணு முதலியாரின் கொலையைப் பற்றிப் புதிய தகவல் ஏதாவது வெளியாகி யிருக்கிறதா என்று பார்ப்பதும், பொது ஜனங்களுக்கு வழக்கமாகி விட்டது. ஆனால், சம்பவம் நடந்து பத்து தினங்களுக்கு மேல் ஆகியும் குற்றவாளி யார் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. போலீஸார் இன்னமும் புலன் விசாரணை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

சிக்கலான பல கொலை வழக்குகளை நடத்திப் புகழ் பெற்ற சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ராஜாங்கம் நாயுடு அவர்களே, முதலியாரின் கொலையைப் பற்றித் தீர்மானமான முடிவுக்கு வர முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார். காரணம், குற்றவாளி சாகசமாகக் காரியத்தை முடித்திருந்தான்! குற்றவாளியைக் கண்டுபிடிப்பதற்கு ஆதாரமாக இருக்கக் கூடிய மிகச் சிறு தடயத்தைக்கூட அவன் விட்டுப் போகவில்லை.

நடந்தது இதுதான்:

பத்து நாட்களுக்கு முன் ஒருநாள் காலை சுமார் எட்டு மணிக்கு ராயப்பேட்டை போலீஸ் நிலையத்துக்கு ராசாக்கண்ணு முதலியார் கொலை செய்யப்பட்டிருப்பதாகப் போலீஸ் செய்திவந்தது. போலீஸார் ஸ்தலத்துக்கு விரைந்து சென்றார்கள். குறிப்பிட்ட பங்களாவின் வாசலில், காவற்காரன் சின்னசாமி, பரபரப்பும் கவலையும் தோய்ந்த முகத்துடன் அவர்களை எதிர்கொண்டழைத்தான்.

பங்களா மாடியில் கொலை நிகழ்ந்திருந்தது. முதலியார், நாற்காலியில் சாய்ந்து வாயைப் பிளந்து கிடந்தார். மார்பில் குண்டுகள் பாய்ந்ததனால் ரத்தம் பெருகி, போலீசார் பார்த்த சமயத்தில், கரு ரத்தமாக உலர்ந்து போயிருந்தது.

சடலத்தை வைத்தியப் பரிசோதனைக்கு அனுப்பிவிட்டு மற்றக் குறிப்புகளை எடுத்துக் கொண்டார் போலீஸ் இன்ஸ்பெக்டர். முதலியாருடன் சேர்ந்து வியாபாரம் செய்பவரும் பங்களாவின் சொந்தக்காரருமான நல்லபெருமாளுக்கு 'டிரங்க்' போனில் செய்தி பறந்தது. வியாபார நிமித்தமாகத் திருச்சி சென்றிருந்த அவர் செய்தி கேட்டவுடனேயே காரில் புறப்பட்டு வந்தார்.

அவர் சென்னை வந்து சேருவதற்குள் வைத்தியப் பரிசோதனையின் முடிவும் தெரிந்து விட்டது. முதலியாரின் மார்பில் இருமுறை கட்டதன் பாய்ந்ததால், அவர் உயிர் பிரிந்தது என்றும், உயிர் பிரிந்து ஏறக்குறைய எட்டுமணிக்கு மேல் ஆகிவிட்டது என்றும் டாக்டர்கள் தெரிவித்தனர்.

தாங்கமுடியாத சோகத்துடன் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் வந்தார் நல்லபெருமாள். "என்ன ஸார்! இப்படி நடந்து விட்டதே? நானும் அவருமாகச் சேர்ந்து பன்னிரண்டு வருஷங்களாக வியாபாரம் செய்கிறோம். அண்ணன் - தம்பி போலப் பழகி விட்டோம். அவர் மாதிரி மனிதர் இனி கிடைப்பாரா?" என்று அழமாட்டாக் குறையாகச்சொன்னார்.

"மிஸ்டர் நல்லபெருமாள்! வெகு காலமாகப் பழகிய நண்பரைப் பிரிந்து வருந்தும் உங்களிடம் அனுதாபப்படுகிறேன். என்றாலும் என்னுடைய கடமையை நான் கவனிக்க வேண்டுமல்லவா? என்னுடைய சில கேள்விகளுக்கு நீங்கள் பதில் சொல்வீர்களா?" என்று கேட்டார், ராஜாங்கம்.

"கேளுங்கள், ஸார்!"

"உங்களுக்கு யார் பேரில் சந்தேகம் ஏற்படுகிறது?" என்று கேட்டார்.

"நான் என்ன ஸார், சொல்வது?...முதலியாரின் நல்ல குணத்துக்கு, அவருக்கு ஒரு விரோதி இருப்பான் என்பதை என்னால் எண்ணிப் பார்க்கவே முடியவில்லை..."

"நீங்கள் இல்லாத சமயத்தில் அவர் ஏன் உங்கள் பங்களாவுக்கு வந்தார்?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை."

"நீங்கள் கடைசியாக அவரை எப்போது பார்த்தீர்கள்?"

"நேற்று சாயங்காலம் ஆறு மணி சுமாருக்கு. போட்மெயிலில் போவதற்காக முன்னதாகவே 'பர்த்' நிர்ணயம் செய்து வைத்திருந்தேன். ஊருக்குப் புறப்படுவதற்கு ஆயத்தம் செய்வதற்காகக் காரியாலயத்திலிருந்து சற்று முன்னதாகவே புறப்பட்டு விட்டேன்."

"நீங்கள் மெயிலில் ஊருக்குப் போகும்செய்தி ராசாக்கண்ணு முதலியாருக்குத் தெரியுமா?"

"தெரியும். வியாபார சம்பந்தமாக நான் அடிக்கடி வெளியூர் போவதுண்டு. முதலியாரைக் கலந்துகொண்டுதான் பிரயாண ஏற்பாடுகள் செய்வேன்."

"ஓகோ! அப்படியானால் நேற்றிரவு நீங்கள் சென்னையில் இல்லை. ரயிலில் பிரயாணம்செய்து கொண்டிருந்தீர்கள். அப்படித்தானே?"

"என்ன சார்! இப்படிக் கேட்கிறீர்கள்?...நீங்கள் டிரங்க் போனில் தெரிவித்த செய்தியைக் கேட்டு வாடகைக்காரில் நான் ஓடோடி வந்திருக்கிறேன். திருச்சி ஜங்ஷனுக்கு எதிரேயுள்ள 'மாருதி பவ'னில்தான் நான் தங்கினேன். வழக்கம்போல். அங்கே வேண்டுமானால் விசாரித்துப் பாருங்கள். ஏன், திருச்சி போவதற்கு வாங்கிய டிக்கட் நம்பரைக்கூட என் டைரியில் குறித்து வைத்திருக்கிறேனே" என்று சொல்லி நிறுத்திய நல்லபெருமாள், தம் சட்டைப் பையிலிருந்து கையடக்கமான ஒரு டைரியை வெளியே எடுத்தார்.

ராஜாங்கம் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டு புன்னகை புரிந்தார்.

"மிஸ்டர் நல்லபெருமாள்! டைரியை நான் பார்க்க வேண்டிய தேவையில்லை. நீங்கள் போட்மெயிலில் பிரயாணம் செய்தீர்கள் என்பதைக் குறித்து எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆனால், எவர் பேரிலும் சந்தேகம் தோன்றவில்லை என்கிறீர்களே?"



'ஆமாம்! சம்பவம் நடந்திருக்கும் விதம் ஏராளமாகக் குழப்பத்தை உண்டாக்கு கிறது. இன்ஸ்பெக்டர்...என் வீட்டில் பத்து நாட்களாக யாருமே இல்லே. நானும், வீட்டுச் சாவியைச் சின்னசாமியிடம் ஒப்படைத்து விட்டுப் போட்மெயிலில் போய் விட்டேன். நான் வீட்டிலிருந்து கிளம்பியவுடனேயே, சிந்தாதிரிப்பேட்டையிலிருந்த தன் அக்காவைப் பார்க்கப் போய் விட்டதாக அவன் சொல்கிறான்...''

''அது மட்டுமா? உபயோகப்படுத்தப்பட்ட உங்கள் ரிவால்வரில்கூடக் கைரேகைகளைக் காணோம்! முன்யோசனையுடன், துணியால் ரிவால்வரைப் பிடித்துக்கொண்டே குற்றவாளி காரியத்தை நடத்தியிருக்கிறான்!''

''இருக்கட்டும். கதவு பூட்டப்பட்டுள்ள பங்களாவின் மாடிக்கு ராசாக்கண்ணு முதலியார் எப்படி வந்தார்? பங்களாவின் எந்தக் கதவும் உடைக்கப்பட்டதாகவோ மறுசாவி போட்டுத் திறக்கப்பட்டதாகவோகூடத் தெரியவில்லையே? எல்லாக்கதவுகளும் சரியான படி பூட்டப்பட்டுத்தான் இருக்கின்றன. வாசற் கதவைக்கூடக் காலையில், தான் வந்து திறந்ததாகச் சின்னசாமி சொல்கிறான். அதைக் கண்ணால் பார்த்தவர் யாருமில்லே!''

ராஜாங்கம் நிமிர்ந்தார்.

''என்ன சொல்கிறீர்கள், நீங்கள்? சின்ன சாமிதான் கொலே செய்திருப்பான் என்று சொல்கிறீர்களா?...''

''நான் சொல்லவில்லே! அந்த முடிவுக்குத் தானே, இன்ஸ்பெக்டர், நாம் வரவேண்டி யிருக்கிறது?...மாடியில், பணப்பெட்டியருகே அவர் கட்டப்பட்டுக் கிடக்கிறார். பெட்டியில் இருந்த சிறிது தொகையையும் காணோம். வீட்டுச் சாவியோ, சின்னசாமியிடம்! என்ன? நான் வரட்டுமா? குற்றவாளி உங்கள் கையில் சிக்காமல் எவ்வளவு நாட்கள்தான் தப்பு வதற்கு முடியும்?''

நல்லபெருமாளுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு, ஒரு கான்ஸ்டேபிளே அழைத்தார் ராஜாங்கம்.

''சின்னசாமியைப் பிடித்து 'லாக்-அப்'பில் போட்டு விஷயத்தைக் கக்கும்படி செய்! பார்!'' என்றும் உத்தரவிட்டார்.

சர்க்கார் வக்கீல் சந்தானகிருஷ்ணனும், ராஜாங்கமும் எவ்வளவோ மண்டையை உடைத்துக் கொண்டனர், சின்னசாமியின் பேரில் குற்றப் பத்திரிகை தயாரிக்க. ஆனால், அவன் எந்த விதமாகக் குற்றத்தைச் செய்திருக்கக் கூடும் என்ற அனுமானத்தைக் கூட அவர்களால், திருப்தியுற நிலைநிறுத்த முடியவில்லே!

நல்லபெருமாளின் பங்களாச் சாவி அவ னிடம் இருந்தது உண்மைதான். நல்லபெரு மாள் எழும்பூரை அடைந்ததும், காரைத் திருப்பி ஓட்டிக் கொண்டு வந்த டிரைவர், 'காரேஜி'ல் காரை நிறுத்திப் பூட்டிக்கொண்டு போய்விட்டான். அதற்குப் பின்னர், பங்களா வின் கதவைத் திறந்து கொண்டு சின்னசாமி உள்ளே போயிருக்கலாம். ஆனால், ராசாக் கண்ணு முதலியார் அங்கே வருவானேன்? நல்லபெருமாள் போட்மெயிலில் திருச்சி செல் வதும், அவரது குடும்பத்தினர் எவரும் ஊரில் இல்லாததும் அவர் அறிந்தவைதானே?

''வக்கீல் சார்! இந்த முடிச்சை மட்டும் அவிழ்த்துக் கொடுத்து விட்டீர்களானால் இப் பொழுதே குற்றப் பத்திரிகை தயாரித்து, நாளைக்கே கோர்ட்டில் தாக்கல் செய்துவிட லாம்!'' என்று கூறியவாறே, கையிலிருந்த காகிதக் கட்டை மேஜையின்மீது தூக்கிப் போட்டார் ராஜாங்கம்.

'அங்கேதான் எனக்கும் குழம்புகிறது, மிஸ்டர் நாயுடு! ராசாக்கண்ணு முதலியார் வீட்டில் விசாரித்ததிலிருந்தும் விசேஷமாக எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லே என்கிறீர்களே?''

ஆமாம்! சம்பவம் நடந்த அன்றிரவு ஒன்பது மணி சுமாருக்கு முதலியாரை யாரோ போனில் அழைத்தார்களாம். அவர் பேசி யதை வீட்டில் யாரும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கவில்லே. பேசி முடித்ததும், அவரும் அதைப் பற்றிக் குடும்பத்தினரிடம் பிரஸ்தாபிக்காததிலிருந்து முக்கியமான நிகழ்ச்சியாக நாம் அதைக் கருதுவதற்கில்லே''

''ஆமாம்! பெரிய வியாபாரி; செல்வந்தர். டெலிபோனில் அவருக்கு எத்தனேயோ அழைப்புக்கள் வரும். மேலும், போனில் பேசிய பின் பதினைந்து நிமிஷங்கள் வரை குடும்பத்தினருடன் சகஜமாகத்தானே பேசிக் கொண்டிருந்திருக்கிறார்? அதற்குப் பின், சிறிது நேரம் உலாவி விட்டு வருவதாகக் கூறி வெளியே சென்றார். திரும்பவேயில்லே!''

''இன்றென்றைக் கவனித்தீர்களா, சந்தானகிருஷ்ணன்? அவர் வீட்டை விட்டுச் சென்ற அரை மணிக்கெல்லாம் இன்னொரு போன் வந்திருக்கிறது. முதலியாருக்காக, அவருடைய நண்பர் என்று சொல்லிக் கொண்டு ஒருவர் பேசினாராம். தாம் வெகு நேரம் சென்றுதான் வீட்டுக்குத் திரும்ப முடியும் என்றும், அதைக் குறித்து யாரும் கவலைப்பட வேண்டாம் என்றும் முதலியார் தெரிவிக்கச் சொன்னதாகக் கூறினாராம்! எப்படி இருக்கிறது? இதனால்தான் முதலியார் வீடு திரும்பாததைக் குறித்து யாரும் கவலைப் படவில்லை. மறுநாள் காலையில் நாம் போயல்லவா, அவர்களுக்குச் செய்தி தெரிவிக்க வேண்டியிருந்தது!''

''புத்திசாலி! ரொம்பவும் திட்டம் போட்டுத்தான் வேலை செய்திருக்கிறான்!''

''நாம் சிரமப் படுவதிலிருந்தே குற்ற வாளி புத்திசாலி என்பது புரிகிறது!...சார்! சின்னசாமியை 'லாக் - அப்'பில் வைத்துப் பதின்மூன்று நாட்களாகி விட்டன. இன்னும் இரண்டே நாட்கள்தான் நமக்கு அவகாசம் இருக்கிறது. அதற்குள் குற்றப் பத்திரிகை தயாரித்தாக வேண்டும்.''

''என்னமோ போங்கள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை!...உண்மையான குற்றவாளி யார் என்றே தீர்மானிக்க முடியவில்லை. ஒரே குழப்பமாயிருக்கிறது. சின்னசாமி குற்றவாளி இல்லையென்றால், நல்லபெருமாளையே குற்ற வாளியாக்கிவிட வேண்டியதுதான்!''

''ஹூம், அது சாத்தியமேயில்லை! சம்பவம் நடந்த சமயத்தில் அவர் பட்டணத்திலேயே இல்லை என்பதற்கு அநேக ருசுக்கள் இருக் கின்றன. போட் மெயிலில், 'பர்த்' ரிஸர்வ் செய்திருக்கிறார். தம் டைரியில் டிக்கட் நம்பர் குறித்து வைத்திருக்கிறார். திருச்சி ஹோட்டலில் அவர் தங்கியது, பின்னர் 'டிரங்'கில் செய்தி தெரிந்து கொண்டு காரில் புறப்பட்டது எல்லாம் உண்மை என்பது விசாரணையிலிருந்து புலனாகிறது.''

''...நல்லபெருமாள் திருச்சிக்கு டிக்கட் வாங்கியது, 'ரிஸர்வ்' செய்தது எல்லாம் உண்மையாக இருந்து, அவர் பிரயாணம் செய்யாமல் இருந்திருந்தால்...?''

''இந்தச் சந்தேகம் எனக்கும் தோன்றியது, சார்! ஆனால், உடனேயே அதற்குத் தீர்வும் கண்டு விட்டேன்!''

''எப்படி?''

''ரயில்வே ரிக்கார்டுகளிலிருந்துதான்! 'ரிஸர்வ்' செய்தவர்கள், குறிப்பிட்ட ரயில் புறப்படும் வரையில் வராவிட்டால், 'பிர யாணி வரவில்லை' என்று குறித்து வைக் கிறார்கள். இந்த மாதிரியான குறிப்பு எதுவும் ரிக்கார்டுகளில் காணவில்லை. 'அவர் பிர யாணம் செய்திருக்கத்தான் வேண்டும்' என்று சம்பந்தப்பட்ட ரயில்வே சிப்பந்திகள் தெரி விக்கிறார்கள்!''

சந்தானகிருஷ்ணன் உதட்டைப் பிதுக்கித் தம் கையாலாகாத்தனத்தை வெளிப்படுத்திக் கொண்டு விட்டார்.

''பேசாமல், சின்னசாமியை விடுதலை செய்து விட்டுப் புலன் விசாரணையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருங்கள்!''



''அவ்வளவுதான்! மேலதிகாரிகள் என்னைப் பிடுங்க ஆரம்பித்து விடுவார்கள்! இது சாதாரண வழக்கு அல்ல, வக்கீல் சார்! பெரிய விவகாரம். பொதுமக்கள் கவனித்துக் கொண்டே இருப்பார்கள். 'போலீஸ் இலாகா தூங்குகிறதா?' என்று பத்திரிகையில் தலை யங்கம் எழுதுவார்கள்! நாங்களும் எவ் வளவோ முயன்று பார்த்து விட்டோம். திருப்திகரமான பலன் எதுவும் கிடைக்க வில்லையே? ஒருவழியாகக் கேஸை முடித்து விட வேண்டியதுதான்.''

வக்கீல், இன்ஸ்பெக்டரை ஒரு தடவை முறைத்துப்பார்த்தார்.

''மிஸ்டர் ராஜாங்கம்! நெடுநாளைய அனு பவம் உடையவர் நீங்கள். உங்களுக்குத் தெரிந்த ஒரு விஷயத்தை மீண்டும் ஞாபகப் படுத்த விரும்புகிறேன். சட்டம், நீதிமன்றம், வழக்கறிஞர், போலீஸ் - இவை அவசியத் தேவை என்பதன் அடிப்படைக் கருத்து என்ன தெரியுமா? குற்றம் செய்த பலர் சட்டத்தின் பிடியிலிருந்து தப்பித்துக் கொண் டாலும், நிரபராதியான ஒருவன் - ஒரே ஒருவன் - தண்டனை அடையக் கூடாது என்பது தான். சரி, மீண்டும் நாளை சந்திப்போமா?''

ராஜாங்கம், தொங்கிய தலையில் தலைப் பாகையை வைத்துக்கொண்டு வெளியேறினார்.

''சின்னசாமி! கடைசியாக கேட்கிறேன். குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா...?''

''ஐயோ, எசமான்! என்னை விட்டுடுங்க, எனக்கு ஒண்ணும் தெரியாதுங்க.''

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி வியாதிகளுக்கு

### மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: காலை 9 முதல் 11 மணி வரை - மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| தஞ்சாவூர் | 17 காலை & மாலை | ராஜா சத்திரம் (ராஜா ரெஸ்ட் ஹவுஸ்) |
| பட்டுக்கோட்டை | 18 காலை | விசாரிக்கவும்: முருகன் மெடிகல் ஹால், பட்டுக்கோட்டை டிரக் ஹவுஸ் |
| திருத்துறைப்பூண்டி | 18 மாலை | டி. வி. சந்திரசேகரம் பிள்ளை மெடிகல் ஷாப் |
| மன்னார்குடி | 19 காலை | மீரா கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 19 மாலை | விசாரிக்கவும்: சுப்பய்யா மெடிகல் ஸ்டோர்ஸ், சிவ மெடிகல் ஸ்டோர்ஸ், சகுந்தலா பார்மஸி |
| நாகப்பட்டினம் | 20 காலை | என். டி. சௌந்தரராஜ பிள்ளை & சன் கெமிஸ்ட்ஸ் |
| நன்னிலம் | 20 மாலை | ஜி. எஸ். ராஜன் & ஆர். ஆர். சாமி ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மாயவரம் டவுன் | 21 காலை & மாலை | ராமகிருஷ்ண வைத்தியசாலை நெ. 1. கிருஷ்ணராயர் சந்து |
| சீர்காழி | 22 காலை | எஸ். நடராஜன், வாய்க்கால்கரைத் தெரு |
| விருத்தாசலம் | 22 மாலை | ஸ்ரீ நடராஜா மெடிகல் ஹால் |
| சிதம்பரம | 23 காலை & மாலை | ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி, கெமிஸ்ட்ஸ் |
| கடலூர் என். டி. | 24 காலை & மாலை | கமலா & கோ., கெமிஸ்ட்ஸ், புதுப்பாளையம் |
| பாண்டிச்சேரி | 25 காலை | ஆனந்தா எம்போரியம், ரூப்ளே தெரு |
| திண்டிவனம் | 25 மாலை | விஜயா மெடிகல் ஸ்டோர்ஸ் |
| விழுப்புரம் | 26 காலை & மாலை | வாசவி விஹார், கிளை, போர்டிங் & லாட்ஜிங் பாண்டி ரோடு |
| காஞ்சிபுரம் | 28 காலை & மாலை | 86, சாலைத் தெரு, பெரிய காஞ்சீபுர |
| வேலூர | 29 காலை & மாலை | வி.பி.சிவம் & கோ., கெமிஸ்ட்ஸ், லாங் பஜார் |
| ஜாம்ஷெட்பூர் | 15 காலை 9 to 11 மாலை 4 to 6 | ஸிடி கெமிஸ்ட்ஸ், சாக்சி. |
| கரக்பூர் | 4 காலை 9 to 11 மாலை 3 to 5 | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ் கெமிஸ்ட்ஸ் அண்டு ட்ரக்கிஸ்ட்ஸ் என். டி. ஈ. 155, ரயில்வே மார்க்கெட் |
| ஜபல்பூர் | 15 காலை 8 to 12 மாலை 3 to 5 16 காலை 8 to 12 | மாடர்ன் ஓட்டல் (அப்துலலாபாய & சன்ஸ் எதிரில்), ஆத்தெரிதேல். போன்: 346 |

❋

## ஜம்மி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்

சென்னை திருச்சிராப்பள்ளி கும்பகோணம்

''நான் நம்ப மாட்டேன்....''

''எனக்கு ரிவால்வரைப் புடிச்சே பழக்கம் இல்லீங்க, எசமான்! ஐயா அதை வைக்கிற இடமும் எனக்குத் தெரியா துங்க....''

''பின்னே?''

''ஐயாவே செய்துட்டாரோ, என்னவோ?''

''அவர்கள் இரண்டு பேருக்கும் ஏதாவது விரோதம் உண்டா?''

''வெளியிலே தெரிகிற அளவுக்கு இல்லீங்க....''

''அருவருக்கொருவர் மனக்கசப்பு இருந்திருக்கலாம். ஆனால் கொலை செய்வதற்கு அதை ஒரு முக்கியமான காரணமாகக் காட்ட முடியாது! நீ பணம் திருடப் போன சமயத்தில், தற்செயலாக அந்தப் பக்கம் வந்த ராசாக்கண்ணு முதலியார், பங்களாவுக்குள் நுழைந்திருக்கிறார். அவரைக் கண்டு பயந்து, ரிவால்வரை எடுத்துச் சுட்டு விட்டாய். பின், பழையபடி அக்கா வீட்டுக்குப் போய்த் தங்கி விட்டுப் பொழுது விடிந்ததும் வந்து கதவைத் திறந்திருக்கிறாய். பிறகு ஒன்றுமே தெரியாததைப் போல் போலீசுக்குப் போன் செய்தாய். அப்படித்தானே?'' என்று கேட்டார்.

சின்னசாமி கதறி விட்டான். ''என்மேல் அபாண்டமாகப் பழியைப் போடாதீங்க, எசமான்! நான் இந்தமாதிரி தப்புக் காரியம் செய்கிறவன் இல்லே....''

''உன்னைத் தவிர வேறு யார் பேரிலும் எங்களுக்குச் சந்தேகம் இல்லே. கிடைத்திருக்கும் சாட்சியங்களின்படி பார்த்தால் நீதான் குற்றவாளி....''

இன்ஸ்பெக்டர் காலில் விழுந்தான் சின்னசாமி. ''என்னைக் காப்பாற்றுங்க, எசமான்! நான் குற்றவாளி இல்லீங்க....''

''குற்றவாளி எப்பொழுதேனும் உண்மையை ஒப்புக் கொண்டதுண்டா?''

சின்னசாமியைத் திகைப்பில் ஆழ்த்தி விட்டு வெளியேறினார் ராஜாங்கம்.

அன்றைய தினம் குற்றப் பத்திரிகை தயாரிக்கக் கடைசி நாள். சின்னசாமியை 'லாக்-அப்'பில் வைத்து அன்றோடு பதினைந்து நாட்களாகின்றன. அவன்பேரில் குற்றத்தைச் சுமத்தாவிட்டால், அவனை விடுதலை செய்தாக வேண்டும்.

நல்லபெருமாளின் பங்களா வாசலில் போலீஸ் கார் வந்து நின்றது. பத்திரிகை படித்துக் கொண்டிருந்த நல்லபெருமாள், முகமலர்ச்சியுடன் அவர்களை வரவேற்றார்.

''வாருங்கள், வாருங்கள்...ஏதாவது புதிய தகவல் கிடைத்ததா?''

ராஜாங்கம் விறைப்பாக நின்று முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டார்.

''மிஸ்டர் நல்லபெருமாள்! நீங்கள் சற்றும் எதிர்பாராத ஒரு உத்தரவை நான் தெரிவிக்க வேண்டியிருக்கிறது....ராசாக்கண்ணு முதலியாரைக் கொன்ற குற்றத்துக்காக உங்களை நான் கைது செய்கிறேன்.''

''ஸார்! ஸார்!''....என்ன அக்கிரமமாக இருக்கிறது? பழியை என்மேல் மெதுவாகச் சுமத்துகிறீர்களே? நான்....''

''உஸ்! அநாவசியமாக வார்த்தைகளைக் கொட்ட வேண்டாம்!....உங்களால் தப்பித்துக் கொண்டு போக முடியாத அளவுக்கு நான் சாட்சியங்கள் சேகரித்து விட்டேன்!''

உடன் வந்திருந்த சத்தாவகிருஷ்ணமூர்த்தி போலீஸ் கான்ஸ்டபிள்களும் வியப்பின் எல்லையில் பிரமித்து நின்றார்கள். ஆனால், நல்லபெருமாளோ முதல் தாக்குதலுக்குப் பின் நிதானம் அடைந்து நிலைமையைச் சமாளிக்க முயன்று கொண்டிருந்தார்.

''நான் நம்ப மாட்டேன், ஸார்!''

''எதை?''

''உங்களுக்குச் சாட்சியம் கிடைத்திருக்கிறது என்பதை!''

''அப்படியானால் அந்தக் குற்றம் செய்தது நீங்கள்தானே!''

நல்லபெருமாள் தலையை ஆட்டிக்கொண்டே அருகிலிருந்த சோபாவில் அமர்ந்தார். ''இல்லை நான் அப்பொழுது ஊரிலேயே இல்லை.''

''இதுவரையில் அப்படித்தான் நம்பிக் கொண்டிருந்தேன்!''

''உண்மை அதுதான் ஸார்! திருச்சிக்கு டிக்கட் வாங்கி, 'ரிசர்வ்' செய்திருந்தேன். டிக்கட் நம்பரைக் கூட 'டைரி'யில் குறித்து வைத்திருக்கிறேன்.... ''வேண்டுமானால் பாருங்களேன்!'' என்று சொல்லியவண்ணம் டைரியை எடுத்து நீட்டினார் நல்லபெருமாள்

அதைப் பெற்றுக் கொண்ட ராஜாங்கம், பக்கங்களைப் புரட்டினார். திடீரென்று அவர் முகம் மலர்ந்தது. டைரியைத் தம் கால் சராய்ப் பைக்குள் போட்டுக் கொண்டார்.

''மிஸ்டர் நல்லபெருமாள்! அன்றைய தினம் போட்மெயிலில் நீங்கள் திருச்சி வரை, எங்குமே இறங்காமல்தானே சென்றீர்கள்?''

''ஆமாம்.''

''திருச்சியில் இறங்கி?....''

''போர்ட்டரிடம் பெட்டி படுக்கையைத் தூக்கிக் கொள்ளச் சொன்னேன். இருவருமாக வெளியே வந்தோம்.''

''இருங்கள். எந்த வழியாக வந்தீர்கள்?''

''சுரங்கப் பாதை வழியாகத்தான்!....''

''உம்!''

''முதல் பிளாட்பாரத்தில், மேல் வகுப்புப் பிரயாணிகள் வெளியே போவதற்கென்று அமைக்கப்பட்டுள்ள வாசல் வழியே வெளியேறினோம்.''

''அப்பொழுது அந்த வாசலில் கூட்டம் நிறைய இருந்ததா?''

''அப்படிச் சொல்வதற்கில்லை....''

''அங்கே டிக்கட் பரிசோதகரும் இன்னொரு பிரயாணியும் வாக்குவாதம் செய்து கொண்டிருந்தது உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியாது!''

''அதாவது, நீங்கள் டிக்கட்டைக் கொடுத்து விட்டு வெளியேறும் வரை வாக்குவாதம் எதுவும் நிகழவில்லை என்கிறீர்கள்.''

''ஆமாம்!''

கீழ் உதட்டை, ரத்தம் தெறிக்கும் அளவுக்குக் கடித்துக் கொண்டார், ராஜாங்கம்.

''நீங்கள் சொன்னது அத்தனையும் பொய்!''

''இன்ஸ்பெக்டர் ஸார்! இந்தமாதிரியான கட்டுக் கதைகளை அவிழ்த்து நீங்கள் என்னைப் பயமுறுத்த முடியாது! தெரியுமா?''

''நீங்களும் இனி திரும்பத் திரும்ப அந்தப் பொய்யையே சொல்லிக் கொண்டிருக்க முடியாது! நீங்கள் மெயிலில் போவதுபோல்

போக்குக் காட்டி விட்டுப் பேராமலே இருந்து விட்டீர்கள். இட்டபிட்டபடி உங்கள் 'வேலை'யை முடித்து விட்டுப் பின், வாடகைக் காரில் திருச்சிக்குப் பறந்தீர்கள். இல்லையா?''

நல்லபெருமாள் பலமாகச் சிரித்தார்.

''சார், உங்கள் கற்பனையை நான் மிகவும் ரசிக்கிறேன்! ஆனால், பாவம், உண்மையான குற்றவாளியைக் கண்டுபிடிக்க முடியாமல் தவிப்பது கண்டு அனுதாபப் படுகிறேன்!''

''வாயை மூடுங்கள்!.....எது கற்பனை, நல்ல பெருமாள்? இதோ, இந்த டைரியில் நீங்கள் சென்ற காரின் நம்பரை மிகச் சிறிய எழுத்தில் எழுதி வைத்திருக்கிறீர்கள் தெரியுமா?''

அதைக்கேட்டு நல்லபெருமாள் திகைத்தார்:

''இல்லை. அந்தக் காரின் நம்பரை நான் குறித்து வைத்துக் கொள்ளவே யில்லை.''

ராஜாங்கம் ஏளனமாகச் சிரித்தார். ''உங்களுக்கு ஞாபக மறதி அதிகம் என நினைக்கிறேன்!.....அந்தக் காரின் டிரைவர் இப்போது 'லாக்-அப்'பில் இருக்கிறான், மிஸ்டர் நல்ல பெருமாள்!....விஷயம் முழுதும் சொல்லி விட்டான். நீங்கள் எவ்வளவோ முன் ஜாக்கிரதையாகச் செய்ததெல்லாம் தவிடுபொடியாகி விட்டது!.....உங்கள் டைரியில் கார் நம்பர் மட்டும் இல்லாவிட்டால் என்னால் துப்புத் துலக்கி யிருக்கவே முடியாது!''

நல்லபெருமாளின் நெஞ்சில் பனி உறைந்தது. பேச வகையில்லாமல் அவர் கல்லாய்ச் சமைந்து விட்டார்.

''என்ன 'கெட்ட' பெருமாள்!....வழக்கிலுள்ள மற்றச் சிக்கல்களையும் நீங்களே அவிழ்க்கிறீர்களா? அல்லது, நானே கண்டுபிடித்து விட வேண்டுமா?''

நல்லபெருமாளின் கண்களில் நீர் சுரந்தது. பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அனைவரும்—ராஜாங்கம் உள்பட — வியப்பில் இமைக்க மறந்து நின்றனர்.

''ஆமாம், ஸார்! நான்தான் முதலியாரைச் சுட்டுக் கொன்றேன். பேராசை தான் அதற்குக் காரணம்! என் பங்களாவின் கீழ்ப் புறத்திலுள்ள கதவை உட்புறம், வெளிப்புறம் இரண்டு பக்கங்களிலிருந்தும் பூட்டித் திறக்கலாம். அந்தச் சாவி என்னிடம் இருந்தது. சின்னசாமி அக்கா வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றதும் நான் கீழ்ப்புறக் கதவு வழியாக மெதுவாக உள்ளே சென்றேன்.

''முதலியார் வீட்டுக்கு இருமுறை நான் தான் போன் பண்ணினேன். பங்கு மார்க்கெட்டில் எங்கள் பங்கின் விலை அடியோடு வீழ்ந்து விட்டது என்று சொல்லி அதைப் பற்றி ஆலோசிக்க என் வீட்டுக்கு அழைத்தேன். அவர் குடும்பத்தினர் கலவரம் அடைந்துவிடப் போகிறார்களே என்று கருதி, உலாவச் செல்வதாகச் சொல்லிவிட்டு வரும்படி ஆலோசனை கூறினேன்.

''அரைமணிக்குள் என் விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டு, கீழ்ப்புறக் கதவைப் பூட்டிக் கொண்டு டாக்ஸியில் திருச்சிக்குப் போனேன், ஏறக்குறையப் பொழுது விடியும் சமயத்தில். ஆனால், டாக்ஸி டிரைவர் என்னைத் திருச்சி ஜங்ஷனில்தானே இறக்கினான்? நான் நெல்லூர் (?) ஊருக்குச் சென்ற விவரம் அவனுக்குத் தெரியாதே? திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸைத் திருச்சியில் பிடிக்க வேண்டும் என்றல்லவா அவனிடம்சொல்லியிருந்தேன்?''

ராஜாங்கம் குதூகலமாகச் சிரித்தார்.

''நீங்கள் உண்மையிலேயே நல்லபெருமாள் தான்! ஒரு அனுமானத்தின் பேரில் உங்களை மிரட்டினேன். எல்லாவற்றையும் நீங்கள் சொல்லி விட்டீர்கள். இனிமேல்தான் நான் அந்த டாக்ஸியையும் டிரைவரையும் கண்டு பிடித்தாக வேண்டும்!''

சந்தான கிருஷ்ணன் குறுக்கிட்டார்: ''கார் நம்பர்தான் டைரியில் இருக்கிறது என்று கூறினீர்களே?''

''பொய்!...டிக்கட் நம்பர் மட்டும்தான் என்னிடம் இருக்கிறது...''

''சார், சார்...'' என்று அலறினார், நல்ல பெருமாள்.

''இப்பொழுது உங்களை உண்மையிலேயே கைது செய்யப் போகிறேன்!''

''மிஸ்டர் நாயுடு! நல்லபெருமாளின் பேரில், தகுந்த ஆதாரங்களுடன், குற்றப் பத்திரிகை தயாரித்து விட்டோம். எனக்கு மட்டும் ஒரு சந்தேகம்'' என்று இழுத்தாற் போல் கூறினார் சந்தான கிருஷ்ணன்.

''கேளுங்கள்.''

''பத்துப் பதினைந்து நாட்களுக்கு முன்னதாகவே நல்லபெருமாளின்மேல் நமக்குச் சந்தேகம் வந்தது. அப்பொழுதே டாக்ஸிக் காரர்களிடம் விசாரணை செய்தீர்கள். ஆனால், எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை என்றீர்கள். அப்படியிருக்க, நல்லபெருமாள் திருச்சியில் ரயிலிலிருந்து இறங்கவில்லை என்பதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?''

''சின்னசாமியைக் கடைசியாகப் பார்த்து விட்டு வந்தபின் ஒரு யோசனை உதயமாயிற்று. திருச்சி போலீசுக்கு போன் செய்து ஒருசெய்தி அறிய முயன்றேன். பதில் கிடைத்தவுடன், நல்லபெருமாளிடம் நாடகமாடத் தீர்மானித்தேன். அதிருஷ்டவசமாக எனக்கு வெற்றி கிடைத்து விட்டது!''

''இன்னும் நீங்கள் என் சந்தேகத்தைத் தீர்க்கவில்லையே!''

''நல்லபெருமாள் திருச்சியில் இறங்காதது தானே?...சேகரித்த டிக்கட்டுகளின் எண்களைக் குறித்துக் கொள்ளும் ரயில்வே ரிஜிஸ்தரில், நல்லபெருமாளின் டைரியில் இருந்த டிக்கட் நம்பர் இல்லை!''

''பேஷ்!''

''அவரோ, டிக்கட் பரிசோதகரிடம் டிக்கட்டைக் கொடுத்துவிட்டு வெளியே வந்ததாகச் சொல்கிறார். அப்படி டிக்கட்டைக் கொடுத்திருந்தால், குறிப்பிட்ட ரிஜிஸ்தரில் அந்த நம்பர் இருக்க வேண்டுமே?''

சந்தான கிருஷ்ணன் இன்ஸ்பெக்டரின் கையைக் குலுக்கினார். ''என் பாராட்டுகள், மிஸ்டர் நாயுடு! நல்லபெருமாள் எவ்வளவோ முன்ஜாக்கிரதையாக ஒவ்வொரு காரியத்தையும் செய்திருந்தார். ஆனால், ஒரு சிறு விஷயத்தில்...''

''...ஏமாந்து விட்டார்!'' வாய் விட்டுச் சிரித்தார், ராஜாங்கம். ஆம், நிரபராதியைக் குற்றவாளியாக்கித் தண்டனை வாங்கிக் கொடுக்கவில்லை என்ற மனநிறைவு அவர் சிரிப்பில் மணந்தது.

Printed and Published by R Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

காலையில் இருக்கும் புதுமலர்ச்சி
நாள் முழுவதும் இருக்க

# பாண்ட்ஸ்

ட்ரீம்ப்ளவர் டால்க்




நாள் முழுவதும் புதுமலர்ச்சியுடனும் குளுமையுடனும் இருக்க, ஸ்நானத்திற்குப்பின் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள்!

பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் இன்பகரமான பரிமளமுள்ளது; மற்றும் வியர்வையை உறுஞ்சும் தன்மையுடையது. அது உங்களுக்கு நாள் முழுவதும் நீடித்திருக்கும் புத்துணர்ச்சியை அளிக்கும்!

செஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

Registration No. M
Registered as a Newspaper in Ceylon